ஓம்

தத் ஸத் பிரஹ்மணே நம:



# ஜீவன் முக்தி விவேகம்



மூலமும் உரையும்

இஃது

தஞ்சை பிரஹ்ம நிஷ்ட பண்டித ஸ்ரீலஸ்ரீ

பிரஹ்மாநந்த சுவாமிகளால்

வடமொழிக்கு நேராக

மொழி பெயர்க்கப்பட்டு

தஞ்சை

சமஸ்கிருத பண்டிதர் பிரஹ்மஸ்ரீ

சுப்பிரமணிய சாஸ்திரிகள்

அவர்களால் பரிசோதிக்கப்பட்டு

தஞ்சை ஸ்ரீசங்கரவிலாஸ சாரதாமந்திரம்மானேஜிங் டிரஸ்டியும்

பென்ஷன் சப் ரிஜிஸ்திராருமாகிய

C- நாகாசுவாமி சிர்கே றவ் அவர்களால்

தஞ்சை

ஸ்ரீசங்கா விலாச சாரதா மந்திர

அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப் பெற்றது.



கலி ௫௰௩௭ யுவ௵ மார்கழிமீ

இதன் விலை] 1936 [ரூ. 1-12-0

॥ ௐ ॥

ஸ்ரீ சற்குருப்யோ நம:



தஞ்சை பிரஹ்மநிஷ்ட பண்டித
ஸ்ரீ ல ஸ்ரீ பிரஹ்மாநந்த சுவாமிகள்

# முகவுரை.

—:o:—

இந்தவுலகில் மானிடஜன்மம் எடுத்தவர் தம் முன்னேற்றத் துக்காக சதுர்வித புருஷார்த்தங்களில் முக்கியமான மோக்ஷத்தை முன்னோக்கமாய் வைக்கவேண்டுமென்பது சாஸ்த்ர ஸித்தாந்தம் எனக்கொள்ளாதாரில்லை. ஸ்ரீலஸ்ரீ பிரஹ்மாநந்தஸ்வாமிகள் இந்த மொழி பெயர்ப்பு மூலமாய் வேத சாஸ்திர புராணங்களில் அடங் கியதும் மோக்ஷஸாதநமுமான ஜீவன்முக்தி விவேகம் எனப்பெய ருடன், ஸ்ரீ வித்யாரண்ய முனிவர் ஸம்ஸ்கிருத பாஷையில் எழுதி யருளிய மஹாகிரந்தத்தைத்தமிழ் அறிந்தவர் உணரும்படி மிகவுப காரமாகச்செய்திருப்பது என்றும் மறக்கத்தகாதது. ஜீவன்முக்தி, விதேகமுக்தி ஆகிய இரண்டுக்குமுள்ளபேதத்தை விளக்கி, அதற்கு ஸாதநமாய் அமைந்துள்ள விவிதிஷாஸந்யாஸம், வித்வத்ஸந்யாஸம் இரண்டும் எவ்வாறான பேதம் வாய்ந்தது என்பதையும், ஸந்யாஸா ச்ரம தர்மங்களையும் இந்நூலில் ஸ்ரீ வித்யாரண்யசரணர்கள் யோக வாஸிஷ்டத்தில் ஸ்ரீ வஸிஷ்ட முனிவர் ஸ்ரீ ராமருக்கு உபதேசம் செய்திருப்பதை மேற்கோள்களாகக் காட்டி விவரித்திருப்பது யாவருக்கும் தெரிந்ததே. சாஸ்திர ஸம்பிரதாயமாய் எழுதிய இந் நூலை ஸ்ரீலஸ்ரீ ஸ்வாமிகள் தமிழருக்குக்கிட்டும்படி தமிழில் மொழி பெயர்த்ததை அவர்களிச்சைப்படி ஸ்ரீ சங்கர விலாஸ் சாரதாமந்திர த்தின் டிரஸ்டிகள் பிரசுரம் செய்து உபகரித்திருப்பது நமது நாட்டிற்குப் பேருதவியாகும்.

பண்டித S. சுப்பிரமணிய சாஸ்திரி.

॥ ओम् ॥

உ

சிவமயம்.

இயற்றியனார்

சிதம்பரம்

பண்டித சித. சங்கத்து நாராயண சுவாமிகள்

# சிறப்புப்பாயிரம்.

உலகபுரிந்த வெருபெருந்தவத்தின்
பயனெனத்தோன்றி, நயனறுமதம்பல
நிலவாவகையே நிவப்புறுமறையின்
உட்பொருளாகிய வோன்றேபொருளெனுங்
கொள்கையைநாட்டிய குருபரசங்கர
பகவற்பாதரின் பளகறுமரபிடைத்
தோன்றியமுனிவரன் ஆன்றவறிவினன்
வித்தையனைத்து மொத்துறையுளத்தினன்
அதனால், வித்தியாரணிய மெய்த்தவனெனப்பெயர்
படைத்தநற்குரிசில் படைத்தநூல்பலவே,
அவற்றுள், சீவன்முத்தரினிலையினைத்தெரிதர
விளக்கியெழுதிய வளக்கரும்பெருமை
வேய்தருசீவன் முக்திவிவேகம்
எனும்பெயர்படைத்த வெழிலமர்பனுவலு
ஒன்றேயதுவு நின்றதுவடமொழி
அதனாலதனை யளிநிறையுளங்கொடு
தமிழ்மொழிவழங்குந் தகவினரெவருஞ்
சீவன்முக்தரின் திறத்தினைத்தெளிதரத்
தமிழ்தனிற்கொணர்ந்தனன் அமிழ்துறழ்காவிரி
தழுவியநலம்பெறீஇ விழுமியநாடெனப்
புலவரும் பிறரும் புகழ்தருஞ்சோழ
வளநாடதனில் வளவர்தம்பதியாய்

ஏழிசைபழுத்தநல் லின்சுவைத்தும்பிய
மாளிகைத்தெருவும் மறைதனைக்கிளியு
பூவையுமடுத்துப் போம்வழியெல்லாம்
தம்மொழிமறந்து தழைதரும்மறையையே
யியம்புறப்புரியும் எழின்மறைக்கிடையும்
ஒன்றேபொருளென் றுணர்ந்துளதின்புறாஉங்
குன்றேயனைய குணத்தவருறையுளும்
வில்லுவாளும் வேலுங்கோலும்
அல்லதுபெருளென வறிதராமறவர்
வாழ்தருவீதியும் வறியவர்புகினும்
தனபதியெனச்செயுந் தனமிகுவணிகர்
அணிதரவாழும் மணிகெழுமருகும்
உழுதொழிலாள ருவந்துறையிடங்களு
தாய்நாடென்றுந் தழைவுறவிளையும்
பஞ்சினிழைகொடு பல்வேறுநாட்டினர்
கண்டுமயங்கிய வொண்டுகிலரவுரி
யெனத்தனிநெய்குந ரிருக்கையும்பலபல
கைம்மாண்வினைஞர் களித்துறையிடங்களும்
வாய்தரப்பெறீஇச் சேயிடைத்திகழ்தரும
வேற்றுநாட்டு வளத்தினைச்சிறிதும்
ஏற்றுநிற்கு மிழிதகவிலதாய்
மாலவனியமமோ சூலிதன்கோட்டமோ
பலவெனக்கணித்துப் பகர்தரவரியதாய்
எங்குமவர்தங் கோயிலேயிலதறப்
பெற்றுத்தம்புடை யுற்றவரன்பினை
விளக் தறுந்தஞ்சை விளங்கியவந்தவன்
போரெனிற்புகன்று பொருளெனவெவற்றையும்
உலகிடைமதியா வொருபெருமன்னவர்
குலத்திடையின்பங் குதிகொளநாளும்
வந்தவரித்த வந்தணன்தீஞ்சுவைச்
செந்தமிழ்நிறைந்த சிந்தையன்தெவிட்டா

வடமொழிக் கடலினை மடுத்தநந்தமிழ்முனி
யளிதருமுளத்தினன் றெளிதருபுலத்தினன்
வீறியநடையின னாறியவுளத்தினன்
தனக்கொன்றயலதாய் மனக்கொளாவுணர்வினன்
உள்ளமுமொழியு முறலருப்பொருளினைத்
தானெனவுணரிய தகவினரெவர்க்கும்
அருள்புரிகுருபரன் அருந்தமிழதனிடை,
இந்தியாரியமெனு மிருமொழியினும்
வாய்தருநூல்பல ஆய்தரப்பெயர்த்தே
வழங்கியபுலவன் வளிநிலைதெரித்தோன்
விண்டுவெனும்பெயர் மெய்த்தவனடியிணை
உறைதருமுளத்தினன் உரையுணர்விறந்து
நிலைஇயதானாய் நிலைதருநிட்டையன்
முற்றத்துறந்த முனிவரனிவனென
நற்றவர்பலரு நாநிறைதரவே
புகழ்தரவாழ்ந்த பொருவறுநிலையினன்
குலத்தவர்மகிழ்ந்து கோதறவழங்கிய
குப்புச்சாமி யெனும்பெயர்க்கோமான்
வரமிகுதுறவிடைப் பிரமாநந்தன்
எனப்பெயர்கொண்டிங் கிலகியோனாகிய
ஒப்பருஞான ஒளியினன்றானே.

इत्थम्

**चिद. नारायणस्वामी,**

ज्योत्याश्रमम्,

चिदम्बरम्.

---



ௐ

# ஜீவந்முக்தி விவேகம்.

(மொழிபெயர்ப்பு.)

## மங்களம்.

### ஸ்ரீ கணேசர் துதி.

போதக பூரண புங்கவனே புண்ணியர் போற்றுறு துங்கவனே
பாதக வல்வினை மாய்ந்திடவே பாதம தென்சிரஞ் சூடுவையால்
சாதக நல்வினை யொன்றுமிலேன் றண்ணருள் செய்தெனைத் தாங்கிடுவாய்
போதக வாகன புந்தியிலே போதமுந் தோன்றிடப் போந்தருளே. (க)

### ஸ்ரீ ஸரஸ்வதி துதி.

பரைமுத லுல்வாக் காகிப் பங்கயன் முதலோர் தேகக்
தாரமுடன் வைகியெல்லாச் சத்தமும் பொருளுமாகிப்
பரவித போகமீந்து பல்கலை யோடு மெய்ம்மைப்
பரகதி யளிக்கும் வாணி பதமலர்ப் போற்றி வாழ்வாம். (உ)

### ஸ்ரீ சங்கர பகவற்பாதர் துதி.

பெண்ணசைநீத் துயர்ந்தகுணப் பெருந்தவரே
பெறற்குரியா ருண்மை ஞானம்
நிண்ணயமீ தென் றுணர்த்தத் தென்முகனாய்
நீள்வடத்தே நிட்டை செய்தான்
மண்ணினுந்தான் றுரியநிலை வகித்தயனு
மண்டாரா தியர்க்கு மீந்தான்
பெண்ணுமையாள் பங்குடையான் பெருங்கருணைப்
பெற்றியினைப் பேசலாமே. (௩)

### ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமிகள் துதி.

வேதபா டியாதி செய்து வித்தியா ரண்ய னென்ன
வேதவி யாதன் றன்னை மெய்ப்பெயர் பெற்ற மேலோன்
மேதகு ஜீவந் முக்தி மெய்ச்சுக மதுப வித்தோன்
ஏதமில் பதமி ரண்டு மெய்ம்முடிக் கணியாக் கொள்வாம். (௪)

## ஸ்ரீ ஸத்குரு துதி.

சத்தாயுஞ் சுகமாயுஞ் சாட்சியாயுஞ்
சுமமாயு நிறைவாயுஞ் சாந்த மாயுஞ்
சித்தாயு நிறைவாயுஞ் சிவமே மாயுஞ்
செப்பரிய சமாதிக் கெட்டா ஞான
வித்தாயும் விஷ்ணுவெனும் பெயர தாயும்
விளங்குமருட் குரவனிரு சரணப் போதை
எத்தாய மிடத்துமினிப் பிறவா வண்ண
மெப்போதும் பணிந்திடருக் கிடரை யீவாம். (ரு)

## ஸ்ரீ நடேசர் துதி.

பூரத்த வல்வினை பாறிடவே பாதக னெமெனை யாண்டருள்வாய்
மாதவர் வானவர் சூழ்ந்திடவே வாழிய வென்றவர் கூறிடவே
மாதுமை யாளவள் மாலுறவே மன்றினி னன்னட மாடிடுவோய்
காதினி னோர்குழை வீழ்ந்திடவே கண்டது நாகொடு சூடிடுவோய். ()

## ஸ்ரீ சிவகாமி துதி.

காரணி சுந்தரி கன்னிகையே கண்ணுத லின்புறு பெண்ணுமையே
காரணி கண்டனெர் பங்கினளே கார்நிற மேவுறு மேனியளே
நாரணி நஞ்சிவ காமியுனை நாடின னின்புறச் செய்குவையே
பூரணி நீயருள் புரிந்திடினே பூரண னுருவன் பொய்யலவே. (எ)

## பிரஹ்மவித்யா ஸ்துதி.

துன்பம தெம்மை விட்டுத் தொலைந்திடு மாறே யன்றி
இன்பமு மெம்மை விட்டிங் கிழிந்திடா தெய்தச் செய்யும்
அன்பினின் மிக்க தூய ராயிரம் பேரின் மேலாம்
நன்குறு பிரஹ்ம வித்தை நாந்தொழற் பால தாகும். (அ)

## ஸ்ரீ ஸ்கந்தர் துதி.

கந்தனைக் குமரவேளைக் கடப்பமா மாலைசூடிச்
செந்திலிற் கடலோ ரத்துச் சிறப்புறு பதியில் வாழும்
மைந்தனைத் தேவ சேனை வள்ளிதம் பதியைத் தேவர்
சிந்தனை தனக்கு மெட்டாத் தேவனைச் சிந்தை செய்வாம். (கூ)

## நூலாசிரியர் பெயர் முதலியன.

வித்தியா ரண்யன் செய்த மெய்த்தகு விமல ஜீவந்
முத்தி விவேகமென் னும் மேன்மையா ரிந்த நூலைத்
தத்துவ முதனை யோர்ந்தோர் தன்னிலே ரமிக்கு மாறு
தத்துவப் பிரஹ்மா நந்தன் சாற்றினன் றமிழின் மாதோ. (௧௦)

ஓம் தத்ஸத் பிரஹ்மணே நம:

# ஜீவந்முக்தி விவேகம்.

---

## முதலாவது ஜீவந்முக்திப் பிரமாணப் பிரகரணம்.

### மங்கலம்.

यस्य निः श्वसितं वेदा यो वेदेभ्योऽखिलं जगत् ।
निर्ममे तमहं वन्दे विद्यातीर्थमहेश्वरम् ॥ १ ॥

எவனுடைய மூச்சுக்காற்று வேதங்களோ எவன் வேதங்களால் எல்லா ஜகத்தையும் படைத்தானோ அப்படிப்பட்ட வித்தியா தீர்த்தனென மகேசுவரனை வணங்குகின்றேன். (௧)

वक्ष्ये विविदिषान्यासं विद्वन्न्यासं च भेदतः ।
हेतू विदेहमुक्तेश्च जीवन्मुक्तेश्च तौ क्रमात् ॥ २ ॥

வேறுவேறாக விவிதிஷா சந்நியாசத்தையும் வித்வச் சந்நியாசத்தையும் கூறுகின்றேன். அவ்விரண்டும் முறையே விதேகமுக்திக்கும் ஜீவந்முக்திக்கும் ஏதுக்களாம். (௨)

संन्यासहेतुर्वैराग्यं यदहर्विरजेत्तदा ।
प्रव्रजेदिति वेदोक्तेस्तद्भेदस्तु पुराणगः ॥ ३ ॥

"எந்தப்பகல் விரக்தியுண்டாயிற்றோ அந்தப்பகலே வீட்டை விட்டு செல்லுக (சந்நியாசஞ் செய்க)" என்று வேதங்கூறியிருத்தலால் சந்நியாசத்திற்கு ஏது வைராக்கியமாம். அதன் பேதமோ புராணத்திலுள்ளதாம். (௩)

विरक्तिर्द्विविधा प्रोक्ता तीव्रा तीव्रतरेति च ।
सत्यामेव तु तीव्रायां न्यसेद्योगी कुटीचके ॥ ४ ॥

விரக்தியானது தீவிரம் தீவிரதர மென்று இருவகையாகச் சொல்லப்பட்டுள்ளது. தீவிரவைராக்கியமிருக்குமாயின் யோகி குடீசகசந்நியாசஞ் செய்து கொள்க. (௪)

शक्तो बहूदके तीव्रतरायां हंससंज्ञिते ।
मुमुक्षुः परमहंसे साक्षाद्विज्ञानसाधने ॥ ५ ॥

சக்த(யாத்திரை செய்யவலியுள்ளவ)னயின் பகூதக (வெகூதக)ஞ்செய்துகொள்க. தீவிரதர வைராக்கியமிருக்குமாயின் ஹம்ஸ சந்நியாசத்தினைச் செய்துகொள்க. முமுக்ஷுவானவன் ஸாக்ஷாத் விஞ்ஞானத்திற்குச் சாதனமான பரமஹம்ஸ சந்நியாசஞ் செய்துகொள்க. (ரு)

पुत्रदारधनादीनां नाशे तात्कालिकी मतिः ।
धिक्संसारमितीदृक्स्याद्विरक्तेर्मन्दता हि सा ॥ ६ ॥

புத்திரதாரதநாதிகள் நசித்தபோது அக்காலத்தில் சை! சதென்ன ஸம்ஸார மென்று இத்தன்மையாயுண்டாகும் புத்தி யாதோ அதுவே விரக்தியின் மந்தத்தன்மையாம். (சு)

अस्मिञ्जन्मनि मा भूवन्पुत्रदारादयो मम ।
इति या सुस्थिरा बुद्धिः सा वैराग्यस्य तीव्रता ॥ ७ ॥

இந்த ஜந்மத்தில் எனக்குப் புத்திரதாராதிகள் இருக்கலாகாதென்னும் நன்னிலையான (மிக ஸ்திரமான) புத்தி எதுவோ அது வைராக்கியத்தின் தீவிரத்தன்மையாம். (எ)

पुनरावृत्तिसहितो लोको मे मास्तु कश्चन ।
इति तीव्रतरत्वं स्यान्मन्दे न्यासो न कोऽपि हि ॥ ८ ॥

மீண்டும் திரும்புதலை யுடையதான உலகம் யாதும் எனக்கிருக்கலாகாதென்பது தீவிரதரத்தன்மையாம். மந்தத்தில் எவ்வகைச் சந்நியாசமுமில்லை. (அ)

यात्राद्यशक्तिशक्तिभ्यां तीव्रे न्यासद्वयं भवेत् ।
कुटीचको बहूदश्चेत्युभावेतौ त्रिदण्डिनौ ॥ ९ ॥

யாத்திரைமுதலியவற்றில் சக்தியுடைமை சக்தியின்மைகளால் தீவிரத்தில் குடீசகம் வெகூதகமென்று சந்நியாசமிரண்டுண்டு. இவ்விரு சந்நியாசிகளும் திரிதண்டிகளாவர் (முத்தண்டமுடையவராவர்)

द्वयं तीव्रतरे ब्रह्मलोकमोक्षविभेदतः ।
तल्लोके तत्त्वविद्धंसो लोकेऽस्मिन्परहंसकः ॥ १० ॥

தீவிரதரத்தில் பிரஹ்மலோகம் மோக்ஷமென்பவற்றின் இச்சா பேதத்தால் இரண்டுண்டு. (அவருள்) ஹம்ஸனுக்கு அந்த (பிரஹ்ம)லோகத்தில் தத்துவ ஞாநமுண்டாம். பரமஹம்ஸனுக்கு இந்த லோகத்தில் தத்துவஞாநமுண்டாம். (௧௦)

एतेषां तु समाचाराः प्रोक्ताः पाराशरस्मृतौ ।
व्याख्यानेऽस्माभिरत्रायं परहंसो विविच्यते ॥ ११ ॥

இவர்களது செவ்வையான ஆசாரங்கள் பராசரஸ்மிருதியில் வியாக்கியானத்தில் எம்மால் சொல்லப்பட்டிருக்கின்றன. இங்கு (இந்நூலில்) இப்பரமஹம்ஸன் விவேசிக்கப்படுகின்றான். (௧௧)

जिज्ञासुर्ज्ञानवांश्चेति परहंसो द्विधा मतः ।
प्राहुर्ज्ञानाय जिज्ञासोर्न्यासं वाजसनेयिनः ॥ १२ ॥

பரமஹம்ஸன் ஜிஞ்ஞாசு (ஞான விருப்புடையோன்) என்றும் ஞானவான் என்றும் இருவகையாக மதிக்கப்படுகின்றான். ஜிஞ்ஞாசுவின் சந்நியாஸம் ஞானத்தின் பொருட்டாமென்று *வாஜஸநேயிகள் கூறுவர். (௧௨)

प्रव्राजिनो लोकमेतमिच्छन्तः प्रव्रजन्ति हि ।
एतस्यार्थं तु गद्येन वक्ष्ये मन्दविबुद्धये ॥ १३ ॥

சந்நியசிப்பவர் இவ்வுலகத்தை (பிரகிருதமான ஆத்மாவை) இச்சித்தவர்களாய்ச் சந்நியாசிக்கின்றனர். இதன் பொருள் மந்த புத்தியுடையோர் பொருட்டுக் கத்திய(வசநரூப)மாகச் சொல்லப் படுகின்றது. (௧௩)

லோகம் ஆத்மலோகம் அநாத்மலோகம் என்று இருவகைத்தாம். அவற்றுள், ஆத்மலோகம் மூவகையாமாறு பிருகதாரணியத்தின் மூன்றாவது அத்தியாயத்தில்:—

* சுக்கில யஜுர்வேதத்தின் காண்வாதி சாகையுடையோர்.

"अथ त्रयो वाव लोका मनुष्यलोकः पितृलोको देवलोक इति । सोऽयं मनुष्यलोकः पुत्रेणैव जय्यो नान्येन कर्मणा कर्मणा पितृलोको विद्यया देवलोकः॥

இனி மநுஷ்யலோகம், பிதிருலோகம், தேவலோகம் என்று லோகம் மூன்றும். அந்த இம் மநுஷ்யலோகம் புத்திரனுலேயே ஜயிக்கத்தக்கதாம். (நித்தியாதி) வேறு கர்மத்தினுலன்று. பிதிருலோகம் கர்மத்தினுலாம். தேவலோகம் வித்தை (தகராதியுபாசனை)யினுலாம்" என்று கேட்கப்படுகின்றது. ஆத்மலோகமும் அவ்விடத்திற்றனே—

"यो ह वा अस्माल्लोकात्स्वं लोकमदृष्ट्वा प्रैति स एनमविदितो न भुनक्ति॥

எவன் இந்த (மாம்ஸாதி பிண்டலக்ஷணமுள்ள) லோகத்தினின்றும் (பரமாத்மாவெனப்படும்) சுவ (தன்து) லோகத்தைக்காணுது (யான் பிரஹ்மம் என்று அறியாது) இறக்கின்றுனே அது (சுவலோகமாகிய பரமாத்மா). அறியப்படாததாய் (அவித்தையினுல் மறைக்கப்பட்டதாய்) இவனை (அறியாதவனுய் மரித்தவனை) (சோக மோகாதி தோஷங்களை நீக்குதலால்) இரக்ஷிக்கிறதில்லை. பிரசித்தம்" என்றும்,—

"आत्मानमेव लोकमुपासीत स य आत्मानमेव लोकमुपास्ते न हास्य कर्म क्षीयते॥

எவன் ஆத்மலோகத்தையே உபாசிக்கின்றுனே அவன் ஆத்மலோகத்தையே அடைகிறுன். இவனுடைய (உபாசகனுடைய) நிச்சயிக்கப்பட்ட கர்மம் (ஒரு பயனைத்தருதலால்) குறைந்து போகிறதில்லை. (விரும்பிய எல்லாப்பயனையும் மோக்ஷத்தினையும் தருகின்றது" என்பது பொருள்.) ஆருவது அத்தியாயத்திலும்,

"किमर्थं वयमध्येष्यामहे किमर्थं वयं यक्ष्यामहे किं प्रजया करिष्यामो येषां नोऽयमात्माऽयं लोक इति । ये प्रजामीशिरे ते श्मशानानि भेजिरे ये प्रजा नेशिरे तेऽमृतत्वं हि भेजिरे॥

எந்த எங்களுக்கு இவ்வாத்மாவாகிய இந்த லோகமுளதோ அப்படிப்பட்ட யாங்கள் எதன்பொருட்டு அத்தியயனஞ் செய்வோம்?

எதன்பொருட்டு யாங்கள் யாகஞ்செய்வோம்? பிரஜையினுல் என்ன செய்வோம்? என்னும், ஸ்மிருதியில் எவர்கள் பிரஜையை விரும்புகிறார்களோ, அவர்கள் ஸ்மசானத்தைப் பஜிக்கிறார்கள். எவர்கள் பிரஜையை விரும்புவில்லையோ, அவர்கள் அமிருதத்துவத்தினையே அடைகின்றனர்." என்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்வாறாக்வே இந்த லோகத்தினையே விரும்பியவர்களாய் சந்நியாசிகள் சந்நியசிக்கின்றார்கள் என்னுமிடத்தில் (ஆத்மலோகம்) சுருதியினல் சொல்லக்கருதியதாம் என்பது அறியப்படுகின்றது. அந்த இம்மகானுகிய பிறப்பின்றிய ஆத்மா என்று ஆரம்பிக்கப்பட்ட ஆத்மா இஃதெனும் சொல்லால் விசாரிக்கப்படுவதாயிருத்தலின் लोक्यतेऽनुभूयते इति लोकः லோகிக்கிப்படுகின்றது அதாவது அநுபவிக்கப்படுகின்றது என்பதனல் லோகமாம். ஆகவே ஆத்மாநுபவத்தை விரும்பியவர்களாய்ச் சந்நியசிக்கிறார்கள் என்று சுருதியின் தாற்பரியார்த்தம் சித்திக்கின்றது. ஸ்மிருதியும்—

"ब्रह्मविज्ञानलाभाय परहंससमाह्वयः। शान्तिदान्त्यादिभिः सर्वैः साधनैः सहितो भवेत् ॥

பிரஹ்மவிஞ்ஞானத்தின் பொருட்டுச் சாந்தி தாந்தியாதி (மநவடக்கம் இந்திரியவடக்க முதலிய) சகல சாதநங்களோடுங்கூடியவனுய்ப், பரமஹம்ஸனென்னும் பெயருடையவனுகக் கடவன்" என்று கூறுதல் காண்க.

இந்த ஜந்மத்திலாவது ஜந்மாந்தரத்திலாவது செவ்வையாய் அநுஷ்டிக்கப்பட்ட வேதாநுவசநங்களா (வேதங்களை விதிப்படி அங்கங்களோடு ஓதியுணர்தலா)லுண்டாகிய விவிதிஷையால் (ஞாந விருப்பத்தால்) சம்பாதிக்கப்பட்டமையால் இது விவிதிஷாஸந்நியாஸ (ஞாந விருப்புண்டயேதன் ஸந்நியாஸ) மென்று சொல்லப்படுகின்றது. இதுவும் ஞாநத்திற்கு ஏதுவான சந்நியாஸம் ஜந்மத்தையுண்டு பண்ணும் காமியகர்ம முதலியவற்றின் தியாக (விடுதல்) மாத்திரவடிவினது என்றும் *பிரைஷமந்திரோச்சாரண பூர்வகமான தண்டதாரணுதியாசிரமவடிவினது என்றும் இருவகைத்தாம்.

---

* புத்திரமித்திரகளத்திராதியரை விடுவதாக தன் வாக்கால் சொல்லும் சுருதி மந்தரம்.

“पुंजन्म लभते माता पत्नी च प्रैषमात्रतः ।
ब्रह्मनिष्ठः सुशीलश्च ज्ञानं चैतत्प्रभावतः ॥

தாயும் பத்நியும் பிரைஷ மாத்திரத்தால் புருஷஜந்மத்தைப் பெறுகின்றனர். இதன் பிரபாவத்தால் ஞாநமும் நல்லொழுக்கமுடையனாதலும், பிரஹ்ம நிஷ்டனாதலும் கிடைக்கின்றன.”

தியாகமும் தைத்திரீய முதலியவற்றில்—

“न कर्मणा न प्रजया धनेन त्यागेनैके अमृतत्वमानशुः ॥

கர்மத்தினாலுமில்லை பிரஜையினாலும் தனத்தினாலுமில்லை தியாகத்தி (இவற்றை விடுதலி)னாலேயே சிலர் அமிருதத்தன்மையை அடைகின்றனர்.” என்று கேட்கப்படுகின்றது. இத்தியாகவடிவ சந்நியாசத்தில் ஸ்திரீகளுக்கும் அதிகாரமுண்டு. * [பிக்ஷுகீ யென்பதனால் விவாகத்திற்கு முன்னாவது வைதவ்யத்திற்கு(கைம்பெண்டன்மைக்கு)ப் பின்னாவது சந்நியாசத்தில் அதிகாரம் உண்டென்று காட்டப்பட்டுளது. அதனால் பிக்ஷையினை ஆசரித்தலும், மோக்ஷசாஸ்திர சிரவணமும், ஏகாந்தத்தில் ஆத்மாவைச் சிந்தித்தலும் அவர்களால் செய்யத்தக்கதாம். திரிதண்டாதிகளும் தரிக்கத்தக்கனவாம். என்பது மோக்ஷதர்மத்தில் சதுர்தரீடீகையில் ஸுலபாஜநக ஸம்வாதமாம். சாரீரக பாஷ்யத்தில் வாசக்நவீ (கார்கீ) முதலியதும் கேட்கப்படுகின்றது.

தேவதாதிகரண நியாயத்தால் விதுரனுக் (ஆசிரமமில்லாதவனுக்)கும் அதிகாரப் பிரசங்கத்தால் சாரீரகத்தின் மூன்றாவது அத்தியாயத்தின் நான்காவது பாதத்தில் சொல்லப்பட்டுளது. இதனாற்றான் மைத்திரேயிவாக்கியம்—

“येनाहं नामृता स्यां किमहं तेन कुर्यां यदेव भगवन् वेत्थ तदेव मे ब्रूहि ॥

எதனால் யான் மரணமில்லாதவனல்லனோ அதனால் யான் யாதுசெய்வேன் பகவானே! எதனைத் தாம் அறிவீரோ, அதனையே எனக்கு அநுக்கிரகிப்பீராக.” என்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது.

* [ ] இக்குறிக்குள் அடங்கிய வாக்கியங்கள் சில பிரதிகளிலில்லாமையால், அதிகமும், அசங்கதமுமாம்.

பிரஹ்மசாரி கிருகஸ்தன் வானப்பிரஸ்தன் என்னும் இவர்களுக்கு யாதேனுமோர் நிமித்தத்தால் ஸந்நியாசிரமத்தினைக்கொள்ளுதற்குத் தடையிருந்து தத்தம் ஆசிரமதர்மங்கள் அனுஷ்டிக்கப்படினும், ஞானத்திற் குபயோகமாகிய மானதமான கர்மாதித்தியாகம் விரோதப்படுகிறதில்லை. சுருதி ஸ்மிருதி இதிகாச புராணங்களிலும் லோகத்திலும் அத்தன்மைய தத்துவவித்துக்கள் அநேகர் காணப்படுதலால்.

தண்டதாரணாதிவடிவ ஞான ஹேதுவான பரமஹம்ஸாசிரமம் எதுவோ அது பூர்வாசாரியர்களால் வெகுவிதமாய் விரிக்கப்பட்டிருத்தலின் யாம் உபரதிபடைகின்றோம்.

இவ்வாறு விவிதிஷா ஸந்நியாசம் நிரூபிக்கப்பட்டது.

---

## வித்துவத் ஸந்நியாஸம்.

இனிவித்துவத் ஸந்நியாஸத்தினை நிரூபிப்பாம்:—செவ்வையாய் அநுஷ்டிக்கப்பட்ட சிரவணமனன நிதித்தியாசனங்களால் பர தத்துவத்தினை உணர்ந்தவர்களால் சம்பாதிக்கப்படுவது வித்துவத் (ஞானமுடையவன்) ஸந்நியாசமாம். அதனையும் யாஞ்ஞவல்கியர் சம்பாதித்தார். அது வருமாறு:—வித்வச்சிரோமணியாகிய பகவான் யாஞ்ஞவல்கியர் வெல்லும் விருப்புடைய கதை (சம்பாஷணை)யில் வெகு விதமான தத்துவ நிரூபணத்தால் ஆசுவலாயனர் முதலிய பிராஹ்மணர்களை மிக வென்று இராகமொழிந்த கதையில் சுருக்கமாகவும் விரிவாகவும் அநேக விதமாய் ஜநகருக்குப் போதித்து தன் மனைவியாகிய மைத்திரேயிக்குப் போதிக்கும் விருப்புடையவராய், அவள் விரைவில் தத்துவாபிமுக மாதற்பொருட்டுத் தான் செய்ய வேண்டிய ஸந்நியாசத்தைப் பிரதிஞ்ஞை செய்தார். அதன்பின் அவளுக்கு உபதேசம் செய்துவிட்டுச் சந்நியாசஞ்செய்தார். அவ்விரண்டும் மைத்திரேயிப் பிராஹ்மணத்தின் முதலினும் ஈற்றினும்

“अथ ह याज्ञवल्क्योऽन्यद्वृत्तमुपाकरिष्यन्मैत्रेयीति होवाच याज्ञवल्क्यः प्रव्रजिष्यन्वा अरेऽहमस्मात्स्थानादस्मि ।

இனி யாஞ்ஞவல்கியர் பூர்வாசிரமத்தின் வேறு (சந்நியாச) நடப்பினைச் செய்யவிரும்பியவராய் (தன் மனைவியை) ஏ! மைத்திரேயி! யான் இவ்விடத்தைவிட்டு வெளிப்படுவேன் (சந்நியாசம் செய்துகொள்வேன்) என்றார்" என்றும்,

"एतावदरे खल्वमृतत्वमिति होक्त्वा याज्ञवल्क्यो विजहार ।

ஏ! மைத்திரேயி! நிச்சயமாகவே இவ்வளவினதே அமிருதத்துவம் என்று கூறி யாஞ்ஞவல்கியர் வெளிப்பட்டார் (சந்நியசித்தார்.)" என்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. கஹோலப்பிராஹ்மணத்தினும் வித்துவத்ஸந்நியாசம்,

"एतं वै तमात्मानं विदित्वा ब्राह्मणाः पुत्रैषणायाश्च वित्तैषणायाश्च लोकैषणायाश्च व्युत्थायाथ भिक्षाचर्यं चरन्ति ।

இப்படி அவ்வாத்மாவை அறிந்து பிராஹ்மணர்கள் புத்திரைஷணையினின்றும் தனைஷணையினின்றும் லோகைஷணையினின்றும் எழுந்து (சந்நியசித்து) பிக்ஷாசரியத்தை (சரீரநிர்வாகத்தின்பொருட்டுச்) செய்கின்றனர்." என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்வாக்கியம் விவிதிஷாசந்நியாசத்தினைப் பற்றியதென்று சங்கிக்கலாகாது; இறந்தகால வாசகமான அறிந்து என்பதின் துவ் விகுதிக்கும் பிராஹ்மஞானியின் வாசகமான பிராஹ்மணர் என்னும் வாக்கியத்திற்கும் பாதம் வருதலால். இங்குள்ள பிராஹ்மண சப்தம் ஜாதிவாசகமன்று; *வாக்கியசேஷ(எஞ்சிய வாக்கிய)த்தில் பாண்டித்ய பால்ய மௌன சப்தங்களாலழைக்கப்படும் சிரவணமனன நிதித்தியாசனங்களால் சாதிக்கப்படும் பிரஹ்மசாக்ஷாத்காரத்தை அபிப்பிராயமாகக் கொண்டு பின் பிராஹ்மணன் என்று சொல்லப்பட்டிருத்தலால். சங்கை:—அங்கு விவிதிஷாசந்நியாஸத்தோடு கூடியவனுப் பாண்டியத்திய முதலியவற்றில் பிரவர்த்திப்பவனும் பிராஹ்மண சப்தத்தினால் ஆராயப்பட்டவனுவன். ஆதலால் பிராஹ்மணன் பாண்டித்தியத்தை யறிந்து பாலியமாக நிற்கக்கடவன் என்றதாமெனின், அப்படியன்று; உண்டாரவதான நிகழ்ச்சியை ஆசிரயித்து அங்குப் பிராஹ்மணசப்தம் பிரயோகிக்கப்பட்டிருத்தலால். அவ்வாறில்லையாயின் பின் பிராஹ்மணன் என்று சாதனுநுஷ்டானத்திற்குப் பிந்தியகாலவாசக

மான அத பின் என்னும் சொல் (சுருதியில்) எப்படிப் பிரயோகிக் கப்படும்.

சாரீரப்பிராஹ்மணத்திலும் வித்துவத்ஸந்நியாச விவிதிஷாஸந்நியாசங்கள் தெளிவாய்க் காட்டப்பட்டிருக்கின்றன. அது,

"एतमेव विदित्वा मुनिर्भवत्येतमेव प्रव्राजिनो लोकमिच्छन्तः प्रव्रजन्ति ।

இதனையே அறிந்து முனியாகின்றான். இந்த (ஆத்ம)லோகத்தினையே விரும்பியவர்களாய் சந்நியாசி (முமுக்ஷுக்)கள் சந்நியசிக்கின்றனர்" என்பதாம். முனித்தன்மையாவது மனன சீலத்தன்மை. அதுவும் வேறு கர்த்தவ்வியங்க (செய்யவேண்டியவைக)ளில்லாதபோது சம்பவிக்கின்றதென்னும் பொருளால் சந்நியாச மென்றே சொல்லப்படுகின்றது. இதுவும் வாக்கியசேஷத்தில் விளக்கப்பட்டுளது. அது

"एतद्ध स्म वै तत्पूर्वे विद्वांसः प्रजां न कामयन्ते किं प्रजया करिष्यामो येषां नोऽयमात्माऽयं लोक इति ते ह स्म पुत्रैषणायाश्च वित्तैषणायाश्च लोकैषणायाश्च व्युत्थायाथ भिक्षाचर्यं चरन्ति ।

இதனாற்றான் முந்திய ஞானிகள் எந்த எங்கட்கு இவ்வாத்மாவாகிய இந்தலோகமுளதோ அந்த யாங்கள் பிரஜையினால் என்ன செய்வோமென்று பிரஜையினை விரும்பிலர். அவர்கள் நிச்சயமாக புத்திரைஷணையினின்றும் வித்தைஷணையினின்றும் லோகைஷணையினின்றும் எழுந்து (சந்நியசித்து) பின் பிக்ஷாசரியத்தினைச் சரிக்கின்றனர்." என்பதாம், இவ்வுலகம் என்று அபரோக்ஷமாக அநுபவிக்கப்படுகின்றது என்பது பொருள்.

சங்கை:—இங்கு முனித்தன்மையாகிய பிரயோஜனத்தால் விரும்பி விவிதிஷாஸந்நியாசத்தினை விதித்து வாக்கியசேஷத்தில் அதுவே விரிக்கப்பட்டிருக்கின்றது. இதனால் வேறு ஸந்நியாசம் கற்பிக்க வேண்டியதில்லையெனின், அப்படி யன்று; வேதன(ஞான)மே விவிதிஷாஸந்நியாச பலமாயிருத்தலின். வேதனத்திற்கும் முனித்துவத்திற்கும் ஒற்றுமை யுண்டென்று சங்கிக்கலாகாது; அறிந்து முனியாகின்றான் என்று முற் பிற் காலத்தனவாகிய அவ்விரண்டற்கும் சாத்திய சாதனத்தன்மை தோற்றுதலால்,

சங்கை:—வேதனத்தினது பரிபாக மிருதிப்பாடு வடிவ வேறு அவஸ்தையே முக்தித்துவமாம். இதனால் வேதனவழியாக முற்சந்நியாசத்தின் பயனே இது வெனின், கல்லது. இதனாற்றான் சாதனவடிவ ஸந்நியாசத்தினும் வேறான பலவடிவ இச்சந்நியாசத்தினைக் கூறுகின்றோம். எப்படி விவிதிஷாஸந்நியாசியால் தத்துவஞானத்தின் பொருட்டுச் சிரவணாதிகள் சம்பாதிக்கத்தக்கனவோ, அப்படியே வித்துவத் ஸந்நியாசியினாலும் ஜீவன் முக்தியின்பொருட்டு மனோநாசவாசனாக்ஷயங்கள் சம்பாதிக்கத்தக்கனவாம். இதனையும் மேல் விரித்துரைப்பாம். இவ்விரு சந்நியாசங்கட்கும் இடைப் பேதமிருக்கினும் பரமஹம்ஸத்தன்மை வடிவத்தால் ஒருமைப்படுத்தி "சந்நியாசிகள் நால் வகையினர்" என்று ஸ்மிருதிகளில் நான்கென்னும் எண்ணிக்கை சொல்லப்பட்டுளது. முற்கூறப்பட்ட இரண்டு சந்நியாஸங்களினும் பரமஹம்ஸத்துவம் ஜாபால சுருதியில் அறியப்படுகின்றது. அதிற்றானே ஜநகரால் சந்நியாசம் கேட்கப்பட்டபோது யாஞ்ஞவல்கியர் அதிகார விசேஷத்தினை விதித்தலோடும் கூறிய காலத் தநுஷ்டிக்கத் தக்கதோடும் கூடியதாக விவிதிஷா சந்நியாசத்தினைச் செவ்வையாய்க் கூறிப் பின் அத்திரியினால் யஞ்ஞோபவீத மின்றியவனுக்குப் பிராஹ்மணியம் ஆக்ஷேபிக்கப்பட்டபோது, பின் ஆத்மஞானமே யஞ்ஞோபவீதமா மென்று சமாதானஞ்செய்தார். இதனால் வெளி யுபவீதமி (பூணூலி)ல்லாமையால் பரமஹம்ஸத்தன்மை நிச்சயிக்கப்படுகின்றது. அப்படியே வேறு கண்டிகையி(உபநிஷத் பாகத்தி)லும் பரமஹம்ஸன் என்பவன் என்றாரம்பித்து, சம்வர்த்தகர் முதலிய வெகு பிரஹ்மவித்துக்களான ஜீவன் முக்தர்களை யுதகரித்து,

"अव्यक्तलिङ्गा अव्यक्ताचारा अनुन्मत्ता उन्मत्तवदाचरन्तः

வெளிப்படையான குறிகளில்லாதவர்களும், வெளிப்படையான ஆசாரமில்லாதவர்களும், உன்மத்தமி (வெறியி)ல்லாதவர்களும் உன்மத்தர்களைப்போல் நடப்பவர்களும்" என்று வித்வத்ஸந்நியாசிகள் காட்டப்பட்டிருக்கின்றனர். அப்படியே,

"त्रिकाण्डं कमण्डलुं शिक्यं पात्रं जलपवित्रं शिखां यज्ञोपवीतं चेत्येतत्सर्वं भूः स्वाहेत्यप्सु परित्यज्यात्मानमन्विच्छेत्

திரிதண்டம், கமண்டலம் (ஜலபாத்திரம்,) உறி, (பிக்ஷா)பாத்திரம், ஜலபவித்திரம் (நீர் வடிகட்டும் வஸ்திரம்,) சிகை(குடுமி,) யஞ்ஞோபவீதம் (பூணூல்)என்னும் இவ்வெல்லாவற்றையும் "भूः स्वाहा" என்று ஜலத்தில்விட்டு ஆத்மாவினை விரும்பக்கடவன்" என்று திரிதண்டிகளாயிருப்பவருக்கு ஏகதண்ட லக்ஷணமான விவிதிஷாஸந்நியாசத்தினை விதித்து, அதன்பயன் வடிவ வித்வத்ஸந்நியாசத்தினையே உதாகரிக்கின்றார். அது,

"यथाजातरूपधरो निर्द्वंद्वो निष्परिग्रहस्तत्र ब्रह्ममार्गे सम्यक्संपन्नः शुद्धमानसः प्राणसंधारणार्थं यथोक्तकाले विमुक्तो भैक्षमाचरन्नुदरपात्रेण लाभालाभौ समौ कृत्वा शून्यागारदेवतागृहतृणकूटवल्मीकवृक्षमूलकुलाल-शालाग्निहोत्रनदीपुलिनगिरिकुहरकंदरकोटरनिर्झरस्थाण्डिलेष्वनिकेतवास्यप्रय-त्नो निर्ममः शुक्लध्यानपरायणोऽध्यात्मनिष्ठः शुभाशुभकर्मनिर्मूलनपरः संन्यासेन देहत्यागं करोति स एव परमहंसो नाम ॥

பிறந்ததுபோன்ற வடிவம் தரித்தவ(அவதூத)னாய், (சுகதுக்காதி) துவந்துவமின்றியவனாய், ஒருவரிடத்தும் ஒன்றும் வாங்காதவனாய், அங்குப் பிரஹ்ம மார்க்கத்தில் செவ்வையாய்ப் பொருந்தியவனாய், சுத்தமனதுடையவனாய், பிராணன் தரிக்கும்பொருட்டு *உதரபாத்திரத்தால் உரியதாய்ச் சொல்லப்பட்ட காலத்து விமுக்தனாய் பிக்ஷை வாங்கி லாபாலாபங்களைச் சமமாக்கிச் சூனியமானவீடு, தேவாலயம், புல்புதர், புற்று, மரத்தடி, குயவன் சாலை, அக்கினிஹோத்திர இடம், நதி, காடு, மலைக்குகை, மலைச்சாரல், மரப்பொந்து, அருவியுள்ள இடம், பர்ணசாலை என்பவைகளில் நியதமான வீடின்றி வசிப்பவனாய், பிரயத்தனமில்லாதவனாய், எனதெனுந் தன்மையில்லாதவனாய், சுக்கிலத்தியானபரனாய், அத்தியாத்ம நிஷ்டனாய்ச் சுபாசுபகர்மங்களை வேரோடு களையுமியல்பினனாய், சந்நியாசத்தினால் தேகத்தை விடுகின்றான். அவனே பரமஹம்ஸனென்னும் பெயருடையவன்." என்பதாம். ஆதலால் இவ்விருவருக்கும் பரமஹம்ஸத் தன்மை சித்

---

*வாய்திறந்து கவளத்தை யுட்கொள்ளுதல் உதரபாத்திரம். இது கரபாத்திரத்திற்கும் உபலக்ஷணம்.

திக்கது. பரமஹம்ஸத்துவம் சமானமாய்ச் சித்தித்திருக்கினும், விருத்த தர்மத்தால் ஆக்கிரமிக்கப்பட்டிருத்தலால் அவாந்தரபேதமும் அங்கீகரிக்கத்தக்கதாம். விருத்ததர்மத்தன்மையும் ஆருணியுபநிஷத பரமஹம்ஸோபநிஷதங்களைப் பரியாலோசித்தலில் அறியப்படுகின்றது. பகவானே! எதனால் கர்மங்களை முற்றும் விடுகிறேன் என்று சிகை, யஞ்ஞோபவீதம், சுவாத்தியாயம், காயத்திரி ஜபமுதலிய எல்லாக் கர்மங்களையும் விடுதல் வடிவ விவிதிஷா சந்நியாசத்தில் சிஷ்யனாகிய ஆருணியினால் கேட்கப்பட்டபோது குருவாகிய பிரஜாபதியானவர் "शिखां यज्ञोपवीतम् சிகையையும் யஞ்ஞோபவீதத்தினையும்" என்பன முதலியவற்றால் எல்லாவற்றினையும் விடுதலைக் கூறி, "दण्डमाच्छादनं कौपीनं च परिग्रहेत् தண்டத்தினையும் வஸ்திரத்தினையும் கௌபீனத்தினையும் கொள்ளவேண்டும்." என்று தண்டாதி ஸ்வீகாரத்தினை விதித்து,

"त्रिसंध्यादौ स्नानमाचरेत् संधिं समाधावात्मन्याचरेत्सर्वेषु वेदेष्वारण्यमावर्तयेत् । उपनिषदमावर्तयेत् ।

மூன்று சந்தியாதியில் ஸ்நானத்தினை ஆசரித்தல் வேண்டும். சந்தியினைச் சமாதியில் ஆத்மாவினிடத்து ஆசரிக்கவேண்டும். வேதங்களில் ஆரணத்தினை ஆவிருத்திசெய்க. உபநிஷதத்தினை ஆவிருத்திசெய்க." என்று வேதனகாரணங்களான ஆசிரமதர்மங்களை அநுஷ்டிக்கத்தக்க தன்மையாக விதிக்கின்றார். பின் யோகிகளான பரமஹம்ஸர்களின் இம்மார்க்கம் யாதென்று வித்துவத்ஸந்நியாசம் நாரதரால் கேட்கப்பட்டபோது, குருவாகிய பகவான் பிரஜாபதியானவர் தனது புத்திரமித்திர மென்றல் முதலியவற்றால் முன்போல எல்லாவற்றையும் விடுதலைக்கூறி, கௌபீனம் தண்டம் வஸ்திரம் என்பவற்றை தன் சரீரோப போகார்த்தமாகவும், லோகோபகாரார்த்தமாகவும் கொள்ளவேண்டும் என்று தண்டாதி ஸ்வீகாரத்திற்கு லௌகிகத்தன்மை கூறி, அதுவும் முக்கிய மன்றென்று சாஸ்திரீயத்தன்மையினை விலக்கி, அம்முக்கியம் யாதெனின, அம்முக்கியமானது தண்டமன்று; "சிகையில்லை; யஞ்ஞோபவீதமில்லை, வஸ்திரமுமில்லை; பரமஹம்சன் சரிக்கின்றான்." என்று தண்டாதி லிங்கம் (குறி) இல்லாதவனுக்குச் சாஸ்திரீயத்தன்மையினைக் கூறி, "சீதமில்லை, உஷ்ண

மில்லை" என்றல் முதலிய வாக்கியங்களாலும் நிகம்பரனுய், மமத்துவ மில்லாதவனுய் என்றல் முதலிய வாக்கியங்களாலும் லோக வியவகாரங் கடந்த தன்மையினைக் கூறி, முடிவில் பூர்ணுநந்த ஏகபோதம் எதுவோ அந்தப்பிரஹ்மம் யனென்று (அநுபவித்து) கிருதகிருத்தியனுகின்ருன் என்று முடிகின்ற கிரந்தத்திஞல் பிரஹ்மாநுப்வ மாத்திரமான முடிவினைக் கூறினர். இதனுல் விருத்த தர்மத்தோடு கூடியிருத்தலால் இவ்விரண்டற்கும் பெரும் வேற்றுமையுளது.

ஸ்மிருதிகளிலும் இப்பேதம் கூறப்பட்டுள்ள நிலை காணத்தக்கதாம்.

"संसारमेवं निःसारं दृष्ट्वा सारदिदृक्षया। प्रव्रजन्त्यकृतोद्वाहाः परं वैराग्यमाश्रिताः॥ प्रवृत्तिलक्षणो योगो ज्ञानं संन्यासलक्षणम्। तस्माज्ज्ञानं पुरस्कृत्य संन्यसेदिति बुद्धिमान्॥

சம்சாரத்தினை இவ்வாறு நிஸ்ஸாரமென்று கண்டு சாரத்தைக் காணும் விருப்பால் விவாகஞ்செய்யாதவர்(பிரஹ்மசாரி)கள் மேலான வைராக்கியத்தினை ஆசிரயித்தவர்களாய்ச் சந்நியஸிக்கிருர்கள். பிரவிருத்தி லக்ஷணம் யோகம். ஞானம் சந்நியாஸ லக்ஷணம். ஆதலால் இங்குப் புத்திமான் ஞானத்தை முன்னிட்டு சந்நியஸிக்கக் கடவன்" என்றல் முதலியன விவிதிஷாஸந்நியாஸம்.

"यदा तु विदितं तत्स्यात्परं ब्रह्म सनातनम्। तदैकदण्डं संगृह्य सोपवीतशिखां त्यजेत्॥ ज्ञात्वा सम्यक्परं ब्रह्म सर्वं त्यक्त्वा परिव्रजेत्॥

எப்போது பரதத்துவமான சநாதனப்பிரஹ்மம் அறியப்பட்டதாமோ, அப்போது ஏகதண்டத்தினை சங்கிரகித்து உபவீதத்தோடு சிகையினையும் விடுக, பரம்பிரஹ்மத்தைச் செவ்வையாயறிந்து எல்லாவற்றையும் விட்டு ஸந்நியஸிக்கக் கடவன்." என்றல் முதலியன வித்வத்ஸந்நியாஸம்.

அப்படியாஞல் கலை சங்கீதம்) வித்தை(புராணுதி)முதலிய வற்றிற்போல எப்போதாயினும் விநோதமாத்திரத்தாலும் அறிய இச்சை சம்பவிக்கின்றது. இப்படி வித்துவத்துவமும் மேலெழுந்த பார்

வையாய்த் தன்னைப் பண்டிதனாய் மதிப்பவனுக்கும் இங்கு காணப்படுகின்றது. அவ்விருவரும் சந்நியசித்தவர்களாகக் காணப்படவில்லை. ஆதலால் விவிதிஷையும் வித்வத்துவமும் எத்தன்மையவாகக் கருதப்பட்டன வெனின், சொல்லப்படுகின்றது. எப்படித் தீவிரமான போஜன விருப்ப முண்டானபோது போஜனத்தை விட வேறு வியாபாரம் உருசிக்கிறதில்லையோ, போஜனத்திலும் தாமஸம் சகிக்கமுடியாதோ, அப்படியே ஜன்மத்திற்கு ஏதுவான கர்மங்களில் அத்தியந்தம் அருசியும் ஞானசாதனங்களான சிரவணாதிகளில் மிக விரைதலும் உண்டாகின்றது. அத்தன்மையது விவிதிஷாசந்நியாசத்திற்கு ஏதுவாம்.

வித்வத் தன்மைக்கு அவதி உபதேசசகஸ்ரியில்,

"देहात्मज्ञानवज्ज्ञानं देहात्मज्ञानबाधकम् । आत्मन्येव भवेद्यस्य स नेच्छन्नपि मुच्यते ॥

தேகாத்ம ஞானம் போன்றதாய்த் தேகாத்மஞானத்தினைக் கெடுப்பதான ஞானம் ஆத்மாவினிடத்திலேயே எவனுக் குண்டாகின்றதோ, அவன் இச்சியாதிருந்தும் முக்தி யடைகின்றான்." என்று சொல்லப் பட்டிருக்கின்றது.

சுருதியிலும்,

"भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः । क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन्दृष्टे परावरे ॥

அப்பராவரம் அறியப்பட்டபோது இவனுடைய இருதய கிரந்தி (முடிச்சு) பேதிக்கிறது. சர்வசம்சயங்களும் சிதைகின்றன. கர்மங்களும் நசிக்கின்றன." என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

பரமா(மேலா)கிய ஹிரணிய கர்ப்பாதியரின் பதங்களும் எதனை நோக்க அவரம் (தாழ்ந்தன) ஆகுமோ அது பராவரம், இருதயமாகிய புத்தியில் சாக்ஷியின் தாதாத்மியாத்தியாசம் அநாதி அவித்தையினால் நிருமிக்கப்பட்டதா யிருத்தலால் கிரந்தியினை (முடிச்சை)ப் போல திடப் பின்னல் வடிவாயிருத்தலின் கிரந்தியெனப்படுகின்றது. ஆத்மா சாக்ஷியா? கர்த்தாவா? சாக்ஷித்துவமிருக்கினும் பிரஹ்மத்

துவமிருக்கின்றதா? இல்லையா? பிரஹ்மத்துவமிருக்கினும் அப்புத்தியாக அறியக்கூடியதா? கூடாததா? கூடியதாயினும், அதனை யறிந்தமாத்திரத்தால் முக்தியுண்டா? இல்லையா? என்னும் இவை முதலியன சம்சயங்கள். கர்மங்கள் ஜன்மகாரணங்களான ஆரம்பிக்கப்படாது (சஞ்சிதம்) ஆகாமியம் என்பன. சொல்லப்பட்ட கிரந்தி முதலிய இம்மூன்றும் அவித்தையினு லாக்கப்பட்டதா யிருத்தலின் ஆத்ம தரிசனத்தால் நீங்குகின்றது.

ஸ்மிருதியிலும் இவ்வர்த்தம்

"यस्य नाहंकृतो भावो बुद्धिर्यस्य न लिप्यते । हत्वापि स इमांल्लोकान्न हन्ति न निबध्यते ॥

எவனுடைய பாவம் அகங்கரிக்கப்பட்டதன்றோ எவனுடைய புத்தி எதிலும் பற்றுகிறதில்லையோ, அவன் இவ்வுலகத்தைக் கொன்றும் கொல்லுகிறதில்லை கட்டுப்படுகிறதுமில்லை." என்று காணப்படுகின்றது. எந்தப் பிரஹ்மவித்தினுடைய பாவம் அதாவது சத்தாஸ்பாவமாகிய ஆத்மா அகங்கரிக்கப்பட்டதன்றோ, அதாவது தாதாத்மியாத்தியாசத்தினுல் உள்ளில் மறைக்கப்படவில்லையோ (என்று பொருள் செய்க.) புத்திப்பற்றுவது சம்சயம். அஃதில்லாதபோது மூவுலகக்கொலையினுலும் கட்டுப்படான்.

சங்கை:—இவ்வாறுகவே விவிதிஷா சந்நியாசத்தின் பயனுகிய தத்துவஞானத்தினுலேயே வரும் ஜன்மம் நீக்கப்படுதலின் வர்த்தமான (இந்த) ஜன்மசேஷம் போகமின்றிக் கெடுக்கக்கூடாததாயிருத்தலின், இந்த வித்துவத் ஸந்நியாசப்பிரயாசத்தினுல் என்ன பயனெனின், அப்படியன்று; வித்வத்ஸந்நியாசம் ஜீவன்முக்திக்கு ஏதுவாயிருத்தலின்.

ஆதலால் வேதனத்தின்பொருட்டு எப்படி விவிதிஷா ஸந்நியாசமோ அப்படியே ஜீவன்முக்தியின்பொருட்டு வித்வத் ஸந்நியாசம் சம்பாதிக்கத்தக்கதாம்.

॥ इति विद्वत्संन्यासम् ॥

இவ்வாறு வித்வத் ஸந்நியாசம் நிரூபிக்கப்பட்டது.

---

## ॥ अथ जीवन्मुक्तिस्वरूपम् ॥

## ஜீவந்முக்தி சொரூபம்.

இனி ஜீவன்முக்தியென்பது யாது? அஃதுண் டென்பதில் பிரமாணம் யாது? அது சித்திப்பது எப்படி? சித்திக்கின் பிரயோஜனம் யாது? எனின், சொல்லப்படுகின்றது. ஜீவித்திருக்கும் புருஷனுக்குக் கர்த்திருத்துவம் போக்திருத்துவம் சுகம் துக்கம் முதலிய லக்ஷணமுள்ள சித்ததர்மம் கிலேசவடிவினதாயிருத்தலின் பந்தமாகின்றது. அதன் நீக்கம் ஜீவன்முக்தியாம்.

சங்கை:— இப்பந்தம் சாக்ஷியினின்றும் நீக்கப்படுகின்றதா? அல்லது சித்தத்தினின்றும் நீக்கப்படுகின்றதா? முதலாவதன்று; அது தத்துவஞானத்தினுலேயே நீக்கப்பட்டமையால். இரண்டாவதுமன்று; பொருந்தாமையின். எப்போது ஜலத்தினின்றும் நெகிழ்ச்சி நீக்கப்படுமோ, நெருப்பினின்றும் சூடு நீக்கப்படுமோ, அப்போது சித்தத்தினின்றும் கர்த்திருத்வாதி தர்மங்களை நீக்குதல் கூடும்; சுவாபாவிகத்துவமோ (இயற்கைத்தன்மையோ) எங்கும் சமானமாம் எனின், அப்படியன்று. அடியோடு நீக்குதல் கூடாதாயினும் அதனை அடக்குதல் பொருந்துமாகலின். எப்படி ஜலத்திலுள்ள நெகிழ்ச்சி மண்ணைச்சேர்த்தலால் அடக்கப்படுகின்றதோ, நெருப்பின் சூடு மணிமந்திராதிகளால் அடக்கப்படுகின்றதோ, அப்படியே சகல சித்தவிருத்திகளும் யோகாப்பியாசத்தினுல் அடக்கக்கூடியனவாம்.

சங்கை:—பிராரப்தகர்மம் சகல அவித்தியா தற்காரியங்களையும் கெடுத்தலில் பிரவிருத்தித்த தத்துவஞானத்தினைப் பிரதிபந்தம் செய்து தனது பயனைத் தருதற்பொருட்டுத் தேகேந்திரியாதிகளை நிறுத்துகின்றது. சுகதுக்காதிபோகம் சித்தவிருத்தியின்றிச் சம்பாதிக்கக்கூடியதன்று. அதனுல் அதனையடக்குதல் எப்படிக் கூடுமெனின், அப்படியன்று; (சித்ததர்மங்களை) அடக்குதலால் சாதிக்கப்படும் ஜீவன்முக்தியும் சுகாதிசயவடிவத்தால் பிராரப்தபயனிற்றானே அடங்குதலால். அப்படியானுல் கர்மமே ஜீவன்முக்தியைச் சம்பாதிக்கும் புருஷப்பிரயத்தனம் வேண்டியதில்லையே யெனின், கிருஷிவாணிஜ்ய முதலியவற்றிலும் இது சமானமாம். சுவயம்

அதிருஷ்டரூபமான கர்மத்திற்குத் திருஷ்ட(காணப்படும்) சாதனத்தின் அடைவின்றிப் பலத்தையுண்டுபண்ணுவதில் சாமர்த்தியமில்லாமையால், கிருஷியாதிகளில் புருஷப்பிரயத்தனம் அபேக்ஷிக்கப்பட்டதாமெனின், அச்சமாதானம் ஜீவன்முக்தியிலும் சமானமாகும். கிருஷியாதிகளில் புருஷப்பிரயத்தன மிருந்தும் பயன் முடிவு எங்குக் காணப்படவில்லையோ அங்குப் பிரபலமான வேறு கர்மத்தினால் பிரதிபந்தம் கற்பிக்கத்தக்கதாம். அந்தப் பிரபலகர்மமும் தனது அநுகூலமான மழையின்மை முதலிய வடிவு திருஷ்ட சாமக்கிரியினைச் சம்பாதித்தே பிரதிபந்திக்கின்றது. அப்பிரதிபந்தமும் விரோதியான மிகப் பிரபலமான பிரதிபந்தக சக்தியினைக் *கெடுப்பதாகிய காரீரியாக முதலிய வடிவ கர்மத்தால் நீக்கப்படுகின்றது.

அக்கர்மமும் தனது அநுகூலமான மழை வடிவ திருஷ்டசாமக்கிரியினைச் சம்பாதித்தே பிரதிபந்தத்தினைக் கெடுக்கின்றது. வெகுவாய்ச் சொல்வதனா லென்ன? பிராரப்தகர்மத்திலேயே அத்தியந்த பக்தியுள்ள தம்மால் யோகாப்பியாச வடிவ புருஷப்பிரயத்தனம் வியர்த்தமாதல் மனதினாலும் சிந்திக்கக்கூடிய தன்று. அல்லது பிராரப்தகர்மம் எப்படித் தத்துவஞானத்தினை விடப்பிரபலமோ அப்படியே அப்பிராரப்த கர்மத்தினையும் விட யோகாப்பியாசம் பிரபலமாயிருக்குக. அவ்வாறாகவே யோகிகளாகிய உத்தாலகர் வீதகவ்வியர் முதலியோருக்குச் சுவேச்சையாகத் தேகத்தியாகம் பொருந்துகின்றது. அற்பாயுளுடைய நம்மனோருக்கு அத்தன்மைய யோகம் சம்பவியாவிடினும், காமாதி வடிவ சித்த விரோதமாத்திரமான யோகத்தில் பிரயாஸம் யாதுளது? சாஸ்திரீயமான பிரயத்தனத்திற்குப் பிரபலத்தன்மை யங்கீகரியாவிடின், அப்போது(வியாதி பரிகாரமான) சிகித்ஸைதொடங்கி மோக்ஷசாஸ்திர பரியந்தமான எல்லாவற்றிற்கும் அநர்த்தத்தன்மைப் பிரசங்கம் வருகின்றது. யாதானுமோர் காலத்துக் கர்மபலம் பலியாமை மாத்திரத்தால் அதற்குத் துர்ப்பலத்தன்மைச் சம்பாதிக்கக்கூடிய தன்று. அவ்வாறில்லையாயின், ஓர் காலத்துத் தோல்வியைக் கண்டு, எல்லா வரசர்களாலும் யானை குதிரை முதலிய சேனை உபேக்ஷிக்கப்படும். இதனாற்றான்

* மழையை விரும்பி அரசன் பிரஜைகளிடத்து வரிவாங்கிச்செய்யும் ஓர் யாகம்.

ஆநந்தபோதாசாரியர்

"न ह्यजीर्णभयादाहारपरित्यागः, भिक्षुकभयाद्वा स्थाल्यनधिश्रयणं, यूकाभयाद्वा प्रावरणपरित्यागः ॥

அஜீர்ணபயத்தால் உணவை முற்றும் விடுவதில்லை. பிச்சைக்காரருக்குப் பயந்து சமையல் செய்யாதிருப்பதில்லை. பேனுக்குப் பயந்து வஸ்திரமணியா திருப்பதில்லை." என்று கூறுகின்றனர். சாஸ்திரீயப் பிரயத்தனத்தின் பிரபலத்தன்மை வசிஷ்ட ராம சம்வாதத்தில் மிகத் தெளிவாய் அறியப்படுகின்றது. எல்லாமுமே எப்போதும் என்றாரம்பித்து அதன்பின் அதனையும் விட்டு சாது நிற்கக்கடவன் என்று முடிகின்ற கிரந்தத்தினால்

வசிஷ்டர்:— "सर्वमेव हि सदा संसारे रघुनन्दन । सम्यक्प्रयुक्तात्सर्वेण पौरुषात्समवाप्यते ॥

இரகுநந்தன! சம்ஸாரத்தில் எல்லோராலும் எல்லாமும் எப்போதும் செவ்வையாய்ப் பிரயோகிக்கப்பட்ட பௌருஷமாகிய பிரயத்தனத்தால் செவ்வையாய் அடையப்படுகின்றது." இங்கு எல்லாமென்பது புத்திரன், வித்தம், சுவர்க்க லோகம், பிரஹ்ம லோக முதலிய பயன். பௌருஷமென்பது * புத்திரகாமேஷ்டி கிருஷிவாணிஜ்ய ஜோதிஷ்டோம பிரஹ்மோபாசன வடிவப் புருஷப் பிரயத்தனம்.

"उच्छास्त्रं शास्त्रितं चेति पौरुषं द्विविधं स्मृतम् । तत्रोच्छास्त्रमनर्थाय परमार्थाय शास्त्रितम् ॥

பௌருஷம் உச்சாஸ்திரம் (நூல்விலக்கு வடிவினது) சாஸ்திரிதம் (நூலிற்கூறிய [விதி] வடிவினது) என்று இருவகையாகக் கருதப்பட்டுளது. அவற்றுள் நூல் விலக்குவடிவினது அநர்த்த (நரக)த்தின் பொருட்டாம். விதி வடிவினது பரமார்த்தத்தின் பொருட்டாம்." இங்கு நூல் விலக்குவடிவப் பிரயத்தனமாவது பரத்திரவியாபகாரம் பரஸ்திரீகமனாதி வடிவினது. நூலிற்கூறிய பிரயத்தனமாவது நித்திய நைமித்திகாநுஷ்டான முதலியன. அர்த்தங்களான ஸ்வர்க்காதிகளில் பரமா(மேலா)ன மோக்ஷம் பரமார்த்தமாம்.

* புத்திரனை விரும்பிச் செய்யப்படும் யாகம்.

" आ बाल्यादलमभ्यस्तैः शास्त्रसत्संगमादिभिः । गुणैः पुरुषयत्नेन सोऽर्थः संपाद्यते हितः ॥

பாலியமுதல் போதுமானதாக அப்பியசிக்கப்பட்ட சாஸ்திர சத்ஸங்கமுதலியவற்றோடும் குணங்களோடும் கூடிய புருஷப் பிரயத்தனத்தால் சிரேயசுவடிவமான அவ்வர்த்தம் சம்பாதிக்கப் படுகின்றது." என்று கூறினர்.

ஸ்ரீராமர்:— "प्राक्तनं वासनाजालं नियोजयति मां यथा । मुने तथैव तिष्ठामि कृपणः किंकरोम्यहम् ॥

முநீசுவரரே! தொன்றுதொட்டு வருகின்ற (ஜன்மாந்தரங்களின்) வாசனைக்கூட்டம் என்னை எப்படி ஏவுகிறதோ, அப்படியே நிற்கின்றேன் கிருபண (தீன)ஞகிய யான் என்ன செய்கின்றேன்." என்று சொன்னர். தர்மாதர்மவடிவமான ஜீவனிடத்துள்ள சம்ஸ்காரங்கள் வாசனைகளாம்.

வசிஷ்டர்:—" अत एव हि हे राम श्रेयः प्राप्नोषि शाश्वतम् । स्वप्रयत्नसमेतेन पौरुषेणैव नान्यथा ॥

அதனுற்றன் ஏ! ராமா! தனது பிரயத்தனத்தோடு கூடியதான பௌருஷத்தி(சாஸ்திரியமான புருஷமுயற்சியி)னுலேயே சாசுவதமான சிரேயஸை அடைவாய். வேறுவிதத்தாலடையாய்." என்றார். ஏதனுல் தாம் வாசனு பாதந்திரரா யிருக்கின்றீரோ, அதனுற்றனே பரதந்திரத்தன்மை நீங்குதற்பொருட்டு, தனது உற்சாகத்தினுல் சம்பாதிக்கப்பட்ட மனோவாக்குக்காய ஜந்யமான புருஷ வியாபாரம் அபேக்ஷிக்கப்படுவதாகின்றது.

" द्विविधो वासनाव्यूहः शुभश्चैवाशुभश्च ते । प्राक्तनो विद्यते राम द्वयोरेकतरोऽथ वा ॥

பழமையான ஏ! ராமா! உனக்கு சுபம் அசுபமென்று இருவகையான ஜன்மாந்தர வாசனைக்கூட்ட மிருக்கின்றது. அவையிரண்டும் உன்னைப் பிரேரிக்கின்றனவா? அல்லது இரண்டி லொன்று பிரேரிக்கின்றதா?" தர்மாதர்ம மிரண்டும் உன்னை ஏவுகின்றனவா? அல்லது

இரண்டிலொன்று ஏவுகின்றதா? என்பது விகற்பம். இரண்டிலொன்றெனும் பக்ஷத்திலும் சுபமா? அசுபமா? வென்பது பொருளாற் சித்தித்த விகற்பம்.

" वासनौघेन शुद्धेन तत्र चेदपनीयसे । तत्क्रमेणाशु तेनैव पदं प्राप्स्यसि शाश्वतम् ॥

அப்பக்ஷங்களில் சுத்தமான வாசனைக்கூட்டங்களினால் செலுத்தப்படுவாயாயின், அப்போது அந்தக் கிரமத்தினாலேயே விரைவில் சாசுவதமான பத(மோக்ஷ)த்தை அடைவாய்." வேறு பிரயத்தனத்தையபேக்ஷியாது சுபவாசனையினால் அடையப்பட்ட ஆசாரத்தினாலேயே யென்பார் அந்தக் கிரமத்தினாலேயே என்றார்.

" अथ चेदशुभो भावस्त्वां योजयति संकटे । प्राक्तनस्तदसौ यत्नाज्जेतव्यो भवता स्वयम् ॥

இனிப்பழமையான அசுபவாசனை தம்மைச் சங்கடத்துச் செலுத்துமாயின், அதுவும் தம்மால் சுவயமே யத்தனத்தால் ஜயிக்கத்தக்கதாம்." அந்த யத்தனமாவது அவ்வசுப வாசனைக்கு விரோதியான சாஸ்திரத்திற் கூறிய தர்மாநுஷ்டானமாம். அதனால் ஸ்வயமே ஜயிக்கத்தக்கதாம். யுத்தத்தில் மிருத்தியு முகத்தாற்போல புருஷார்த்த முகத்தால் ஜயிக்கத்தக்கதன்று.

" शुभाशुभाभ्यां मार्गाभ्यां वहन्ती वासनासरित् । पौरुषेण प्रयत्नेन योजनीया शुभे पथि ॥

சுபாசுப மார்க்கங்களால் ஓடுகின்ற வாசனையாகிய ஆறு புருஷமுயற்சியால் சுபமான மார்க்கத்தில் பொருத்தத்தக்கதாம்." இருபக்ஷங்களிலும் சுபபாகத்திற்குப் பிரயத்தனம் வேண்டியதில்லை யெனினும், அசுபபாகத்தினைச் சாஸ்திரீயப் பிரயத்தனத்தால் நீக்கி அதன் ஸ்தானத்தில் சுபத்தினையே செவ்வையாய் ஆசரிக்கவேண்டும்.

" अशुभेषु समाविष्टं शुभेष्वेवावतारयेत् । स्वमनः पुरुषार्थेन बलेन बलिनां वर ॥

(பாஸ்திரீ திரவிய முதலிய) அசுபங்களில் பிரவேசித்த தன் மனதை பலவான்களில் சிரேஷ்டமான் இராமா! பிரபலமான புருஷார்த்த (புருஷப்பிரயத்தன)த்தினல் (சாஸ்திரார்த்த தேவதா தியானுதி) சுபங்களிலே செலுத்தவேண்டும்.

"अशुभाच्चालितं याति शुभं तस्मादपीतरत्। जन्तोश्चित्तं तु शिशुवत्तस्मात्तचालयेद्बलात् ॥

அசுபத்தினின்றும் அசைக்கப்பட்டதாய் சுபத்தினை அடைகின்றது. அதிலிருந்து அசுபத்தை யடைகின்றது. பிராணிகளின் சித்தம் சிசுவைப் போன்றதாம். ஆதலால் அதனை வலிந்து அசைப்பிக்கவேண்டும்." எப்படிச் சிசுவானது மண் தின்பதினின்றும் நீக்கப்பட்டு, பழம் புசித்தலில் பொருத்தப்படுகின்றதோ, மாணிக்கம் இரத்தின முதலியவற்றைக் கொள்ளுதலினின்றும் பந்து முதலியவற்றைக் கொள்ளுதலில் செலுத்தப்படுகின்றதோ அவ்வாறு சித்தமும் சத்ஸங்கத்தினல் துஸ்ஸங்கமாகிய அதனின் விபரீதவிஷயத்தினின்றும் விலக்கக் கூடியதாம்.

"समतासान्त्वनेनाशु न द्रागिति शनैः शनैः। पौरुषेण प्रयत्नेन लालयेच्चित्तबालकम् ॥

சமத்தன்மையை யாசிரயிக்கும்படி சமாதானப்படுத்துந் தன்மையால் விரைவிலும், பௌருஷமாகிய பிரயத்தனத்தால் வேகமின்றி மெல்ல மெல்லவும் சித்தமாகிய பாலகனை வசப்படுத்த வேண்டும்." சஞ்சலமுள்ள பசுவினைக் கட்டுத்தறியில் பிரவேசிக்கச் செய்தற்பொருட்டு இரண்டு உபாயங்களுள. ஒன்று பச்சைப்புல்லைக்காட்டுதல், சொரிந்து விடுதல் முதலியன. மற்றொன்று வாயினல் அதட்டுதல் தண்ட முதலியவற்றால் அடித்தல் என்பன. அவற்றுள் முதலாவதால் விசாரமின்றி விரைவாய்ப் பிரவேசிக்கப்படுகின்றது. இரண்டாவதால் இங்கும் அங்குமாக ஓடி மெல்ல மெல்ல பிரவேசிக்கப்படுகின்றது. அப்படியே சத்துரு மித்திரு முதலியோரிடத்துச் சமத்துவமாகிய சுகபோதனமும், பிராணுயாம பிரத்தியாகார முதலிய புருஷப் பிரத்தியனமுமாகிய இவ்விரண்டும் சித்தசாந்தி யுபாயங்களாம். அவற்றுள் முதலாவதாகிய மிருதுயோகத்தினல் சீக்கிரம் வசப்படு

த்துக. இரண்டாவதான ஹடயோகத்தினால் வேகமாய் வசப்படுத்தாது மெல்ல மெல்ல வசமாக்கவேண்டும்.

“द्रागभ्यासवशाद्याति यदा ते वासनोदयम् । तदाभ्यासस्य साफल्यं विद्धि त्वमरिमर्दन ॥

விருத்துயோகாப்பியாசத்தினால் எப்போது உனக்குச் சீக்கிரமாக சுப வாசனை யுதயமாகுமாயின், அப்போது சத்துரு நாசஞ்செய்யும் இராமா! அப்பியாசம் பலித்ததென் றறி.” அற்ப காத்தாற்சம்பவியாதென்று சங்கிக்கலாகாது.

“सदिग्धायामपि भृशं शुभामेव समाहर । शुभायां वासनावृद्धौ तात दोषो न कश्चन ॥

சந்தேக முண்டாகியபோதும் அடிக்கடி சுபத்தினையே கொள்ளுவாயாக. ஐய! சுபவாசனை விருத்தியானபோது ஒரு தோஷமுமில்லை.” அப்பியசிக்கப்படும் சுபவாசனை முற்றுப் பெற்றதா? இல்லையா? என்று சந்தேக முண்டாயின், அப்போதும் சுபத்தினையே அப்பியசிக்கவேண்டும். அது எப்படி ஆயிரம் ஜபத்தில் பிரவிருத்தித்தவனுக்குப் பத்தாவது நூற்றுக்கணக்குச் சந்தேகப்படுமாயின், அப்போது மறுபடியும் நூறு ஜபிக்க வேண்டுமோ, முடிவு பெறாததாயிருந்தால் முடிவுபெற்றுப் பயனைத்தருமோ, முடிவு பெற்றதாமாயின், அதன் விருத்தியால் ஆயிரம் ஜபமும் தூஷிக்கப்படுவதாகாதோ அதுபோல என்க.

“अव्युत्पन्नमना यावद्भवानज्ञाततत्पदः । गुरुशास्त्रप्रमाणैस्तु निर्णीतं तावदाचर । ततः पक्वकषायेण नूनं विज्ञातवस्तुना । शुभोऽप्यसौ त्वया त्याज्यो वासनौघो निराधिना ॥ यदतिशुभमनार्यसेवितं तच्छुभमनुसृत्य मनोज्ञभावशुद्ध्या । अधिगमय पदं सदा विशोकं तदनु तदप्यवमुच्य साधु तिष्ठ ॥

விற்பத்தியில்லாத மனதுடையவராய், எதுவரையில் தாம் தத்பதத்தினை அறியவில்லையோ, அதுவரையில் குருசாஸ்திரப் பிரமாணங்களால் நிர்ணயிக்கப்பட்டதனை ஆசரி(அநுஷ்டி)ப்பீராக. அதன்

பின் பக்குவமாகிய கஷாய(இராகமொழிந்ததான விவேக)த்தினால் நிச்சயமாக அறியப்பட்ட வஸ்துவினால் இந்தச் சுபவாசனைக் கூட்டமும் நிரோதஞ்செய்யும் தம்மால் விடத்தக்கதாம். அறிஞரே! ஏது மிகுந்த சோபனமான பத(மாகாத்மிய)முடையதும் ஆரியர்களால் சேவிக்கப்பட்டது மாமோ, அப்படிப்பட்ட சுபத்தினை அநுசரித்து, சுத்தமான கருத்தோடு மனதினை எப்போதும் சோகமின்றிய பதத்தினை அடையச் செய்வீராக. அதன்பின் அதனையும் விட்டு மெல்ல நிற்கக் கடவீர்."

இது வசிஷ்ட ராம சம்வாதம்.

ஆதலால் யோகாப்பியாசத்தினால் காமாதிகளின் அடக்கம் சம்பவித்தலால் ஜீவந்முக்தியில் விவாதம் செய்யத்தக்க தன்று.

॥ इति जीवन्मुक्तिस्वरूपम् ॥

இவ்வாறு ஜீவந்முக்திசொரூபம் நிரூபிக்கப்பட்டது.

---

॥ अथ जीवन्मुक्तलक्षणम् ॥

## ஜீவந்முக்தலக்ஷணம்.

சுருதி ஸ்மிருதிவாக்கியங்கள் ஜீவந்முக்தி உண்டென்பதில் பிரமாணங்களாம். அவைகளும் கடவல்லி முதலியவற்றில் "विमुक्तश्च विमुच्यते விமுக்தனும் விசேஷமாக விடுபடுகிறான்." என்று படிக்கப்படுகின்றன. ஜீவித்துக்கொண்டே திருஷ்டபந்தமாகிய காமாதிகளினின்றும் விசேஷமாக விடுபட்டவனாயிருந்து கொண்டே தேகவீழ்ச்சியில் (இனி)வரும் பந்தத்தினின்றும் விசேஷமாக விடுபடுகின்றான். ஞானத்திற்கு முன்னும் சமாதிகளைச் சம்பாதித்தலால் காமாதிகளினின்று விடுபடவே செய்கின்றான். அப்படியாயினும் உற்பன்னமாகிய காமாதிகளுக்கு அங்குப்பிரயத்தனத்தால் நிரோதமாம். இங்கோ புத்திவிருத்தியின்மையால் காமாதிகளுற்பத்தியாகாமையே அதனினும் விசேஷமாகச் சொல்லப்படுகின்றது. அப்படியே பிரளயத்திலும் தேகம் விழும்போதும் சிறிதுகாலம் வருந்தேகபந்தத்தி

னின்றும் விடுபடுகின்றான். இங்கு அத்தியந்த மோக்ஷமென்னும் அபிப்பிராயங்கொண்டு 'விசேஷமாக' என்று சொல்லப்பட்டது.

பிருகதாரணியகத்தில்

"यदा सर्वे प्रमुच्यन्ते कामा येऽस्य हृदि श्रिताः । अथ मर्त्योऽमृतो भवत्यत्र ब्रह्म समश्नुते ॥

எப்போது இவனுடைய இருதயத்தை யாசிரயித்திருப்பனவாகிய காமங்கள் எவையோ அவை யாவும் நீங்குகின்றனவோ அதன் பிறகு மர்த்தியன் (மரணதர்மமுடையவன்) அமிருத (மரணதர்மமில்லாத வ)னாகின்றான். இங்குப் பிரஹ்மத்தைச் செவ்வையாய் அநுபவிக்கின்றான்." என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

வேறு சுருதியிலும்,

"अचक्षुरचक्षुरिव सकर्णोऽकर्ण इव समना अमना इव ।

கண்ணுடையவனாயினும் கண்ணில்லாதவன் போலாகின்றான். காதுடையவனாயினும் காதில்லாதவன் போலாகின்றான். மனமுடையவனாயினும் மனமில்லாதவன் போலாகின்றான்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு வேறு சுருதிகளிலும் சொல்லப்பட்டுளது. ஸ்மிருதிகளில் ஜீவன்முக்தன் ஸ்திதப்பிரஞ்ஞன், பகவத்பக்தன், குணாதீதன், பிராஹ்மணன், அதிவர்ணாசிரமி முதலிய பெயர்களால் அங்கங்கு வியவகரிக்கப்படுகின்றது. வசிஷ்ட ராம சம்வாதத்தில் नृणां ज्ञानैकनिष्ठानाम ஞானமொன்றிலேயே நிலைத்துள்ள நரர்களுக்கு" என்று ஆரம்பித்து, "सत्किंचिदवशिष्यते-ஓர் சத்து மிஞ்சுகின்றது." என்று முடிகின்ற கிரந்தத்தினால் ஜீவன்முக்தன் படிக்கப்படுகின்றான்.

அது வருமாறு:—वसिष्ठ —नृणां ज्ञानैकनिष्ठानामात्मज्ञानविचारिणाम् । सा जीवन्मुक्ततोदेति विदेहमुक्ततेव या ॥

வசிஷ்டர், "ஞானமொன்றிலேயே நிற்கும் ஆத்மஞான விசாரமுடைய நரர்களுக்கு விதேகமுக்தத் தன்மை போன்றிருப்பது எதுவோ, அந்த ஜீவன்முக்தத்தன்மை உதயமாகின்றது." இலௌகிகவைதிக கர்மத்தியாகம் ஞானமொன்றிலேயே நிற்குந்தன்மையாம். தேகேந்திரியங்களின் இருப்பு இருப்பின்மைகள் மாத்திரத்தால் முக்தியி

ரண்டினுக்கும் விசேஷமாம்; அநுபவத்தால் விசேஷமில்லை; துவைதத்தோற்றம் இரண்டிடத்து மின்மையால்.

ஸ்ரீராமர்:—"ब्रह्मन्विदेहमुक्तस्य जीवन्मुक्तस्य लक्षणम् । ब्रूहि येन तथैवाहं यते शास्त्रजया दृशा ॥

பிராஹ்மணோத்தமரே! விதேக முக்தனுடைய லக்ஷணமும் ஜீவந்முக்தனுடைய லக்ஷணமும் சொல்லியருள்வீராக; எதனால் யான் அவ்வாறே சாஸ்திரஜந்யமான திருஷ்டியி(ஞானத்தி)னால் முயல்வேனாக."

வசிஷ்டர்:—"यथास्थितमिदं यस्य व्यवहारवतोऽपि च । अस्तं गतं स्थितं व्योम स जीवन्मुक्त उच्यते ॥

(லோகதிருஷ்டியால்) வியவகாரமுடையவனாயினும் எவனுக்கு முன்னிருந்தபடியே இருப்பதான இஃது(திருசியம்) அஸ்தமனம் அடைந்து, ஆகாயமாத்திரம் நிலைத்திருக்கின்றதோ, அவன் ஜீவந்முக்தனென்று சொல்லப்படுகின்றான்." இது அதாவது காணப்படும் மலை யாறு கடல்முதலிய ஜகத்து அறிபவனது தேகேந்திரிய வியவகாரத்தோடு மகாப்பிரளயத்தில் பரமேசுவரனால் சங்கரிக்கப்பட்டதாய்ச் சத்சொரூபமாயடங்குதலால் மறைவதாகின்றது. இங்கோ (ஜீவந்முக்த தசையிலோ) அவ்வாறு இல்லை. மற்றோ, தேகேந்திரியாதி வியவகாரம் இருக்கவே செய்கின்றது. கிரி நதியாதிகளும் ஈசுவரனால் சம்ஹரிக்கப்பட்டமையால் முன்னிருந்தது போலவே இருப்பனவாய் மற்றச் சகலப்பிராணிகளாலும் வெளிப்படையாய்க் காணப்படுகின்றன. ஜீவந்முக்தனுக்கு அதனையுணரும் விருத்தியின்மையால் சுழுத்தியிற் போல யாவும் மறைதலையடைகின்றன. சுவயம் பிரகாசமான ஞானாகாய மாத்திரம் மிஞ்சுகின்றது. பெத்தனுக்குச் சுழுத்தியில் தாற்காலிக விருத்தியில்லாமை சமமாயினும், வரும் புத்திவிருத்தி பீஜம்(வித்து) இருத்தலால் ஜீவந்முக்தத்துவ மில்லை.

"नोदेति नास्तमायाति सुखे दुःखे मुखप्रभा । यथाप्राप्ते स्थितिर्यस्य स जीवन्मुक्त उच्यते ॥

எவனுக்குச் சுகத்திலும், துக்கத்திலும் முகப்பிரபை உதிக்கிறதில்லையோ, மறைகிறது மில்லையோ, கிடைத்ததில் நிலைப்பு இருக்கின்றதோ அவன் ஜீவன்முக்தனென்று சொல்லப்படுகின்றான்." முகப்பிரபையாவது ஹர்ஷம் (முக மலர்ச்சி). மாலை, சந்தனம், சத்காரம் (நன்குமதிப்பு) முதலிய சுகங்கிடைத்த போதும் சம்ஸாரிகளைப் போல ஹர்ஷ முண்டாகிறதில்லை. முகப்பிரபையின் மறைவாவது தைன்யம் (தீனத்துவம்,) தனக்கேடு, அவமதிப்பு முதலிய துக்கம் நேர்ந்தபோது நீணுகிறதில்லை. இப்போதைய தனது பிரயத்தின விசேஷமின்றியே பிராப்தகர்மத்தால் சம்பாதிக்கப்பட்டதாய் முற்பிரவாகத்தால் வந்த பிக்ஷாக்கமுதலியன கிடைத்ததெனப்பட்டதாம். அதில் நிலைப்பாவது தேகாசைக்ஷயாம். சமாதியின் திடத்தன்மையால் மாலை சந்தனமுதலிய தோற்ற மின்மையாலும் ஒருபோது சமாதியினின்று விழித்தகாலத்தும் மேலெழுந்தாற்போலத் தோற்றினும், விவேகதிடத்தன்மையால் தள்ளுதல் கொள்ளுதற்றன்மைப் புத்தியின்மையாலும் ஹர்ஷம்(மலர்ச்சி) முதலியன இன்மை பொருந்துகின்றது.

"यो जागर्ति सुषुप्तिस्थो यस्य जाग्रन्न विद्यते । यस्य निर्वासनो बोधः स जीवन्मुक्त उच्यते ॥

எவன் ஜாக்கிரத்துள்ளவனைச் சுழுத்தியிலிருப்பவனாகின்றானோ எவனுக்கு ஜாக்கிரமில்லையோ, எவனுக்கு வாசனையில்லாத போதமிருக்கின்றதோ, அவன் ஜீவன்முக்தனெனப்படுகின்றான்." சக்ஷு முதலிய இந்திரியங்கள் தத்தம் கோளகங்களிலிருத்தலால் உபாதியடையாதிருத்தலின், ஜாக்கிரத்துள்ளவனெனப்படுகின்றான். மனோவிருத்தியின்மையால் சுழுத்தியிலிருப்பவனாகின்றான். இதனாலேயே இந்திரியங்களால் பொருள்களை புணர்தல் என்னும் இந்த ஜாக்கிர லக்ஷண மின்மையால் ஜாக்கிரமில்லை யெனப்பட்டது. போதமிருக்கினும் உண்டாகின்ற பிரஹ்ம வித்துத்தன்மையியான முதலியனவும் போகார்த்தமாய்ச் சம்பாதிக்கப்படும் காமாதிகளும் புத்திதோஷம் வாசனையாம். விருத்தியின்றிய தன்மையினால் அத்தோஷமின்மையால் வாசனையில்லாத தன்மையுளது.

"रागद्वेषभयादीनामनुरूपं चरन्नपि । योऽन्तर्व्योमवदत्यच्छः स जीवन्मुक्त उच्यते ॥

எவன் இராகத்துவேஷபயாதிகளை யநுசரித்த தன்மையாக நடக்கினும், உள்ளே ஆகாயம்போல் சொச்சமாயிருக்கின்றானோ, அவன் ஜீவன்முக்தனெனப்படுகின்றான்." இராகத்தை யநுசரித்த தன்மை யாவது போஜனாதிப் பிரவிருத்தி, துவேஷத்தை யநுசரித்ததன்மை யாவது பௌத்தகாபாலிகர் முதலியோரினின்றும் வேற்றுமுகனாதல். பயத்தை யநுசரித்த தன்மையாவது பாம்பு புலிமுதலியவற்றினின்றும் விலகுதல். முதலிய என்னும் சொல்லால் மாற்சரிய முதலியன கொள்ளப்படும். மாற்சரியத்தை யநுசரித்த தன்மையாவது மற்ற யோகிகளைவிட அதிகமாய்ச் சமாதி யநுஷ்டானஞ்செய்தல். சமாதியினின்று விழித்தபோது முற்பழக்கத்தாலடையப்பட்ட இத்தன்மைய ஆசரணம்(நடை) இருந்தபோதிலும் விசிராந்தியடைந்த சித்தமுடையவனுக்குக் கலக்கப்படுந் தன்மையின்மையால் உள்ளே சொச்சத்தன்மை யிருக்கின்றது. எப்படி ஆகாயத்தில் புகை தூசி மேகமுதலியவற்றோடு கூடிய தன்மையிருக்கினும், பற்றப்படாத சுபாவமுடைமையால் சொச்சத்தன்மை யிருக்கின்றதோ அதுபொல என்பது பொருள்.

"यस्य नाहंकृतो भावो बुद्धिर्यस्य न लिप्यते । कुर्वतोऽकुर्वतो वाऽपि स जीवन्मुक्त उच्यते ॥

"செய்யினும் செய்யாவிடினும் எவனுடைய சுபாவம்(ஆத்மா) அகங்கரிக்கப்பட்டதன்றோ, எவனுடைய புத்தி பற்றப்படுகிறதில்லையோ, அவன் ஜீவன்முக்தனென்று சொல்லப்படுகிறான்." முற்பாதி சுலோகம் வித்வத்ஸந்நியாசப் பிரஸ்தாவத்தில் விரித்துரைக்கப்பட்டது. உலகத்தில் பெத்த புருஷனுக்குச் சாஸ்திரீயமான கர்மஞ் செய்யின், அப்போது சிதாத்மா நான் கர்த்தாவென்று அகங்கரிக்கப்பட்டதாகின்றது. சுவர்க்கத்தை அடைவேன் என்னும் சந்தோஷத்தினால் புத்தி பற்றப்படுகிறது. செய்யாவிடின் விட்டவனாகின்றேன் என்று அகங்கரிக்கப்பட்ட தன்மையும், சுவர்க்கம் கிடையாததினாலாம் விஷாத (வருத்த)மாகிய பற்றுதலுமுண்டாகின்றது. இவ்வாறே வைதிகக் கர்மத்திலும் இலௌகிக கர்மத்திலும் இயன்றபடி

பொருத்திக் கொள்ளவேண்டியது. ஜீவன்முக்தனுக்கோ தாதாத்மிய (அகங்காரமாகிய அது தானுதலாகிய) அத்தியாசமில்லாமையால் அவ்விரண்டு தோஷமுமில்லை.

"यस्मान्नोद्विजते लोको लोकान्नोद्विजते च यः । हर्षामर्षभयान्मुक्तः स जीवन्मुक्त उच्यते ॥

எவனிடத்தினின்றும் உலகம் கலக்கமடைகிறதில்லையோ, உலகத்தினின்றும் எவன் கலக்கத்தை யடைகிறதில்லையோ, சந்தோஷ வியசன பயமில்லாத அவன் ஜீவன்முக்த னெனப்படுகின்றான்." வசவு அடி முதலியவற்றில் பிரவர்த்தியாமையால் இவனிடத்தினின்றும் உலகம் கலக்கத்தை யடைகிறதில்லை. இதனாலேயே இவனிடத்தில் உலகத்திற்கு வைதலடித்தலாதி பிரவிருத்தி யுண்டாகாமையாலும், யாரேனுமோர் துஷ்டனுக்கு அவ்வித பிரவிருத்தியுண்டாயினும் இவனுடைய சித்தத்தில் அப்படிப்பட்ட விகற்ப முதயமாகாமையாலும் இவனும் கலக்க மடைகிறதில்லை.

"शान्तसंसारकलनः कलावानपि निष्कलः । यः सचित्तोऽपि निश्चित्तः स जीवन्मुक्त उच्यते ॥

எவன் சம்ஸாரகலனங்கள் ஒழிந்தவனோ, கலைகளுடையவனாயினும் கலைகளில்லாதவனோ, சித்தமுடையவனாயினும் சித்தமில்லாதவனோ, அவன் ஜீவன்முக்த னெனப்படுகின்றான்." சத்துரு மித்திரு மானம் அவமானம் முதலிய விகற்பங்கள் சம்ஸார கலனங்களெனப்படும். அறுபத்து நான்கு வித்தைகள் கலைகளெனப்படும். அவை யிருந்தும் அவற்றின் அபிமானமும் வியவகாரமு மில்லாமையால் கலைகளில்லாதவனாகின்றான். சித்தம் சொரூப (சத்துவவடிவ)மாக இருந்தாலும் விருத்தி யுதியாமையின் சித்தமில்லாதவனாவன். சித்தமென்னுமிடத்துச் சிந்தையென்பது பாடமாயின் வாசனாவசத்தினால் ஆத்மத்தியான விருத்தியிருக்கினும் இலௌகிக விருத்தியில்லாமையால் சிந்தையில்லாதவனாவன்.

"यः समस्तार्थजातेषु व्यवहार्यपि शीतलः । परार्थेष्विव पूर्णात्मा स जीवन्मुक्त उच्यते ॥

எவன் சகல காரியக்கூட்டங்களிலும் வியவகரிப்பவனாயினும் பிறர் காரியங்களிற்போல சீதளமாயும் பூர்ணாத்மாவாயு மிருக்கின்றானோ அவன் ஜீவன்முக்தனெனப்படுகின்றான்." ஒருவன் பிறன் வீட்டில் விவாகோற்சவ முதலியவற்றில் தானாகச்சென்று அவனது பிரியத்திற்காக அவனது காரியங்களில் வியவகரிக்கினும் லாபாலாபங்களில் சந்தோஷ வியசனவடிவ புத்தி சந்தாபத்தையடைகிறதில்லை. இப்படியே இம்முக்தன் தனது காரியத்திலும் சீதலமாயிருப்பன்; அதாவது சந்தாபத்தை யடைகிறதில்லை. சந்தாபமி(கோபமி)ன்மை மாத்திரத்தால் சீதலமாயிருப்ப னென்பதில்லை; பரிபூர்ண சொரூபாநுசந்தானத்தினாலும் சீதலமா யிருப்பன். இவ்வாறும் ஜீவன்முக்த லக்ஷணம்.

॥ इति जीवन्मुक्तलक्षणम् ॥

இவ்வாறு ஜீவன்முக்தலக்ஷணம் நிரூபிக்கப்பட்டது.

---

## ॥ अथ विदेहमुक्तलक्षणम् ॥

## விதேகமுக்தலக்ஷணம்.

இனி விதேகமுக்தலக்ஷணம் வருமாறு:—

"जीवन्मुक्तपदं त्यक्त्वा स्वदेहे कालसात्कृते ।
विशत्यदेहमुक्तत्वं पवनोऽस्पन्दतामिव ॥

ஜீவன்முக்த பதத்தை விட்டுத் தனது தேகம் காலத்தால் விழும்போது காற்று அசைவின்மையை யடைவதுபோல விதேக முக்தத்தன்மையை யடைகிறான்." வாயுவானது ஒரு சமயம் அசைவைவிட்டு, அசைவின்மை வடிவமாக நிற்பதுபோல முக்தாத்மா உபாதியினாலாகிய சம்ஸாரத்தினை விட்டுத் தனது வடிவமாக நிற்கின்றான்.

"विदेहमुक्तो नोदेति नास्तमेति न शाम्यति ।
न सन्नासन्न दूरस्थो न चाहं न च नेतरः ॥

விதேகமுக்தன் உதிக்கிறதுமில்லை. அஸ்தமிக்கிறதுமில்லை. சமிக்கிறதுமில்லை. சத்துமல்லன். அசத்துமல்லன். தூரத்துள்ளவனு

மல்லன், யாதுமல்லன், அந்நியமுமல்லன்.* உதயாஸ்தமனங்களா வன சந்தோஷ வியசனங்களாம். சமிக்கிறதுமில்லை யென்றதனால் அதனை விட்டவனுமல்லன்; இலிங்கதேகம் இவ்விடத்திற்றானே ஒடுங்குதலால், சத்து வாச்சியனும் அதாவது ஜகத்துக்குக் காரணமான அவித்தியாமாயோபாதிகளுள்ள பிராஞ்ஞேசுவரனும் அல்லன். அசத்து வாச்சியனும் அதாவது பூதபௌதிகமு மல்லன். தூரத்துள்ளவனும் என்பதனால் மாயாதீதனுமல்லன். தூரத்துள்ளவனும் என்றவும் மையால் ஸ்தூலத்தைப்புசிக்கும் சமீபத்திருக்குந்தன்மையும் விலக்கப்படுகின்றது. யாதும் என்றதனால் சமஷ்டியு மல்லன். அந்நியமு மென்றதனால் வியஷ்டியு மல்லன். வியவகார யோக்கிய விகற்ப மின்மையால் யாது மில்லை யென்பது பொருள்.

"ततः स्तिमितगम्भीरं न तेजो न तमस्ततम् ।
अनाख्यमनभिव्यक्तं सत्किंचिदवशिष्यते ॥

அதன்பின் மிக ஆழமுள்ளதும், ஒளியில்லாததும், இருளால் வியாபிக்கப்பட்டதல்லாததும், பெயரில்லாததும், வெளிப்படுத லில்லாததுமான ஓர்சத்து மிஞ்சுகின்றது." இத்தன்மையதாகிய விதேகமுக்தியோடு சமமாதலாகிய உயர்வு சொல்லப் பட்டிருத்தலால், ஜீவித்திருப்பவனை முக்தனுக்கும் எவ்வளவுக் கெவ்வளவு நிர்விகற்பமிகுதிப்பாடுண்டோ அவ்வளவுக் கவ்வளவு உத்தமத்துவம் காணத்தக்கதாம்.

இஃது வசிஷ்ட ராம சம்வாதம் சொல்லப்பட்டது.

பகவத்கீதையில் இரண்டாவது அத்தியாயத்தில் ஸ்திதப்பிரஞ்ஞன் *(நிலைத்த பிரஞ்ஞையை யுடையவன்) சொல்லப்படுகின்றான்:—

अर्जुन उवाच—அர்ஜுனன் சொல்லலுற்றான்:—

"स्थितप्रज्ञस्य का भाषा समाधिस्थस्य केशव ।
स्थितधीः किं प्रभाषेत किमासीत व्रजेत किम् ॥

கேசவரே! சமாதியிலிருக்கும் ஸ்திதபிரஞ்ஞனது வார்த்தை யாது? அதாவது எவ்வித லக்ஷணவாசகங்களான சொற்களால் எல்லோராலும் சொல்லப்படுகிறான்? ஸ்திரத்த திடபுத்தியுடையவன் என்ன பேசுவான்? எப்படி உட்காருவான்? எப்படி நடப்பான்?" பிரஞ்ஞையைப்

* பரவைராக்கியம் மேல் மனோநாசப் பிரகரணத்தில் நிரூபிக்கப்படும்.

யுடையவன் பிராஞ்ஞன். பிரஞ்ஞையாவது தத்துவஞானம், அது ஸ்திதம் அஸ்திதமென்று இருவகைப்படும். எப்படிக் கள்ளநாயக னிடத்து பற்றுள்ள ஸ்திரீயின் புத்தி எல்லா வியவகாரங்களிலும் கள்ளநாயகனையே தியானிக்கின்றதோ, பிரமாணத்தினால் செய்யப் படும் வீட்டுக்காரியங்களையும் மறந்து விடுகின்றதோ, அதுபோல *பரவைராக்கியத்தோடு கூடியதாய் யோகாப்பியாசத்தின் தேர்ச்சி யால் அத்தியந்தம் வசமாக்கப்பட்ட சித்தத்திற்குத் தத்துவஞான முண்டானபோது, அந்தப் புத்தி கள்ளநாயகனைப் போல இடை விடாது தத்துவத்தைத் தியானிக்கின்றது. அத்தன்மைய இது ஸ்திதப் பிரஞ்ஞானமாம். முற்கூறப்பட்ட குணமில்லாதவனுக்கு யாதேனு மோர் புண்ணிய விசேஷத்தினால் ஒருகாலத்துத் தத்துவ ஞான முதயமாயினும் வீட்டுக்காரியத்தினைப்போல அவ்விடத்திற் றானே தத்துவஞானம் மறக்கப்படுகின்றது. அத்தன்மைய இஃது அஸ்திதப்பிரஞ்ஞானமாம். இவ்வபிப்பிராயங்கொண்டே வசிஷ்டர் கூறுகின்றார்:—

"परव्यसनिनी नारी व्यग्राऽपि गृहकर्मणि ।
तदेवास्वादयत्यन्तः परसङ्गरसायनम् ॥
एवं तत्त्वे परे शुद्धे धीरो विश्रान्तिमागतः ।
तदेवास्वादयत्यन्तर्बहिर्व्यवहरन्नपि ॥

பரபுருஷனிடத்துப் பற்றிய நாரி கிருககர்மங்களில் பற்றுள்ளவளா யினும் உள்ளே பரபுருஷசங்க சுகத்தினையே விடாதிருக்கின்றாள். அதுபோலச் சுத்தமாகிய பரதத்துவத்தில் விசிராந்தியடைந்த தீரன் வெளியில் வியவகாரஞ் செய்யினும் உள்ளே அத்தத்துவத்தினையே பற்றியிருப்பன்."

அங்கு ஸ்திதப்பிரஞ்ஞன் சமாஹிதன் (சமாதியுடையவன்) வியுத்திதன் (சமாதியினின்று விழித்தவன்) எனக் கால வேற்றுமை யால் இருவகைப்படுவன். அவ்விருவருடைய லக்ஷணத்தினையும் (சுலோகத்தின்) முற்பிற்பாதிகளால் கேட்கின்றான்.

---

* பரவைராக்கியம் மேல் மனோநாசப் பிரகாணத்தில் நிரூபிக்கப்படும்.

श्रीभगवानुवाच ॥ ஸ்ரீ பகவான் சொல்லுகின்றார்:—

प्रजहाति यदा कामान्सर्वान्पार्थ मनोगतान् ।
आत्मन्येवात्मना तुष्टः स्थितप्रज्ञस्तदोच्यते ॥

பார்த்த! எப்போது மனதிலுள்ள எல்லாக்காமங்களையும் விடுகின்றானோ, ஆத்மாவினிடத்திலேயே ஆத்மாவினால் சந்தோஷ மடைக்தவனாகின்றானோ அப்போது ஸ்திதப்பிரஞ்ஞனெனப் படுகின்றான்." காமங்கள் பாகியம், ஆந்தரம், வாசனாமாத்திரவடிவமென மூவகைப்படும். அவற்றுள் சம்பாதிக்கப்பட்ட மோதக (இலட்டு)முதலியன பாகியமா(வெளியா)ம். ஆசா(ஆசைப்படும்)மோதக முதலியன ஆந்தரமா (உள்ளா)ம். வழியிற் கிடக்கும் துரும்பு முதலியவற்றைப் போல மேலெழுந்த வண்ணமாய்த் தோன்றுவது வாசனாவடிவமாம். சமாதியடைந்தவன் சகலபுத்தி விருத்திகளும் நசித்தலால் எல்லாவற்றையும் விடுகின்றான். இவனுக்கு முகமலர்ச்சியாகிய குறியினால் அறியத்தக்க சந்தோஷமுண்டு. அதுவும் ஆத்மாவினிடத்திலேயேயாம்; கர்மங்களை விட்டிருத்தலாலும், புத்தி பரமாநந்தவடிவத்தால் ஆத்மாபிமுகமாயிருத்தலாலும்; காமங்களில் உண்டானதன்று. இங்கு சம்பிரஞ்ஞாத சமாதியிற்போல ஆத்மாநந்தம் மனோவிருத்தியினால் விஷயிக்கப்படுகிறதில்லை. மற்றோ, சுவப்பிரகாச சித்துவடிவ ஆத்மாவாக விஷயிக்கப்படுகிறது. சந்தோஷமும் விருத்திவடிவினதன்று; அச்சம்ஸ்கார வடிவினதாம். இவ்வித லக்ஷண வாசகங்களான சப்தங்களால் சமாதியுடையவன் பேசப்படுகின்றான்.

"दुःखेष्वनुद्विग्नमनाः सुखेषु विगतस्पृहः ।
वीतरागभयक्रोधः स्थितधीर्मुनिरुच्यते ॥

துக்கங்களில் உத்வேகமடையும் மனமில்லாதவனும் சுகங்களில் ஸ்பிருஹை (ஆசை) நீங்கியவனும் இராகம் பயம் குரோதமென்பவையொழிந்தவனுமாகிய முநி ஸ்திததீ (திடபுத்தியுடையவன்) என்று சொல்லப்படுகின்றான்."

துக்கமாவது இராகாதி நிமித்தத்தாலுண்டாகியதும் இரஜோகுண விகாரவடிவினதும், சந்தாப (எரிப்பு)வடிவினதுமான பிரதிகூல சித்தவிருத்தி. அத்தன்மைய துக்கம் வாய்த்தகாலத்து யான் பாபி; துராத்மாவாகிய என்னைச் சுடவேண்டும் என்னும் அநுதாப

வடிவினதாய்த்தமோகுண விகாரத்தன்மையாக் உண்டாகும் பிராந்தி வடிவ சித்தவிருத்தி உத்வேகமாம் (மனக்கொதிப்பாம்). இது விவேசத்தினைப் போல தோற்றிய போதினும் முற்பிறப்பில் உள்ளதாமாயின், அது பாபப்பிரவிருத்தியின் பிரதிபந்தக மாதலால் பிரயோஜன முடையதாகின்றது. இப்போதோ பயனின்றியதாகுதலால் பிராந்தியாதல் காணத்தக்கதாம். சுகமென்பது இராஜ்ய புத்திர லாபாதிகளா லுண்டாகியதும் சாத்துவிகமும் பிரீதி வடிவினதுமான அநுகூல சித்தவிருத்தியாம். அச்சுக முண்டானபோது இனிவரும் அத்தன்மைய சுகத்திற்குக் காரணமான புண்ணியத்தை யநுஷ்டியாது வீணாகவே அதன் (வந்த அச்சுகத்தின்) அபேக்ஷையாகிய தாமஸீ (தமப்பிரதான) சித்தவிருத்தி ஸ்பிருஹையாம். அதிலும், சுகத்துக்கங்கள் பிராரப்த கர்மத்தினு லடையப்படுவனவா யிருத்தலாலும் எழுந்தசித்த முடையவனுக்கு விருத்தி சம்பவித்தலாலும் அவ்விரண்டும் செவ்வையாய்ப் பொருந்துகின்றன. விவேகிக்கோ உத்வேகம் ஸ்பிருஹையென்னும் இரண்டும் சம்பவியா. அப்படியே இராகபயக் குரோதங்களும் தாமஸத்தன்மையால் கர்மத்தா லடையப்படாதன வாயிருத்தலின் இவனுக்கில்லை. இத்தன்மைய லக்ஷணத்தால் இலக்ஷிக்கப்பட்ட திடபுத்தியினன் தன்னநுபவத்தை வெளிப்படுத்தலால் சிஷ்யர்களுக் குபதேசித்தற்பொருட்டு மனக்கொதிப்பின்மை ஆசையின்மை முதலியவற்றை யறிவிக்கும் வார்த்தையினைப் பேசுகின்றான் என்பது அபிப்பிராயம்.

"यः सर्वत्रानभिस्नेहस्तत्तत्प्राप्य शुभाशुभम् ।
नाभिनन्दति न द्वेष्टि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥

எவன் எங்கும் சிநேக மில்லாதவனாய் அந்தந்தச் சுபா சுபத்தினை அடைந்து அபிநந்தி (களி)க்கிறது மில்லையோ, துவேஷிக்கிறது மில்லையோ, அவனுடைய பிரஞ்ஞை பிரதிஷ்டிக்கப்பட்ட(நிலைத்த)தாம்." எது உள்ளபோது பிறனது லாபாலாபங்கள் தன்னிடத்தில் ஆரோபிக்கப்படுகின்றனவோ அத்தன்மைய அந்நிய விஷயமான தாமஸ விருத்திவிசேஷம் சிநேகமாம். சுகத்திற்கு ஏதுவான தனது களத்திர முதலிய சுபவஸ்துக்களின் குணத்தைக் கூறுதல் முதலிய பிரவிருத்தியினைச் செய்யும் புத்திவிருத்தி அபிநந்தமா (களிப்பா)ம்

இங்கு குணத்தைக்கூறுதல் அந்நியரை ருசிப்பிக்கும் பிரயோஜன முடையதாகாமையால் வியர்த்தமாகலின் அதற்கேதுவான அபிநந்தம் தாமஸமாம். அசூயை யுண்டுபண்ணுதலால் துக்கத்திற்கு ஏதுவான அந்நியனுடைய வித்தை முதலியன இவனை முன்னிட்டு அசுப விஷயமாம். அதன் நிந்தையில் பிரவிருத்திக்கச் செய்யும் புத்தியின் பிரவிருத்தி துவேஷமாம். அதுவும் தாமஸமாம்; அதன் நிந்தை நிவர்த்திக்கும் பிரயோஜன முடையதாகாமையால் வியர்த்தமாதலின். அத்தன்மைய இத்தாமஸ தர்மங்கள் எப்படி விவேகியினிடத்துச் சம்பவிக்கும் ?

"यदा संहरते चायं कूर्मोऽङ्गानीव सर्वशः ।
इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥

எப்போது இவன், ஆமை தன் னுறுப்புக்களை யடக்கிக்கொள்வதுபோல இந்திரிய விஷயங்களினின்றும் இந்திரியங்களை எல்லாவிதத்தாலும் அடக்குகின்றானோ, அப்போது அவனுடைய பிரஞ்ஞை பிரதிஷ்டிக்கப்பட்டதாம்."

சமாதியினின்று விழித்தவனுக்குச் சகல தாமஸ விருத்திகளு மில்லாமை முன்னிரண்டு சுலோகங்களால் சொல்லப்பட்டன. சமாதியிலிருப்பவனுக்கு விருத்திகளே இல்லாமையால் தாமஸத்தன்மைச் சங்கை யேது என்பது அபிப்பிராயம்.

"विषया विनिवर्तन्ते निराहारस्य देहिनः ।
रसवर्जं रसोऽप्यस्य परं दृष्ट्वा निवर्तते ॥

ஆகார (உத்தியோக) மில்லாத தேகிக்கு விஷயங்கள் நீங்குகின்றன. இவனுடைய ரஸமும் பரத்தைக் கண்டு ரஸமின்றியதாய் நீங்குகின்றது."

பிராரப்த கர்மமானது சுகதுக்கங்கட்குக் காரணமான சந்திரோதயம், அந்தகார முதலிய சிலவிஷயங்களைத் தானகவே சம்பாதிக்கின்றது. வீடு நில முதலிய பிறவற்றையே புருஷனது முயற்சிவாயிலாகச் சம்பாதிக்கின்றது. அவற்றுள், சந்திரோதய முதலியன இந்திரியாதி சங்காரலக்ஷண முள்ள பூர்ணமான சமாதியினாலேயே நீங்குகின்றது; வேறு வகையால் நீங்குகிறதில்லை. வீடு

முதலியனவோ சமாதியின்றியும் நீங்குகின்றன. உத்தியோகம் (முயற்சி) இல்லாதவனுக்கு வீடு முதலிய விஷயங்கள் நீங்குகின்றன; இரஸமோ நீங்குகிறதில்லை. ரஸம் மானஸமான ஆசை. அதுவும் பராநந்த வடிவப் பிரஹ்மத்தின் தரிசன முண்டாகுங்கால் சொற்பாநந்த ஹேதுக்களினின்றும் நீங்குகின்றது;

"किं प्रजया करिष्यामो येषां नोऽयमात्माऽयं लोकः ।

எந்த நமக்கு இவ்வாத்மாவாகிய இந்த லோகமுளதோ அந்த நாம் பிரஜையினால் என்ன செய்யப்போகிறோம்." என்னும் சுருதியினால்:

"यततो ह्यपि कौन्तेय पुरुषस्य विपश्चितः ।
इन्द्रियाणि प्रमाथीनि हरन्ति प्रसभं मनः ॥
तानि सर्वाणि संयम्य युक्त आसीत मत्परः ।
वशे हि यस्येन्द्रियाणि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥

குந்திபுத்திரா! யத்தனஞ் செய்கின்ற விவேகி புருஷனது மனதையும் மிகவருத்தும் இந்திரியங்கள் வலிந்து இழுக்கின்றன. பரப்பிரஹ்மமாகிய என்னிடத்து அநந்நிய பக்தியுள்ளவன் அவ்வெல்லாவற்றையும் அடக்கி யோக முடையவனாயிருக்கக்கடவன். எவனுடைய இந்திரியங்கள் வசத்திலேயே இருக்கின்றனவோ அவனுடைய பிரஞ்ஞை பிரதிஷ்டிக்கப்பட்டதாம்."

உத்தியோகத்தினை விட்டுப் பிரஹ்மதரிசனப் பிரயத்தனம் செய்கிறவனுக்கும் யாதேனுமோர்சமய முண்டாகும் பிரமாதத்தினை (சோர்வை) பரிக்கும்பொருட்டுச் சமாதியப்பியாசமாம். இஃது அவன் என்ன செய்வான் என்னும் பிரசினத்தின் உத்தரமாம்.

"ध्यायतो विषयान्पुंसः सङ्गस्तेषूपजायते ।
सङ्गात्संजायते कामः कामात्क्रोधोऽभिजायते ॥
क्रोधाद्भवति संमोहः संमोहात्स्मृतिविभ्रमः ।
स्मृतिभ्रंशाद्बुद्धिनाशो बुद्धिनाशात्प्रणश्यति ॥

விஷயங்களைத் தியானிக்கின்ற புருஷனுக்கு அவற்றில் சங்கம் உண்டாகின்றது. சங்கத்தால் காம முண்டாகின்றது. காமத்தால் குரோத முண்டாகின்றது. குரோதத்தால் நல்ல மோகமுண்டா

கிறது. சன்மோகத்தால் ஸ்மிருதி விப்பிரமமுண்டாகின்றது. ஸ்மிருதி விப்பிரமத்தால் புத்திநாச முண்டாகின்றது. புத்தி நாசத்தால் கெடுகின்றான்."

சமாதி யப்பியாச மில்லாதபோது பிரமாத முண்டாகுங் கிரமம் உபந்நியசிக்கப்பட்டது. சங்கமாவது தியேய (தியானிக்கப்படுகின்ற) விஷயசந்நிதி (அண்மை). சன்மோகமாவது விவேக பராமுகத்தன்மை. ஸ்மிருதி விப்பிரமாவது தத்துவாநுசந்தான மின்மை. புத்தி நாசமாவது விபரீத பாவனைப் பெருக்கத் தோஷத்தினால் பிரதிபந்திக்கப்பட்ட ஞானத்திற்கு மோக்ஷத்தினைத் தருந்தன்மையாகிய சாமர்த்திய மின்மையாம்.

"रागद्वेषवियुक्तैस्तु विषयानिन्द्रियैश्चरन् ।
आत्मवश्यैर्विधेयात्मा प्रसादमधिगच्छति ॥

வசீகரிக்கப்பட்ட மனதுடையவன் இராகத்துவேஷங்களி னின்றும் நீங்கியனவும், தன்வச மாக்கப்பட்டனவுமாகிய இந்திரியங்களால் விஷயங்களில் சரித்தும் பிரசாதத்தை அடைகின்றான்."

பிரசாதம் நிர்மலத்தன்மை=பந்தமின்மை. சமாதி யப்பியாசத்தோடு கூடியவன் அவ்வாசனா பலத்தால் விழித்தபோது இந்திரியங்களால் வியவகரிக்கினும், பிரசாதத்தைச் செவ்வையாய் அடைகின்றான். இது அவன் எப்படி நடப்பான் என்னும் பிரசினத்தின் உத்தரம்.

மேலுள்ள வெகு கிரந்தங்களாலும் ஸ்திதப்பிரஞ்ஞன் விரிக்கப்பட்டுளன். அப்படியானால் பிரஞ்ஞையின் ஸ்திதி யுற்பத்திகளுக்கு முன்னும் சாதனத்தன்மையாக இராகத் துவேஷங்களின்றிய தன்மை அபேக்ஷிக்கப்பட்டுளதே யெனின் சரிதான். அவ்வாறாயினும் விசேஷமுளது. அதுவும் சிரேய்யாமார்க்க கிரந்தக்காரரால்

"विद्यास्थितये प्राग्ये साधनभूताः प्रयत्ननिष्पाद्याः ।
लक्षणभूतास्तु पुनः स्वभावतस्ते स्थिताः स्थितप्रज्ञे ॥
जीवन्मुक्तिमितीमां वदन्त्यवस्थां स्थितात्मसंबोधाम् ।
बाधितभेदप्रतिभामबाधितात्मावबोधसामर्थ्यात् ॥

வித்தியா ஸ்திதிக்குமுன் எந்தச் சாதனங்கள் லக்ஷணவடிவ மாகப் பிரயத்தனத்தாற் சம்பாதிக்கப்பட்டனவோ, அவை ஸ்திதப்பிரஞ்ஞனிடத்தில் சுபாவமாக நிலைத்திருக்கின்றன. பாதிக்கப்படாத ஆத்மஞான சாமர்த்தியத்தால் நிலைத்த ஆத்மஞானமும், பாதிக்கப்பட்ட பேதத் தோற்றமுடையதுமான இவ்வவஸ்தையினை ஜீவன்முக்தியென்பர்." என்று காட்டப்பட்டுளது. பகவத்பக்தன் கீதையின் 12-வது அத்தியாயத்தில் பகவானால் வர்ணிக்கப்பட்டிருக்கின்றான்:—

"अद्वेष्टा सर्वभूतानां मैत्रः करुण एव च । निर्ममो निरहंकारः समदुःखसुखः क्षमी ॥ संतुष्टः सततं योगी यतात्मा दृढनिश्चयः । मय्यर्पितमनोबुद्धिर्यो मद्भक्तः स मे प्रियः ॥

சகலபூதங்களையும் துவேஷியாதவனும், மைத்திரியுடையவனும், கருணையுடையவனும், என தென்ப தில்லாதவனும், அகங்காரமில்லாதவனும், சுகதுக்கங்களில் சமத்துவமுள்ளவனும், க்ஷமையுள்ளவனும், எப்போதும் சந்தோஷமுடையவனும், யோகியும், முயற்சியுடையவனும், திடநிச்சயமுள்ளவனும், என்னிடத்தில் ஒப்புவிக்கப்பட்ட மனோபுத்திகளை யுடையவனுமான என் பக்தன் எவனோ அவன் எனக்குப் பிரியன்."

ஈசுவரனிடத்து அர்ப்பிக்கப்பட்ட மனதுடைமையால் சமாதியுடையவனுக்கு வேறநுசந்தான மின்மையாலும், சமாதியினின்று விழித்தவனுக்கும் உதாசீனாநுசந்தானத்தினால் சந்தோஷ வியசனங்களின்மையாலும் சுகதுக்கசமத்தன்மை யுண்டு. இவ்வாறு இனிச் சொல்லப்படும் துவந்துவங்களிலும் அறிந்து கொள்ளத்தக்கதாம்.

"यस्मान्नोद्विजते लोको लोकान्नोद्विजते च यः ।
हर्षामर्षभयोद्वेगैर्मुक्तो यः स च मे प्रियः ॥
अनपेक्षः शुचिर्दक्ष उदासीनो गतव्यथः ।
सर्वारम्भपरित्यागी यो मद्भक्तः स मे प्रियः ॥
यो न हृष्यति न द्वेष्टि न शोचति न काङ्क्षति ।
शुभाशुभपरित्यागी भक्तिमान्यः स मे प्रियः ॥
समः शत्रौ च मित्रे च तथा मानापमानयोः ।
शीतोष्णसुखदुःखेषु समः सङ्गविवर्जितः ॥
तुल्यनिन्दास्तुतिर्मौनी संतुष्टो येन केनचित् ।
अनिकेतः स्थिरमतिर्भक्तिमान्मे प्रियो नरः ॥

எவனிடத்தினின்றும் உலகத்தினர் வருத்தத்தையடைகிறதில்லையோ, எவன் உலகத்தினரிடத்தினின்றும் வருத்தத்தை அடைகிறதில்லையோ, எவன் சந்தோஷம், வியஸனம், பயம், மனக்கொதிப்பு என்பவற்றினின்றும் விடுபட்டிருக்கின்றானோ அவன் எனக்குப் பிரியன். அபேக்ஷையில்லாதவனும், சுசியும், சமர்த்தனும், உதாசீனனும், துன்பமில்லாதவனும், எல்லாத்தொழில்களையும் விட்டவனுமான என் பக்தன் எவனோ அவன் எனக்குப் பிரியன். எவன் சந்தோஷிக்கிறதில்லையோ, துவேஷிக்கிறதில்லையோ, சோகிக்கிறதில்லையோ, விரும்புகிறதில்லையோ, சுபாசுபங்களை விட்டவனான பக்திமானோ அவன் எனக்குப் பிரியன். சத்ருவினிடத்தும் மித்திரனிடத்தும் அப்படியே மானபமானங்களினும் சமமாயிருப்பவனும், சீதோஷ்ண சுகதுக்கங்களில் சமமாயிருப்பவனும், சங்கமில்லாதவனும், நிந்தையினையும் ஸ்துதியினையும் சமமாகக் கருதுபவனும், மௌனியும், கிடைத்ததில் திருப்தியுடையவனும், வசித்தற்கு ஓர் வீடில்லாதவனும், ஸ்திரபுத்தியடையவனுமான பக்திமானாகிய நரன் எனக்குப் பிரியன்."

இங்கும் முன்போல் விசேஷம் வார்த்திக காரரால் காட்டப்பட்டுளது:—

उत्पन्नात्मप्रबोधस्य ह्यद्वेष्टृत्वादयो गुणाः ।
अयत्नतो भवन्त्यस्य न तु साधनरूपिणः ॥

"ஆத்மஞான முண்டாயிருப்பவனுக்குத் துவேஷியாமை முதலிய குணங்கள் முயற்சி யின்றியே யுண்டாகின்றன. இவனுக்கு அவை சாதனவடிவினவாகா."

குணாதீதன் பதினான்காவது அத்தியாயத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கின்றான்:—

अर्जुन उवाचः—"कैर्लिङ्गैस्त्रीन्गुणानेतानतीतो भवति प्रभो ।
किमाचरः कथं चैतांस्त्रीन्गुणानतिवर्तते ॥

பிரபுவே! எந்த இலிங்கங்களால் இக்குணங்களைக் கடந்தவனாகின்றான்? ஆசாரம் யாது? இம்மூன்று குணங்களையும் எவ்வாறு கடக்கின்றான்?"

முக்குணங்களாவன ஸத்துவம், இரஜஸ், தமஸ் என்பன. அவற்றின் பரிணாம விசேஷத்தால் சகல சம்ஸாரமும் பிரவிருத்திக்கின்றது. இதனால் குணாதீதத் தன்மையாவது சம்ஸாரித் தன்மையின்மையாம். இதுவே ஜீவந்முக்தத் தன்மையாம். இலிங்கங்களாவன அந்நியருக்கு இவனுடைய குணாதீதத் தன்மையினை அறிவிப்பன (குறிகள்). ஆசாரமாவது ஆசரணம் (நடை). அவனது மனது சஞ்சரிக்குந்தன்மை எப்படி என்பது சாதனக் கிரமத்தைப்பற்றிய வினாவாம்.

श्रीभगवानुवाच :—

“ प्रकाशं च प्रवृत्तिं च मोहमेव च पाण्डव ।
न द्वेष्टि संप्रवृत्तानि न निवृत्तानि काङ्क्षति ॥
उदासीनवदासीनो गुणैर्यो न विचाल्यते ।
गुणा वर्तन्त इत्येव योऽवतिष्ठति नेङ्गते ॥
समदुःखसुखः स्वस्थः समलोष्टाश्मकाञ्चनः ।
तुल्यप्रियाप्रियो धीरस्तुल्यनिन्दात्मसंस्तुतिः ॥
मानापमानयोस्तुल्यस्तुल्यो मित्रारिपक्षयोः ।
सर्वारम्भपरित्यागी गुणातीतः स उच्यते ॥
मां च योऽव्यभिचारेण भक्तियोगेन सेवते ।
स गुणान्समतीत्यैतान्ब्रह्मभूयाय कल्पते ॥

ஸ்ரீபகவான் சொல்லலாயினார்:—பாண்டுபுத்திரனே! பிரகாசத்தினையும், பிரவிருத்தியினையும், மோகத்தினையுமே செவ்வையாய்ப் பிரவிர்த்திக்கப்பட்டவைகளென்று (பிரதிகூலமென) துவேஷிக்கிறது மில்லை. நீங்கினவென்று (அநுகூலமென) விரும்புகிறது மில்லை. உதாசீனனைப்போ லிருப்பவனாய் எவன் குணங்களால் அசைக்கப்படுகிற தில்லையோ, குணங்கள் வர்த்திக்கின்றனவென்று எவன் நிற்கின்றானோ, எவன் சலிக்கிறதில்லையோ, சுகதுக்கங்களில் சமமாயிருக்கின்றானோ, சுவஸ்தனாயி(தன் இச்சைப்படி சமாதியிலி)ருக்கின்றானோ, மண்ணாங்கட்டி கல் காஞ்சன (பொன்) முதலிய

வற்றில் சமபுத்தியுடையவனும், பிரியாப் பிரியங்களிற் சமமான வனும், தீரனும், தனது நிந்தையிலும் ஸ்துதியிலும் சமமான வனும், மானவமானங்களில் சமமானவனும், மித்திருசத்துரு பக்ஷங் களில் சமமானவனும், எல்லாச் செய்கைகளையும் விட்டவனும், எவனோ அவன் குணாதீத னெனப்படுகின்றான். எவன் என்னை வியபிசாரமில்லாத பக்தியோகத்தால் சேவிக்கின்றானோ, அவன் இக் குணங்களைக் கடந்து பிரஹ்மமாகக் கூடியவனாகின்றான்."

பிரகாசப் பிரவிருத்திமோகங்கள் சத்துவ ரஜஸ் தமோ குணங் களாம். அவை ஜாக்கிர சொப்பன மிரண்டிலும் பிரவிர்த்திக்கின் றன. சுழுத்தி சமாதி சூதிய (உதாசீன) சித்த விருத்தித்தன்மை யவஸ்தைகளில் நீங்குகின்றன. பிரவிருத்தியும் அநுகூலம் பிரதி கூலம் என்று இருவகைத்தாம். அவற்றுள், மூடன் ஜாக்கிரத்தில் பிரதிகூலப் பிரவிருத்தியைத் துவேஷிக்கின்றான். அநுகூலப் பிர விருத்தியை விரும்புகின்றான். குணாதீதனுக்கோ அநுகூலப் பிரதி கூலாத்திரசமின்மையால் துவேஷம் விருப்பம் இரண்டுமில்லை. எப்படிக் கலக மிட்டுக்கொள்ளும் இருவரைக் காண்கின்ற ஓர் தட ஸ்தன் (வியவகார வெல்லையிருப்பவன்) தான் தனியே சும்மாவிருக் கின்றானோ, வெற்றி தோல்விகளால் இங்கும் அங்கும் அசைக்கப் படுகிறானில்லையோ அதுபோலக் குணாதீதனாகிய விவேகி தானே சும் மாவிருக்கின்றான் குணங்கள் குணங்களில் வர்த்திக்கின்றன; யான் செய்திலேன் என்னும் விவேகத்தால் உதாசீனத்தன்மையா (சும்மா விருத்தலா)ம். யானே செய்கிறேன் என்னும் அத்தியாசம் சலித்தலாம். அது இவனுக்கில்லை. அத்தன்மைய இது ஆசாரம் யாது என்னும் பிரசினத்தின் உத்தரமாம். சுகதுக்க சமத்துவ முதலிய இலிங்க(குறி)களும். வியபிசாரமின்றிய பக்தியோடு கூடிய ஞானத் தியானாப்பியாசத்தினால் பரமாத்ம சேவையுமாகிய இவை குணாதீதத்துவ சாதனமாம். பிராஹ்மணன் வியாசாதிய ரால் வர்ணிக்கப்பட்டுளன்:—

"अनुत्तरीयवसनमनुपस्तीर्य शायिनम् ।
बाहूपधायिनं शान्तं तं देवा ब्राह्मणं विदुः ॥

இடை வஸ்திரமும் மேல்வஸ்திரமு மில்லாதவனும், பாய் முதலிய விரித்துப் படுக்காதவனும், கையைத் தலையணையாக வைத்துக் கொள்பவனும் சாந்தனுமாகிய அவனைத் தேவர்கள் பிராஹ்மண னென்று அறிவார்கள்."

பிராஹ்மண சப்தம் பிரஹ்மவித்து வாசகமா மென்று "பின்னர் பிராஹ்மணன்" என்னும் பிருகதாரணியக (௩-ரு-க) சுருதியினால் வர்ணிககப்பட்டுளது. பிரஹ்மவித்திற்கு வித்துவத்ஸந்நியாசாதிகார மிருத்தலாலும், "**यथाजातरूपधरो नाच्छादनं चरति स परमहंसः।** பிறந்த வண்ணமான வடிவந்தாங்கியவனாய் போர்வையின்றி எவன் சரிக்கின்றானோ அவன் பரமஹம்ஸன்." என்றல் முதலிய சுருதியினால் பரிக்கிரகமி (ஏற்குந் தன்மையி)ன்மைக்கு முக்கியத்துவம் கூறுதலால் உத்தரீய (மேல்வஸ்திர)மின்மை முதலியன அவனுக்குப் பொருந்தியதாம்.

"येन केनचिदाच्छन्नो येन केनचिदाशितः।
यत्र क्वचन शायी स्यात्तं देवा ब्राह्मणं विदुः॥

யாதேனு மொன்றினால் மறை(போர்)த்துக் கொள்ளுபவனும், யாதேனு மொன்றினால் புசிககின்றவனும், யாதேனு மோரிடத்தில் படுப்பவனுமாயிருப்பவன். அவனைத் தேவர் பிராஹ்மணனென்று அறிவர்" தேக நிருவாகத்தின் பொருட்டு போஜனம், வஸ்திரம், படுக்கை, இடம் முதலியவற்றை அபேக்ஷிக்கினும் அப்போஜனாதிகளிலுள்ள குணதோஷங்க ளிரண்டும அவனுக்கு உதிக்கிறதில்லை; வயிறு நிரம்புதல் உடல்பருத்தல் முதலியவடிவினதாகிய நிருவாகம் சபயாதலாலும், நிஷ்பிரயோஜனமான குணதோஷ விசாரம் சித்ததோஷமாயிருத்தலாலும் என்க. இதனாற்றான் பாகவதத்தில்.

"किं वर्णितेन बहुना लक्षणं गुणदोषयोः।
गुणदोषदृशिर्दोषो गुणस्तूभयवर्जितः॥

குணதோஷங்களின் லக்ஷணம் வெகுவாக வர்ணிக்கப்படுவதனாலென்ன? குணதோஷப் பார்வை தோஷமாம். இரண்டு மின்றியது குணமாம்" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

"कन्थाकौपीनवासास्तु दण्डधृग्ध्यानतत्परः ।
एकाकी रमते नित्यं तं देवा ब्राह्मणं विदुः ॥

கந்தை *கௌபீன வஸ்திரமுடையவனாய்த் தண்டந் தாங்கியவனாய்த்தியான தற்பரனாய்த் தனித்தவனாய் நித்தமும் இரமிக்கின்றான். அவனைத் தேவர்கள் பிராஹ்மண னென்று அறிவர்." பிரஹ்மோபதேச முதலியவற்றால் பிராணிகளிடத்தில் அநுக்கிரகிக்கும் இச்சையினால், உத்தமத் தன்மையை யறிவித்தலால் சிரத்தையை யுண்டுபண்ணுவதற்குத் தண்டம் கௌபீனமுதலிய அடையாளத்தினைத் தரிக்க வேண்டும்; "कौपीनं दण्डमाच्छादनं च स्वशरीरोपभोगार्थाय लोकोपकारार्थाय च परिग्रहेत् । கௌபீனமும், தண்டமும், வஸ்திரமும் தனது சரீர ரக்ஷணையின் பொருட்டும் லோகோபகாரார்த்தமாகவும் கொள்ளக்கடவன்." என்னும் சுருதியினால். அநுக்கிரகிக்கும் விருப்பத்தினாலும் தான் அவ(சிஷ்ய)னுடைய கிருக கிருத்தியாதி வார்த்தையினைச் செய்யலாகாது; தியான பரனாகவே இருக்க வேண்டும்; "तमेवैकं विजानथाऽऽत्मानमन्या वाचो विमुञ्चथ । அவ்வொரே ஆத்மாவை அறிக. மற்றவாக்குக்களை விடுக." என்னும் சுருதியினாலும்,

"तमेव धीरो विज्ञाय प्रज्ञां कुर्वीत ब्राह्मणः ।
नानुध्यायाद्बहूञ्छब्दान्वाचो विग्लापनं हि तत् ॥

தீரன் (புத்திமான்) அவ்வாத்மாவினையே அறிந்து பிராஹ்மணன் (ஸ்வரூபாபிவியக்தியாகிய) பிரஞ்ஞையைச் செய்யக்கடவன். வெகு வார்த்தைகளைச் சிந்திக்கலாகாது. அது வாக்குச்கு வருத்தமேயாம்" என்னும் சுருதியினாலும். பிரஹ்மோபதேசமோ அந்நிய வாக்காகாமையால் விரோதி யன்று. அத்தியானமும் தனித்தவனாயிருக்கின் விக்கினமின்றிய தாகின்றது. இதனாற்றான் வேறு ஸ்மிருதியினும்

*எதனால் ஜீவன் நரககூபத்தில் வீழ்தற்குரியவனாவனோ, அத்தன்மையபாபம் கௌபீனமாம்: அதன்சாதனமான ஆண்குறியும் கௌபீனமெனப்படும். அதனை மறைக்கும் வஸ்திரமும் கௌபீன மெனப்படும்.

"एको भिक्षुर्यथोक्तः स्याद्द्वावेव मिथुनं स्मृतम् ।
त्रयो ग्रामः समाख्यात उर्ध्वं तु नगरायते ॥
नगरं न हि कर्तव्यं ग्रामो वा मिथुनं तथा ।
राजादिवार्ता तेषां स्याद्भिक्षावार्ता परस्परम् ॥

ஒருபிக்ஷு (சந்நியாசி) சொன்னலக்ஷணமுடையவன் (ஏகாகியா) வன். இருவர் மிதுனமென்று கருதப்படுகின்றனர் மூவர் கிராமமென்று சொல்லப்படுகின்றனர். அதற்குமேல் நகர மாகின்றது. நகரமாவது கிராமமாவது மிதுனமாவது செய்யலாகாது. அப்படிச்செய்யுமிடத்து அவர்களுள் அரசர் முதலியோர் வார்த்தையும் ஒருவருக்கொருவர் பிக்ஷவார்த்தையு முண்டாம்." என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

"स्नेहपैशुन्यमात्सर्यं संनिकर्षात्प्रवर्तते ।"
"ஸ்நேகம் கோள் மாற்சரிய முதலியன சம்பந்தத்தா லுண்டாகின்றன"

"निराशिषमनारम्भं निर्नमस्कारमस्तुतिम् ।
अक्षीणं क्षीणकर्माणं तं देवा ब्राह्मणं विदुः ॥

ஆசீர்வாதம் செய்யாதவனும், ஒரு கிரியையுஞ் செய்யாதவனும், நமஸ்காரஞ் செய்யாதவனும், ஸ்துதி செய்யாதவனும், க்ஷீண மில்லாதவனும், க்ஷீண கர்மமுடையவனுமாகிய அவனைத் தேவர்கள் பிராஹ்மணனென்று அறிவர்." (வித்தை தவம் வயது முதலிய) விசேஷமுடைய சம்ஸாரிகளால் நமஸ்கரிக்கும் புருஷர்களுக்காக ஆசீர்வாதம் பிரயோகிக்கப்படுகின்றது. எவனுக்கு எது அபேக்ஷிக்கப்படுகின்றதோ அவனை நோக்கி அதன் அபிவிருத்தியைக் குறித்து (ஈசனைப்)பிரார்த்தித்தல் ஆசீர்வாதமாம். ஆகவே புருஷர்களுக்குப் பின்ன ருசி யிருத்தலால் அவர்கள் கருதியவற்றைத் தேடுவதில் அழுந்திய சித்தமுடையவனுக்கு லோகவாசனை வளருகின்றது. அதுவும் ஞான(ஜீவன்முக்திப் பிரயோஜன)த்திற்கு விரோதமானதாம். அவ்வாறே வேறு ஸ்மிருதியிலும்

"लोकवासनया जन्तोः शास्त्रवासनयापि च ।
देहवासनया ज्ञानं यथावन्नैव जायते ॥

ஜந்துக்களுக்கு லோகவாசனையினாலும், சாஸ்திரவாசனையினாலும், தேகவாசனையினாலும் ஞானம் உள்ளவாறே பிறக்கிறதில்லை." என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இது ஆரம்பம்(கிரியை)நமஸ்கார முதலியவற்றிலும் காணத்தக்கதாம். ஆரம்பம் (செய்கை) ஆவது தன்பொருட்டாவது பிறர்பொருட்டாவது வீடு நில முதலியவற்றைச் சம்பாதித்தலாகிய பிரயத்தனமாம். அத்தன்மைய ஆசீர்வாதம் (ஆரம்ப)மென்று மிவ்விரண்டும் முக்தனால் விடத்தக்கனவாம். ஆசீர்வாதஞ் செய்யாதபோது வணங்கும் நரர்களுக்கு வருத்த முண்டாகுமே யென்று சங்கிக்கலாகாது; லோகவாசனை வருத்தமென்னும் இரண்டன் பரிகாரமாக எல்லா ஆசீர்வாதப் பிரதிநிதித் தன்மையாக நாராயண சப்தப் பிரயோக மிருத்தலால். ஆரம்பமோ (தொழிலோ)யாவும் தோஷமுடையனவே யாம். அவ்வாறே ஸ்மிருதியும், "सर्वारम्भा हि दोषेण धूमेनाग्निरिवावृताः । எல்லாச் செய்கைகளும் புகையினால் அக்கினியினைப்போல தோஷத்தினால் மறைக்கப் பட்டனவாம்." என்று கூறுகின்றது. நமஸ்காரமும் விவிதிஷா சந்நியாசிக்கு

"यो भवेत्पूर्वसंन्यासी तुल्यो वै धर्मतो यदि ।
तस्मै प्रणामः कर्तव्यो नेतराय कदाचन ॥

முற்பட்ட சந்நியாசியாய்த் தர்மத்தினால் சமமானவனாய் இருப்பவன் எவனோ அவனுக்கு நமஸ்காரம் செய்யவேண்டும்; மற்றவனுக்கு ஒருபோதும் செய்யலாகாது." என்று கூறுகின்றது. அதில் முற்பட்ட தன்மை தர்ம சமத்துவங்களை விசாரித்தலில் சித்தம் விக்ஷேபப்படுகின்றது. இதனாற்றான் நமஸ்காரமாத்திரத்தினாலேயே அநேகர் கலக மிடுகிறவர்களாய்க் காணப்படுகின்றனர். அதில் நிமித்தம் வார்த்திக காரரால்

"प्रमादिनो बहिश्चित्ताः पिशुनाः कलहोत्सुकाः ।
संन्यासिनोऽपि दृश्यन्ते दैवसंदूषिताशयाः ॥

சோர்வுடையவர்களும், வெளிச் சித்த முடையவர்களும், கோட்சொல்லுகிறவர்களும, கலகத்திற் பிரியமுள்ளவர்களும், தைவத்தால் (ஊழால்) செவ்வையாய்த் தூஷிக்கப்பட்ட கருத்துடையவர்

களுமான சந்நியாஸிகளும் காணப்படுகின்றனர்." என்று காட்டப்பட்டிருக்கின்றது. முக்தனுக்கு நமஸ்காரமின்மை* பகவத்பாதர்களால்

"नामादिभ्यः परे भूम्नि स्वाराज्येऽवस्थितो यदा ।
प्रणमेत्कं तदात्मज्ञो न कार्यं कर्मणा तदा ॥

பெயர் முதலியவற்றிற்கு மேலான பூமியான சுவாராஜ்யத்தில் எப்போது நிலைத்தவனாகின்றானோ, அப்போது ஆத்மாவை யுணர்ந்தவன் எவனை நமஸ்கரிப்பன்? அப்போது கர்மத்தினால் காரியமுமில்லை." என்று காட்டப்பட்டுளது.

சித்தத்தின் கலக்கத்திற்குக் காரணமான நமஸ்காரம் விலக்கப்படினும், சர்வ சமத்தன்மைப் புத்தியால் செய்யும் பிரசாத வேதுவான நமஸ்காரம் அங்கீகரிக்கப் படுகின்றது. அவ்வாறே ஸ்மிருதியும்.

"ईश्वरो जीवकलया प्रविष्टो भगवानिति ।
प्रणमेद्दण्डवद्भूमावाश्वचाण्डालगोखरम् ॥

ஈசுவரனாகிய பகவான் ஜீவகலையால் பிரவேசித்திருக்கின்றனர் என்று நாய் சண்டாளன் பசு கழுதைபரியந்தமாயுள்ள வற்றிற்குப் பூமியில் தண்டம்போல் விழுந்து நமஸ்கரிக்குக." என்று கூறுகின்றது. ஸ்துதியும் மனுஷ்ய விஷயமானது விலக்கப்படுகின்றது; ஈசுவர விஷயமானதன்று. அப்படியே பிருகஸ்பதி ஸ்மிருதியும்,

"आदरेण यथा स्तौति धनवन्तं धनेच्छया ।
तथा चेद्विश्वकर्तारं को न मुच्येत बन्धनात् ॥

எப்படிப் பணமுடையவனைப் பணவிருப்பத்தால் ஆதரவோடு ஸ்துதிக்கின்றானோ, அப்படி விசுவகர்த்தாவாகிய ஈசனை ஸ்துதிக்கின், எவன் பந்தத்தினின்று விடுபடான்?" என்று கூறுகின்றது.

---

*பகமென்னும் ஷட்குணைசுவரியமுடைய பாதங்களையுடையவர். அல்லது ஷட்குணைசுவரிய முடையவர்களான விஷ்ணு பிரஹ்மாவதார வடிவினர்களாகிய பத்மபாதர் சுரேசுவரர்முதலிய சீடர்களால் சேவிக்கப்படும் பாதங்களையுடையவர் பகவத்பாதர். அத்தன்மையர் ஸ்ரீசங்கராசாரியர்.

க்ஷீண மின்மையாவது தீனத்துவ மில்(ஆசையாற் றாழ்தலில்)லாமை யாம். இதனாற்றான் ஸ்மிருதியும்,

अलब्ध्वा न विषीदेत काले कालेऽशनं क्वचित् ।
लब्ध्वा न हृष्येद्धृतिमानुभयं दैवतन्त्रितम् ॥

தைரியமுடையவன் காலத்தில் உணவு கிடையாததினால் வருத்தப் படலாகாது; காலத்தில் சிறிது கிடைத்ததினால் சந்தோஷிக்கலா காது. இரண்டும் ஊழின் வசத்ததாம்." என்று கூறுகின்றது.

க்ஷீண கர்ம முடைமையாவது விதி நிஷேதவச மாகாமையாம். "निस्त्रैगुण्ये पथि विचरतां को विधिः को निषेधः । முக்குணமின்றிய மார்க்கத்தில் நடப்பவனுக்கு விதியேது? நிஷேதமேது?" என்று ஸ்மிருதி கூறுதலால். இவ்வபிப்பிராயங் கொண்டே பகவானும்

"त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्यो भवार्जुन ।
निर्द्वन्द्वो नित्यसत्त्वस्थो निर्योगक्षेम आत्मवान् ॥

வேதங்கள் முக்குண விஷயமுடையனவாம். ஆதலால் அர்ஜுனா! நீ குணமின்றிய தன்மையனாவாய். துவந்துவ மில்லாதவனும், நித் திய சத்துவத் திருப்பவனும், யோகக்ஷேம மில்லாதவனும், ஆத்மா வையு(அந்தர்முக அப்பியாசத்தில் சாவதான மு)டையவனுமா வாய்." என்று கூறியிருக்கின்றனர். நாரதரும்,

"स्मर्तव्यः सततं विष्णुर्विस्मर्तव्यो न जातुचित् ।
सर्वे विधिनिषेधाः स्युरेतयोरेव किंकराः ॥

விஷ்ணுவானவர் (வியாபகமான பரமாத்மா) எப்போதும் ஸ்மரிக்கத் தக்கவர்; ஒருபோதும் மறக்கத்தக்கவ ரல்லர். விதி நிஷேதங்கள் யாவும் (விஷ்ணுவின் ஸ்மரணம், மறவாமையென்னும்) இவ்விரண் டற்கே வேலைக்காரர்களாம்." என்று கூறியிருக்கின்றனர்.

"योऽहेरिव गणाद्भीतः सन्मानान्नरकादिव ।
कुणपादिव यः स्त्रीभ्यस्तं देवा ब्राह्मणं विदुः ॥

எவன் பாம்பினின்றும் பயப்படுவதுபோலக் கூட்டத்தினின்றும் பயப்படுகிறானோ, நரகத்தினின்றும் பயப்படுவது போலச் சன்

மானத்தி(பூஜனீயி)னின்றும் பயப்படுகிறானோ, பிணத்தினின்றும் பயப்படுவதுபோல ஸ்திரீகளினின்றும் பயப்படுகிறானோ, அவனைத் தேவர்கள் பிராஹ்மணனென்று அறிவர்.'' அவர்களுக்கு இராஜ வார்த்தை முதலியன வுண்டாகுமென்று கூறப்பட்டிருத்தலால் பாம்பினின்றும் போலக் கூட்டத்தினின்றும் பயமுண்டாகின்றது. சன்மானம் ஆசை காரணமாகப் புருஷார்த்தவிரோதி யாகுதலால் நரகத்தைப்போல் தள்ளத் தக்கதாம். இதனுற்றான் ஸ்மிருதி,

"असन्मानात्तपोवृद्धिः सन्मात्तु तपःक्षयः ।
अर्चितः पूजितो विप्रो दुग्धा गौरिव सीदति ॥

பூஜிக்கப்படாமையால் தபசு விருத்தி யாகின்றது. பூஜனத்தால் தபசு க்ஷயமாகின்றது. அர்ச்சிக்கப்பட்டவனும் பூசிக்கப் பட்டவனுமாகிய விப்பிரன் கறக்கப்பட்ட பசுவினைப்போல (தவமிழந்து) வருந்துகிறான்." என்று கூறுகின்றது. இவ்வபிப்பிராயங்கொண்டே அவமானம் கொள்ளப்படுந் தன்மையதாக ஸ்மரிக்கப்படுகின்றது:—

"तथाऽऽचरेत वै योगी सतां धर्ममदूषयन् ।
जना यथावमन्येरन्गच्छेयुर्नैव संगतिम् ॥

எவ்வாறு ஜனங்கள் தன்னை அவமதிப்பார்களோ, தன்னோடு சேரமாட்டார்களோ, அவ்வாறு யோகி சத்துக்களின் தர்மத்தைத் தூஷியாது நடப்பன்" என்பதனால்.

ஸ்திரீகளிடத்து விலக்கப்படுந் தன்மை அருவருக்கப்படுந் தன்மை என்று இருவகைத் தோஷமுண்டு. அவற்றுள், விலக்கப்படுவதை மாத்திரம் கொள்ளின் ஒருசமயம் இராகத்தால் பிராரப்த பலத்தால் கடக்கப்படும். இவ்வபிப்பிராயங்கொண்டு ஸ்மிருதியும்

"मात्रा स्वस्रा दुहित्रा वा नैकशय्यासनो भवेत् ।
बलवानिन्द्रियग्रामो विद्वांसमपि कर्षति ॥

தாயோடாவது, தங்கையோடாவது, மகளோடாவது ஒரு படுக்கை ஓராசன முடையவனா யிருக்கலாகாது. ஏனெனின், இந்திரியக் கிராமம் (கோளகை) வலியுடையதாம்; வித்வானையும் இழுக்கின்

றது." என்று கூறுகின்றது. அவ்வாறே ஸ்மிருதிகளால் அரு வருப்பும் காட்டப்பட்டுளது. அவை

"स्त्रीणामवाच्यदेशस्य क्लिन्ननाडीव्रणस्य च ।
अभेदेऽपि मनोभेदाज्जनः प्रायेण वञ्चयते ॥
चर्मखण्डं द्विधा भिन्नमपानोद्गारधूपितम् ।
ये रमन्ति नरास्तत्र कृमितुल्याः कथं न ते ॥

ஸ்திரீகளின் வாயினால் சொல்லக்கூடாத இடத்திற்கும் அழுகி யொழுகா நின்ற மூக்குப் புண்ணிற்கும் பேதமில்லாவிடினும், மனோ பேதத்தால் பெரும்பாலும் நரன் வஞ்சிக்கப்படுகிறான் அதாவது அதனை மிக அழகுடைய தென்றும் சுகத்தைத் தரத்தக்கதென்றும் கருதி அழிந்து போகின்றான். தோல் துண்டானது இருவகை யாகப் பிரிக்கப்பட்டு அபானம் மலமூத்திரம் வாசனை இவைகளால் கட்டப்பட்டுள்ளது. அதில் எந்த நரர்கள் இரமிக்கின்றார்களோ அவர்கள் ஏன் புழுவுக்குச் சமானமாகார்? ஆதலால் விலக்கப்படுந் தன்மை அருவருப்பு என்னும் இரண்டன் கருத்தால் பிணதிருஷ் டாந்தம் இங்கு சொல்லப்பட்டுளது.

"येन पूर्णमिवाकाशं भवत्येकेन सर्वदा ।
शून्यं यस्य जनाकीर्णं तं देवा ब्राह्मणं विदुः ॥

எந்த ஒன்றினால் எப்போதும் ஆகாசம் நிறைந்தது போலிருக் கிறதோ, ஜனக்கூட்டம் எவனுக்குச் சூனியமாயிருக்கின்றதோ, அவ னைத் தேவர்கள் பிராஹ்மண னென்று அறிவர்."

சம்ஸாரிகட்குத் தனிமையாயிருத்தல் பயம் லயம் (தூக்கம்) முதலியவற்றிற்குக் காரணமா யிருத்தலால் நீக்கத்தக்கதாம்; ஜனக் கூட்டம் அத்தன்மைய தாகாமையின் கொள்ளத்தக்கதாம். யோகி கட்கோ அதனின் விபரீதமாம் அதாவது தனிமையிலிருக்கின் விக் கினமின்றி தியானம் தொடர்ந்து நிற்றலின் பரிபூர்ண பரமாகத் தாத்மாவினால் சர்வமும் ஆகாசம் நிறைந்ததுபோல் காணப்படுகின் றது. அதனால் பயம் லயம் சோகம் மோகமுதலியன உண்டாகிற தில்லை.

"यस्मिन्सर्वाणि भूतानि आत्मैवाभूद्विजानतः ।
तत्र को मोहः कः शोक एकत्वमनुपश्यतः ॥

எதனிடத்து (எந்தக்காலத்தில், எவ்விசனிடத்தில், எவ்வாத்மாவில்) அபரோக்ஷஞான முடையவனுக்குச் சர்வ பூதங்களும் ஆத்மாவே ஆகின்றனவோ, அங்கு (அக்காலத்து அல்லது அவ்விசுவராத்மாவை யறிபவன் ஸ்வரூபத்தில்) ஐக்கியத்தைக் காண்பவனுக்கு மோக மேது? சோக மேது?" என்னும் சுருதியினுல். ஜனங்கள் கூடிய இடம் இராஜவார்த்தை முதலியவற்ருல் தியானத்திற்கு விரோதமுடையதாயிருத்தலின் ஆத்மத்தோற்றமின்றிய அது சூநியமான இடத்தைப்போலச் சித்தத்தைக் கிலேசப்படுத்துகின்றது. ஜகத்து மித்தையா யிருத்தலாலும் ஆத்மா பூர்ணமாயிருத்தலாலும் (பயாலசிய சோக மோகாதிகளில்லை) என்பது பொருள்.

---

## அதிவர்ணுசிரமி.

அதிவர்ணுசிரமி சூதசங்கிதையின் முக்திகண்டம் ஐந்தாவது அத்தியாயத்தில் விஷ்ணுவை நோக்கிப் பரமேசுவரனுல் :—

ब्रह्मचारी गृहस्थश्च वानप्रस्थोऽथ भिक्षुकः ।
अतिवर्णाश्रमी तेऽपि क्रमाच्छ्रेष्ठा विचक्षणाः ॥
अतिवर्णाश्रमी प्रोक्तो गुरुः सर्वाधिकारिणाम् ।
न कस्यापि भवेच्छिष्यो यथाऽहं पुरुषोत्तमः ॥
अतिवर्णाश्रमी साक्षाद्गुरूणां गुरुरुच्यते ।
तत्समो नाधिकश्चास्मिँल्लोकेऽस्त्येव न संशयः ॥
यः शरीरेन्द्रियादिभ्यो विभिन्नं सर्वसाक्षिणम् ।
पारमार्थिकविज्ञानं सुखात्मानं स्वयं प्रभम् ॥
परं तत्त्वं विजानाति सोऽतिवर्णाश्रमी भवेत् ।
यो वेदान्तमहावाक्यश्रवणेनैव केशव ॥

आत्मानमीश्वरं वेद सोऽतिवर्णाश्रमी भवेत् ।
यो वर्णाश्रमनिर्मुक्तमवस्थात्रयसाक्षिणम् ।
महादेवं विजानाति सोऽतिवर्णाश्रमी भवेत् ॥
वर्णाश्रमादयो देहे मायया परिकल्पिताः ॥
नात्मनो बोधरूपस्य मम ते सन्ति सर्वदा ।
इति यो वेद वेदान्तैः सोऽतिवर्णाश्रमी भवेत् ॥
आदित्यसंनिधौ लोकश्चेष्टते स्वयमेव तु ।
तथा मत्संनिधानेन समस्तं चेष्टते जगत् ॥
इति यो वेद वेदान्तैः सोऽतिवर्णाश्रमी भवेत् ।
सुवर्णे हारकेयूरकटकस्वस्तिकादयः ॥
कल्पिता मायया तद्वज्जगन्मय्येव सर्वदा ।
इति यो वेद वेदान्तैः सोऽतिवर्णाश्रमी भवेत् ॥
शुक्तिकायां यथा तारं कल्पितं मायया तथा ।
महदादि जगन्मायामयं मय्येव कल्पितम् ॥
इति यो वेद वेदान्तैः सोऽतिवर्णाश्रमी भवेत् ।
चण्डालदेहे पश्वादिशरीरे ब्रह्मविग्रहे ॥
अन्येन तारतम्येन स्थितेषु पुरुषोत्तम ।
व्योमवत्सर्वदा व्याप्तः सर्वसंबन्धवर्जितः ॥
एकरूपो महादेवः स्थितः सोऽहं परामृतः ।
इति यो वेद वेदान्तैः सोऽतिवर्णाश्रमी भवेत् ॥
विनष्टविभ्रमस्यापि यथापूर्वा विभाति दिक् ।
तथा विज्ञानविध्वस्तं जगन्मे भाति तन्न हि ॥
इति यो वेद वेदान्तैः सोऽतिवर्णाश्रमी भवेत् ।
यथा स्वप्नप्रपञ्चोऽयं मयि मायाविजृम्भितः ॥

इति यो वेद वेदान्तैः सोऽतिवर्णाश्रमी भवेत् ।
यस्य वर्णाश्रमाचारो गलितः स्वात्मदर्शनात् ॥
स वर्णाश्रमान्सर्वानतीत्य स्वात्मनि स्थितः ।
यस्त्यक्त्वा स्वाश्रमान्वर्णानात्मन्येव स्थितः पुमान् ॥
सोऽतिवर्णाश्रमी प्रोक्तः सर्ववेदान्तवेदिभिः ।
न देहो नेन्द्रियं प्राणो न मनोबुद्ध्यहंकृती ॥
न चित्तं नैव माया वै न च व्योमादिकं जगत् ।
न कर्ता न च भोक्ता च न च भोजयिता तथा ॥
केवलं चित्सदानन्दो ब्रह्मैवात्मा यथार्थतः ।
जलस्य चलनादेव चञ्चलत्वं यथा रवेः ॥
तथाऽहंकारसंसर्गादेव संसार आत्मनः ।
तस्मादन्यगता वर्णा आश्रमा अपि केशव ॥
आत्मन्यारोपिता एव भ्रान्त्या तेनात्मवेदिनाम् ।
न विधिर्न निषेधश्च न वर्ज्यावर्ज्यकल्पना ॥
आत्मविज्ञानिनामस्ति तथा चान्यज्जनार्दन ।
स्वात्मविज्ञानिना निष्ठामीदृशीमम्बुजेक्षण ॥
मायया मोहिता मर्त्या नैव जानन्ति सर्वदा ।
न मांसचक्षुषा निष्ठा ब्रह्मविज्ञानिनामियम् ॥
द्रष्टुं शक्या स्वतः सिद्धाविदुषां सैव केशव ।
यत्र सुप्ता जना नित्यं प्रबुद्धस्तत्र संयमी ॥
प्रबुद्धा यत्र ते विद्वान्प्रसुप्तस्तत्र केशव ।
एवमात्मानमद्वंद्वं निराकारं निरञ्जनम् ॥
नित्यशुद्धं निराभासं सच्चिन्मात्रं परामृतम् ।
यो विजानाति वेदान्तैः स्वानुभूत्या च निश्चितम् ॥
सोऽपि वर्णाश्रमी प्रोक्तः स एव गुरुरुत्तमः ।

புத்திமானாகிய விஷ்ணுவே! பிரஹ்மசாரி, கிருகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி, அதி வர்ணாசிரமியென்னும் அவர்களும் கிரமமாகச் சிரேஷ்டராவர். அதிவர்ணாசிரமி எல்லா அதிகாரிகளுக்கும் குருவெனப்படுகின்றான். எப்படிப் புருஷோத்தமனான யான் ஒருவருக்கும் சிஷ்யனல்லனோ, அதுபோல் அவன் ஒருவருக்கும் சிஷ்யனாகான். அதிவர்ணாசிரமி சாக்ஷாத் குருக்களுக்கும் குருவெனப்படுகின்றான். அவனுக்குச் சமமானவனும் மேலானவனும் இவ்வுலகத்தில் இல்லவே இல்லை. இதிற் சம்சயமில்லை. எவன் சரீரேந்திரியாதிகளினும் வேறுபட்ட சர்வ சாக்ஷியும், பாரமார்த்திக விஞ்ஞானமும், சுகவடிவினதும், சுவயம் பிரகாசமும், பரமுமான தத்துவத்தை அபரோக்ஷமாய் அறிகின்றானோ அவன் அதிவர்ணாசிரமியாகின்றான். கேசவ! எவன் வேதாந்த மகாவாக்கிய சிரவணத்தினாலேயே ஆத்மாவாகிய ஈசுவரனை அறிகின்றானோ, அவன் அதிவர்ணாசிரமியாகின்றான். எவன் வர்ணாசிரமங்களினின்று நீங்கியதும் அவஸ்தாத்திரய சாக்ஷியுமான மகாதேவனை அறிகின்றானோ அவன் அதிவர்ணாசிரமியாகின்றான். வர்ணாசிரம முதலியன தேகத்தில் மாயையினால் கற்பிக்கப்பட்டன. போதவடிவ ஆத்மாவாகிய எனக்கு அவை எப்போதும் இருப்பதில்லை. என்று எவன் வேதாந்தங்களால் அறிகின்றானோ அவன் அதி வர்ணாசிரமியாகின்றான். சூரியன் சந்நிதியில் உலகம் தானே சேஷ்டிக்கிறது. அதுபோல் என் சந்நிதியில் சகல ஜகத்தும் தானே சேஷ்டிக்கிறது என்று எவன் வேதாந்தங்களினால் அறிகின்றானோ அவன் அதி வர்ணாசிரமியாகின்றான். பொன்னில் ஆரம், கேயூரம், கடகம், சுவஸ்திக முதலியன எப்படிக் கற்பிதமோ, அதுபோல ஜகத்து எப்போதும் என்னிடத்திலேயே கற்பிக்கப்பட்டதாமென்று எவன் வேதங்களால் அறிகின்றானோ, அவன் அதிவர்ணாசிரமியாகின்றான். சுத்திகையில் எப்படி வெள்ளி மாயை (பிராந்தி)யினால் கற்பிதமோ, அதுபோல மகதாதி மாயாமயமான ஜகத்து என்னிடத்திலேயே கற்பிதமாம் என்று எவன் வேதாந்தங்களால் அறிகின்றானோ, அவன் அதிவர்ணாசிரமியாகின்றான். புருஷோத்தம! சண்டாள தேகத்திலும், விலங்கு முதலிய சரீரத்திலும், பிரஹ்ம விக்கிரகத்திலும், மற்றைய தாரதம்மியமாக சிறப்புவற்றிலும் ஆகாயத்தினைப்போல எப்போதும்

வியாபித்தவனும், சர்வ சம்பந்தமு மில்லாதவனும், ஏக வடிவனும், எந்த மகாதேவன் நிலைத்திருக்கின்றானோ, அந்தப் பரமாத்மா யாரென்று எவன் அறிகின்றானோ அவன் அதிவர்ணாசிரமி ஆகின்றான். திக்குப் பிரமம் நசித்தவனுக்கும் எப்படி முன் (பிரமகாலத்தில்)போலத் திக்குத் தோற்றுகின்றதோ, அது போல விஞ்ஞானத்தினால் நசித்த ஜகத்து எனக்குத் *தோற்றுகின்றது. அது இல்லை, என்று வேதாந்தங்களால் அறிகின்றானோ அவன் அதிவர்ணாசிரமியாகின்றான். எப்படி சொப்பனப் பிரபஞ்சமானது என்னிடத்தில் மாயையினால் விரிந்துள்ளதோ, அப்படியே ஜாக்கிரப் பிரபஞ்சமும் மேலான மாயையினால் விரிந்துள்ளது என்று எவன் வேதாந்தங்களால் அறிகிறானோ அவன் அதிவர்ணாசிரமியாகின்றான். எவனுக்குச் சுவாத்ம தரிசனத்தால் வர்ணாசிரமா சாரம் கழன்றதோ, அவன் வர்ணாசிரமங்களைக் கடந்து சுவாத்மாவில் நிற்பவனாகின்றான். எந்தப்புருஷன் தனது வர்ணங்களையும் ஆசிரமங்களையும் கடந்து தன்னிலே நிற்பவனாகின்றானோ, அவன் சர்வ வேதாந்த முணர்ந்தவர்களாலும் அதிவர்ணாசிரமி யெனப்படுகின்றான். தேகமன்று; இந்திரியமன்று; பிராண னன்று; மனோபுத்தியகங்கார மன்று; சித்த மன்று; மாயையு மன்று; ஆகாயாதிப்பிரபஞ்சமு மன்று. கர்த்தாவு மன்று; போக்தாவு(புசிப்பவனு)மன்று; புசிப்பிப்பவனு மன்று; யதார்த்தமாக கேவலம் சித்து சத்து ஆநந்தவடிவ பிரஹ்மமே ஆத்மா. எப்படி ஜலத்தின் அசைவால் சூரியனுக்கு அசைவுகாணப்படுகின்றதோ அதுபோல அகங்கார சம்பந்தத்தினாலேயே ஆத்மாவுக்குச் சம்ஸாரம் காணப்படுகின்றது. ஆதலால் கேசவ! வர்ணங்களும் ஆசிரமங்களும் அந்நியத்திலிருப்பனவாயினும், அவை பிராந்தியினால் ஆத்மாவில் ஆரோபிக்கப்பட்டனவாம்; ஆத்மஞானிகட் கில்லை. ஜனார்த்தன! ஆத்மவிஞ்ஞானிகட்கு விதியில்லை; நிஷேதமில்லை. கொள்ளத்தக்கது தள்ளத்தக்க தென்னும் கற்பனை யில்லை. அப்படியே மற்றவையுமில்லை. செந்தாமரைக்கண்ண! சுவாத்மவிஞ்ஞானிகளது இத்தன்மைய (ஈசுவர சம்பந்தமான) நிஷ்டையினை மாயையினால் மோகிக்கப்பட்ட மனிதர் எப்போதுமே அறியார்கள். கேசவ! பிரஹ்மவிஞ்ஞானிகளது இந்த நிஷ்டை மாம்ஸநேத்திரத்தால் காணக்கூடிய தன்று. ஞானிகளுக்கு அஃது இயல்பாய்ப்

பெறப் பட்டதேயாம். எங்கு (எந்தப்பிரஹ்மத்தில்) ஜனங்கள் நித்தியம் தூங்குகின்றார்களோ, அங்கு யோகி விழித்திருக்கின்றான். எங்கு (எந்தப் பிரபஞ்சத்தில்) அவர்கள் விழித்திருகின்றார்களோ அங்கு அவன் தூங்குகின்றான். இவ்வாறு தன்னைத் துவந்துவ மின்றியதும், நிர்விகற்பமும், நிரஞ்சனமும், நித்தியமும், சுத்தமும், நிராபாசமும், சம்வித்து மாத்திரமும், பராமிருதமுமாய் எவன் வேதாந்தங்களாலும் சுவாநுபூதியினுலும், நிச்சயிக்கப்பட்டதாக அறிகின்றானே அவன் அதிவர்ணாசிரமி யெனப்படுவன். அவனே உத்தமனான குரு." என்று வர்ணிக்கப் பட்டிருக்கின்றான். அஃதிவ்வாறு "विमुक्तश्च विमुच्यते முக்தன் (பந்தத்தினின்றும்) விடுபடுகின்றான்" என்றல் முதலிய சுருதிகளும், ஜீவன்முக்த ஸ்திதப்பிரஞ்ஞ பகவத்பக்த குணாதீத பிராஹ்மணாதி வர்ணாசிரமிகளைப் பிரதிபாதிக்கும் ஸ்மிருதிகளும் ஜீவந்முக்தி யுண்டென்பதில் பிரமாணங்களாம் என்று நிலைத்தது.

इति श्रीमद्विद्यारण्यप्रणीते जीवन्मुक्तिविवेके प्रथमं जीवन्मुक्ति

प्रमाणप्रकरणम् ॥ १ ॥

முதலாவது ஜீவந்முக்திப் பிரமாணப் பிரகரணம்

முடிந்தது.

---



உ

ஸ்ரீ கணேசாய நம:

—•• இரண்டாவது ••—

# வாசனாக்ஷயப் பிரகரணம்.



இனி ஜீவன்முக்திசாதனத்தினை நிரூபிப்பாம்:—தத்துவஞானம், மனோநாசம், வாசனாக்ஷயம் என்பன அதன் சாதனங்கள். இதனைற்றான் வாசிஷ்டராமாயணத்தினது உபசம பிரகரணத்தின் முடிவில் "जीवन्मुक्तशरीराणाम्. ஜீவன்முக்த சரீரமுடையவர்கட்கு" என்னும் இப்பிரஸ்தாவத்தில் வசிஷ்டர்:—

"वासनाक्षय विज्ञानमनोनाशा महामते ।
समकालं चिराभ्यस्ता भवन्तिफलदा इमे ॥

மகாமதியே! வாசனாக்ஷயம், தத்துவஞானம், மனோநாசம் என்னுமிவை சமகாலம் நீடித்து அப்பியசிக்கப் பட்டனவாயப் பயனைத்தருவனவாகின்றன." என்று கூறுகின்றார். அந்வயத்தினைக் கூறி, வியதிரேகத்தினைக் கூறுகின்றார். அது

"त्रय एते समं यावन्न स्वभ्यस्ता मुहुर्मुहुः ।
तावन्न पदसंप्राप्तिर्भवत्यपि समाशतैः ॥

எதுபரியந்தம் இம்மூன்றும் சமமாக அடிக்கடி செவ்வையாய் அப்பியசிக்கப் படவில்லையோ அதுவரையில் நூற்றுக்கணக்கான வருஷங்களாலும் பத(ஸ்வரூப)த்தின் எல்லையடைவு உண்டாகவே மாட்டாது." என்பதாம். சமகாலாப்பியாசமில்லாதவிடத்துப் யாதுகத்தினை

"एकैकशो निषेव्यन्ते यद्येते चिरमप्यलम् ।
तन्न सिद्धिं प्रयच्छन्ति मन्त्राः संकलिता इव ॥

இவை ஒவ்வொன்றாக நெடுங்காலம் மிகுதியாகச் சேவிக்கப்படினும், மந்திரங்கள் ஒவ்வொன்றாகக் கூட்டப்பட்டபோது பயனைத்

தாததுபோல அவை சித்தியைத்தருபவையாகா." என்று கூறு கின்றார். எப்படிச் சந்தியாவந்தனத்தில் மார்ஜனத்தினோடு (துடைத்தலோடு) பொருத்தப் பட்டுள்ள "आपोहिष्ठा" என்றல் முதலிய மூன்று ருக்குகளினுள் ஒவ்வொரு ருக்கினைத் தினந்தோறும் படித்தலில் சாஸ்திரீயானுஷ்டானம் சித்திக்கிறதில்லையோ, அல்லது எப்படி ஷடக்ஷமந்திரங்களுள் ஒவ்வொருமந்திரத்தால் சித்தியில்லையோ, அல்லது எப்படி உலகத்தில் சாகம், பருப்பு, அந்ந முதலியவற்றுள் ஒவ்வொன்றினால் போஜனசித்தியில்லையோ, அது போல என்றபடி. நீடித்த அப்பியாசத்தின் பிரயோஜனத்தினை

"त्रिभिरेतैश्चिराभ्यस्तैर्हृदयग्रन्थयो दृढाः ।
निःशङ्कमेव त्रुटचन्ति बिसच्छेदाद्गुणा इव ॥

நெடுங்காலம் அப்பியசிக்கப்பட்ட இம்மூன்றினாலும் திடமான இதய முடிச்சுகள், சங்கையின்றியே அறுகின்றன." என்கின்றார். அதற்குக வியதிரேகத்தினை

"जन्मान्तरशताभ्यस्ता राम संसारसंस्थितिः ।
सा चिराभ्यासयोगेन विना न क्षीयते क्वचित् ॥

இராம! ஜன்மாந்தரங்கள் நூற்றினால் அப்பியசிக்கப்பட்டதாம் ஸம்சாரத்தின் ஸ்திதி, அது நெடுங்காலாப்பியாசமின்றி ஒரிடத்தும் கெடாது." என்பதனைக் கூறுகின்றார். ஒவ்வொன்றாகப் பழகுவதில் பயனின்மை மாத்திரமன்று. அதன் சொரூபமும் சித்தியாதென்று

"तत्वज्ञानं मनोनाशो वासनाक्षय एव च ।
मिथः कारणतां गत्वा दुःसाध्यानि स्थितानि हि ॥

தத்துவஞானம், மனோநாசம், வாசனக்ஷயமென்பன ஒன்றற்கொன்று காரணமாதலையடைந்து அரிதிற் சாதிக்கத்தக்கனவாய் நிற்கின்றன." என்பதனைக் கூறுகின்றார். இம்மூன்றனுள் இரண்டிரண்டைச் சேர்த்தலால் மூன்று துவந்துவங் (இருமை)கள் உண்டாகின்றன. அவற்றுள், மனோநாசவாசனக்ஷய துவந்துவத்திற்கு ஒன்றற்கொன்று காரணமாந்தன்மையினை வியதிரேகமுகத்தால்

"यावद्विलीनं न मनो न तावद्वासनाक्षयः ।

न क्षीणा वासना यावच्चित्तं तावन्न शाम्यति ॥

எதுவரையில் மனம் ஒடுங்கவில்லையோ, அதுவரையில் வாசனை நசியாது. எதுவரையில் வாசனை நசிக்கவில்லையோ அதுவரையில் மனம் ஒடுங்காது." என்று கூறுகின்றார். தீபச்சுடரின் தொடர்ச்சி போல் விருத்தியின் தொடர்ச்சிவடிவமாகப் பரிணமிக்கின்ற அந்தக்காணத்திரவியம் மனனவடிவாயிருத்தலின் மனம் என்று சொல்லப்படுகின்றது. அதன் நாசம் என்றால் விருத்திவடிவ பரிணாமத்தினை விட்டு, நிரோதிக்கப்பட்டதன்மை வடிவமாகப்பரிணமித்தல். அவ்வாறே பதஞ்சலிபகவான் யோகசாஸ்திரத்தில்

"व्युत्थाननिरोधसंस्कारयोरभिभवप्रादुर्भावौ निरोधक्षणचित्तान्वयो निरोधपरिणामः ॥

வியுத்தான நிரோத சம்ஸ்காரங்கட்கு முறையேஅடக்கமும் வெளிப்படுதலும் உண்டாகின்றன. நிரோதக்ஷணத்திற்குச் சித்தத்தோடுள்ள சம்பந்தம் நிரோதபரிணாமமாம்" என்று சூத்திரித்திருக்கின்றனர். வியுத்தான (எழுகின்ற) சம்ஸ்காரங்கள் அடங்குகின்றன. நிரோத(ஒடுங்கும்) சம்ஸ்காரங்கள் வெளிப்படுகின்றன. நிரோதத்தோடுகூடிய க்ஷணம் சித்தத்தோடு கூடுகின்றது. அத்தன்மையை இது மனோநாசம் என்று அறியத்தக்கதாம். முன்பின்விசாரமில்லாமல் திடீரென்றுண்டாகும் குரோதாதிவிருத்தி விசேஷங்கட்குக் காரணமாய்ச் சித்தத்தின்கண்ணிருக்கும் சம்ஸ்காரம் வாசனையாம்; முன்முன் அப்பியாசத்தினால் சித்தத்தில் வசிக்கப்படுவதாயிருத்தலின் அவ்வாசனையின் க்ஷயமாவது விவேகத்தால் ஜனிக்க சாந்தியாதி வாசனை திடமாயிருக்கவும் வெளிநிமித்தத்தில குரோதாதிகளுண்டாகாமையாம். அவற்றுள், மனோநாச மில்லாதபோது விருத்திகள் உற்பத்தியாகுங்கால் ஒருகால் குரோதிகளுண்டாகுதலின் வாசனாக்ஷயமில்லை. வாசனை நசியாதபோது அவ்வாறே விருத்தியையுண்டு பண்ணுதலால் மனோநாசமில்லை.

தத்துவஞான மனோநாசங்கட்குப் பரஸ்பரகாரணத்தன்மையினை வியதிரேகமுகத்தினால்

"यावन्न तत्त्वविज्ञानं तावच्चित्तशमः कुतः ।
यावन्न चित्तोपशमो न तावत्तत्त्ववेदनम् ॥

எதுவரையிலும் தத்துவஞான முண்டாக வில்லையோ, அதுவரையில் மனோநாசமேது? எது வரையில் மனோநாசமுண்டாக வில்லையோ, அதுவரையில் தத்துவவுணர்ச்சியில்லை." என்று கூறியிருக்கின்றார். இவ்வெல்லாம் ஆத்மாவே; காணப்படுகின்ற ரூபரஸாதி ஜகத்து மாயாமயம்; இது வாஸ்தவமாக இல்லை யென்னும் நிச்சயம் தத்துவஞானமாம். அஃதுண்டாகாதபோது ரூபரஸாதி விஷயங்களின் இருப்புளதாக, அவற்றைக் கோசரிக்கும் சித்தவிருத்திகள் நீக்கக்கூடியனவாகா. எப்படிக் கட்டைகளைப் போட்டுக்கொண்டிருக்கும்போது அக்கினி ஜ்வாலை நீக்கப்படமாட்டாதோ அதுபோல மனோநாசமில்லாதபோது விருத்திகளால் ரூபாதிகள் கிரகிக்கப்படுங்கால் "नेह नानास्ति किंचन ! இங்கு நாநாவென்பது சிறிதுமில்லை." என்னும் சுருதிக்கு யஜமானன் (யாகஞ் செய்கிறவன்) பிரஸ்தரம் (தருப்பை முஷ்டி) என்றல் முதலியவற்றிற்குப்போல பிரத்தியக்ஷ விரோத சங்கையினால் பிரஹ்மம் அத்விதீயமென்னும் இத்தன்மைய தத்துவ நிச்சயம் உதயமாகாது.

வாசனாக்ஷயம் தத்துவஞான மென்னும் இரண்டும் ஒன்றற்கொன்று காரணமாதலை வியதிரேக முகத்தால்

"यावन्न वासनानाशस्तावत्तत्त्वागमः कुतः ।
यावन्न तत्त्वसंप्राप्तिर्न तावद्वासनाक्षयः ॥

எதுவரையில் வாசனாக்ஷய முண்டாகவில்லையோ அதுவரையில் தத்துவஞான மேது? எதுவரையில் தத்துவத்தின் அடைவுண்டாகவில்லையோ, அதுவரையில் வாசனாக்ஷய மில்லை." என்பதனாற் கூறுகின்றார். குரோதாதி வாசனைகள் நஷ்டமாகாதபோது சமாதி சாதனமின்மையால் தத்துவஞான முதயமாகாது. அத்விதீயப்பிரஹ்மதத்துவம் அறியப்படாதபோது குரோதாதிகளுக்கு நிமித்தமான (ஜகத்து) சத்தியமென்னும் பிரமம் நீங்காமையால் வாசனை கெடாது.

அப்படியே கூறப்பட்ட மூன்று தத்துவங்களுக்கும் ஒன்றற்கொன்று காரணமாந்தன்மையினை அந்வயமுகத்தால் யாம் கூறு

காரிப்பாம்:—மனது நசித்தால் சம்ஸ்காரத்தை எழுப்பும் வெளி நிமித்தம் தோற்றாமையால் வாசனை நசிக்கின்றது. வாசனை நசித்தால் ஏது வில்லாமையால் குரோதாதிகள் உதயமாகா. அதனால் மனது நசிக்கும். இது மனோநாச வாசனாக்ஷய துவந்துவம்.

"दृश्यते त्वग्र्यया बुद्ध्या । மேன்மையான புத்தியினால் காணப் படுகின்றது." என்னும் சுருதியினால் ஆத்மைக்கியத்திற் கெதிர் முகமானவிருத்தி தரிசனஹேதுவாதலால் பிறவிருத்திகளின் நாசம் தத்துவஞானத்திற்கு ஏதுவாதல் அறியப்படுகின்றது. தத்துவ ஞான முளதாயின் மித்தியாவடிவ ஜகத்தில் மனிதக்கொம்பு முதலி யவற்றிற்போல் புத்திவிருத்தி உதயமாகாமையாலும், ஆத்மாவும் அறியப்பட்டமையினால் மறுபடியும் விருத்திக்கு உபயோகமின்மை யினாலும் விறகில்லாத தீயினைப்போல மனம் நசிக்கின்றது. இது மனோநாச தத்துவஞானங்களினது துவந்துவம்.

தத்துவஞானம் குரோதாதிவாசனாக்ஷய ஹேதுவாதலை வார்த் திககாரர்,

"रिपौ बन्धौ स्वदेहे च समैकात्म्यं प्रपश्यतः ।
विवेकिनः कुतः कोपः स्वदेहावयवेष्विव ॥

சத்துருவினிடத்தும், பந்துவினிடத்தும், தனது தேகத்திலும், சம மாக ஒரு ஆத்மாவிருத்தலைக் காண்கின்ற விவேகிக்குத் தனது சரீர அவயவங்களிற்போல(பிறரிடத்து)க் கோபம் என்வரும்? (வாராதென் றபடி)" என்று கூறியிருக்கின்றனர். குரோதாதி வாசனாக்ஷயவடிவ முதலிய ஞானத்திற்கேது வாதல் பிரசித்தம். வசிஷ்டரும்

"गुणाः शमादयो ज्ञानाच्छमादिभ्यस्तथा ज्ञता ।
परस्परं विवर्धेते द्वेपद्मसरसी इव ॥

ஞானத்தினால் சமாதி குணங்களுண்டாகின்றன. அப்படியே சமாதி களால் ஞான முண்டாகின்றது. இப்படி இரண்டும் தாமரையும் தடாகமும் (சோலையினால் விருத்தியாவது) போல பரஸ்பரம் விருத்தியாகின்றன. இது வாசனாக்ஷயதத்துவஞானங்களின் துவந் துவம்.

தத்துவஞான முதலிய மூன்றனைச் சம்பாதித்தலின் சாதனத்தை

"तस्माद्राघव यत्नेन पौरुषेण विवेकिना ।
भोगेच्छां दूरतस्त्यक्त्वा त्रयमेतत्समाश्रयेत् ॥

ஆகலால் இராகவா! விவேகியானவன் புருஷப்பிரயத்தனத்தால் போகேச்சையைத் தூரமாய் விட்டு, இம்மூன்றனையும் செவ்வையாய்ப் பற்றவேண்டும்." என்று கூறுகின்றார். புருஷப்பிரயத்தனமாவது எவ்வுபாயத்தினாலாவது அவசியம் சம்பாதிப்பேனாக என்னும் இத்தன்மைய உற்சாகவடிவ நிர்ப்பந்தம். விவேகமென்பது பிரித்து நிச்சயித்தல். தத்துவஞானத்திற்குச் சிரவணாதிகள் சாதனம்; மனோநாசத்திற்கு யோகம் சாதனம்; வாசனாக்ஷயத்திற்குப் பிரதிகூலவாசனையை உண்டுபண்ணுதல் சாதனம், என்பர். போகேச்சையைச் சிறிது அங்கீகரிக்கும் பக்ஷத்தில்

"हविषा कृष्णवर्त्मेव भूय एवाभिवर्धते ।

(நெய் முதலிய) அவியினால் அக்கினி மென்மேலும் கொழுந்துவிட்டெரிவது போல விருத்தியாகின்றது." என்னும் நியாயத்தினால் அதிப்பிரசங்கம் நீக்கக்கூடாததாயிருத்தலால் 'தூரமாய்' என்று சொல்லப்பட்டது.

அப்படியானால், முன்விவிதிஷா சந்நியாசத்திற்குத் தத்துவஞானம் பயன்; வித்துவத் ஸந்நியாசத்திற்கு ஜீவன்முக்தி பயனென்றுசொல்லப்பட்டது. அவ்வாறாகவே முதலில் தத்துவஞானத்தினைச் சம்பாதித்துப் பின் வித்துவத்ஸந்நியாசம் செய்துகொண்டு, ஜீவித்திருக்கும் தனக்குப் பந்தவடிவமான வாசனைமனோவிருத்தியென்று மிரண்டன் விநாசம் சம்பாதிக்கத்தக்கதாமென்று தோற்றுகின்றது. இவ்விடத்திலோ தத்துவஞானாதி மூன்றன் சமாப்பியாசம் நியமிக்கப்படுகின்றது. இதனால் முன்னுக்குப்பின் விரோதமாமேயெனின், இது தோஷமாகாது; பிரதான அப்பிரதானத் தன்மையாக வியவஸ்தைபொருந்துதலால், விவிதிஷா சந்நியாசிக்குத் தத்துவஞானம் பிரதானம்,மனோநாசவாசனாக்ஷய மிரண்டும்அப்பிரதானம். வித்துவத்ஸந்நியாசிக்கு அதனினும் வேறுபட்டதாம் அதாவது மனோநாசவாசனாக்ஷய மிரண்டும் பிரதானம்; தத்துவஞானம் அப்பிரதானம். அதனால் உடன்பழகுதல் இரண்டிடத்தும் விரோதமின்றியதாம்.

தத்துவஞானோற்பத்தி மாத்திரத்தினால் கிருதார்த்தனானவனுக்குப் பிற்காலத்தைய (மனோநாச வாசனாக்ஷய) அப்பியாசப் பிரயாசத்தினால் ஆகுவது என்னை யென்று சங்கிக்கலாகாது; இனிச்செய்யப்படும்)ஜீவன்முக்திப் பிரயோஜன நிரூபணத்தால் பரிகரிக்கப்படுவதாயிருத்தலின்.

அப்படியானால் வித்துவத் ஸந்நியாசிக்கு ஞான சாதனமான சிரவணாதி யநுஷ்டானம் பயனின்றியதாகுதலானும், சொரூபமாகச் செய்வதற்கும் செய்யாதிருத்தற்கும் வேறுவிதமாகச் செய்தற்கும் கூடாததானஞானம்அநுஷ்டிக்கத்தகாததா யிருத்தலானும் அப்பிரதானமாகவேனும் பிற்காலத்தைய வப்பியாசம் எத்தன்மையதாமெனின்,எவ்வழியாலேனும்மறுபடியும் தத்துவத்தினை ஸ்மரித்தல் (தத்துவ ஞானப்பியாசம்) என்று கூறுவாம். அத்தன்மைய வப்பியாசம் வாசிஷ்டத்தில் லீலோபாக்கியானத்தில் காட்டப்பட்டுவது.

"तच्चिन्तनं तत्कथनमन्योन्यं तत्प्रबोधनम् ।
एतदेकपरत्वं च ज्ञानाभ्यासं विदुर्बुधाः ॥
सर्गादावेव नोत्पन्नं दृश्यं नास्त्येव तत्सदा ।
इदं जगदहं चेति बोधाभ्यासं विदुः परम् ॥

அதனைச்சிந்தித்தலும் அதனை (சிஷ்யனுக்கு)ச் சொல்லுதலும் ஒருவருக்கொருவர் அதனைப்போதித்தலுமான ஒன்றன் பரமாதலாகிய இதனை ஞானப்பியாசமென்று ஞானிகள் அறிவர், சிருஷ்டியி னுதியிலேயே திருசியமான ஜகத்து உண்டாகவில்லை. ஆதலால் இந்த ஜகத்தும் யானும் எப்போதும் இல்லவே இல்லை, என்பதனையே மேலான ஞானப்பியாசமென்று அறிவர்." என்று காட்டப்பட்டுளது.

மனோநாசவாசனாக்ஷய வப்பியாசமிரண்டும் அவ்விடத்திற்றானே சொல்லப்பட்டிருக்கின்றன; அவை

"अत्यन्ताभावसंपत्तौ ज्ञातुर्ज्ञेयस्य वस्तुनः ।
युक्त्या शास्त्रैर्यतन्ते ये ते तत्राभ्यासिनः स्थिताः ॥

ஞாதாஞேயவஸ்து என்பவற்றின் அத்தியந்தாபாவ சம்பத்தியில் எவர்கள் யுக்தியினாலும் சாஸ்திரங்களாலும் முயலுகின்றார்களோ

அவர்கள் அவர்கள் அங்கு அப்பியாசிகளாய் நிற்பவர்." என்பதும் ஞாதிருஞேயங்களின் மித்தியாத்துவபுத்தி அபாவசம்பத்தியாம். சொரூப மாகவும் தோற்றுகிருத்தல் அத்தியந்தாபாவசம்பத்தியாம். யுக்தி போகம். இது மனோநாசாப்பியாசம்.

"दृश्यासंभवबोधेन रागद्वेषादितानवे ।
रतिर्नवोदिता यासौ ब्रह्माभ्यासः स उच्यते ॥

திருசியா சம்பவஞானத்தினல் இராகத்துவேஷாதிகள் குறைந்த போது, (அகண்டானந்தசித்தில்) எந்த இரதியுதய மாகவில்லையோ, அத்தன்மைய இது பிரஹ்மாப்பியாசமென்று சொல்லப்படுகின்றது." என்பதுமாம். இது வாசனக்ஷயாப்பியாசம்.

அம்மூன்றப்பியாசங்களும் சமத்தன்மையாகக் காணப்படுங்காலத்து பிரதான அப்பிரதானத் தன்மையாகப் பிரித்தறிய முடியாதெனின், அப்படியன்று; பிரயோஜனநுசாரமாகப் பிரித்தறியக் கூடியதாயிருத்தலின், முமுக்ஷுவாகிய புருஷனுக்கு ஜீவன்முக்தி விதேகமுக்தி யெனப் பிரயோஜனம் இரண்டுண்டு. இதனுற்றான் "विमुक्तश्च विमुच्यते விமுக்தன் (ஜீவன்முக்தன்) விடுபடுகின்றான் (விதேகமுக்தியடைகின்றான்)." என்று சுருதியினல் கேட்கப்படுகின்றது. அங்கு ஜீவித்திருக்கும் புருஷனுக்குத் தெய்வசம்பத்து மோக்ஷம். ஆசுரசம்பத்து பந்தம். இதுவும் பதினாறாவது அத்தியாயத்தில் பகவானால்

"दैवी संपद्विमोक्षाय निबन्धायासुरी मता ॥

தைவீசம்பத்து மோக்ஷத்தின் பொருட்டும், ஆசுரசம்பத்து பந்தத்தின் பொருட்டுமாய் மதிக்கப்பட்டுள்ளது" என்று சொல்லப்பட்டுள்ளது. அவ்விரு சம்பத்தும் அதிற்றனே

"अभयं सत्त्वसंशुद्धिर्ज्ञानयोगव्यवस्थितिः ।
दानं दमश्च यज्ञश्च स्वाध्यायस्तप आर्जवम् ॥
अहिंसा सत्यमक्रोधस्त्यागः शान्तिरपैशुनम् ।
दया भूतेष्वलोलुप्त्वं मार्दवं ह्रीरचापलम् ॥

तेजः क्षमा धृतिः शौचमद्रोहो नातिमानिता ।
भवन्ति संपदं दैवीमभिजातस्य भारत ॥
दम्भो दर्पोऽभिमानश्च क्रोधः पारुष्यमेव च ।
अज्ञानं चाभिजातस्य पार्थ संपदमासुरीम् ॥

பயமின்மை, சித்தசுத்தி, ஞானயோகநிஷ்டை, கொடை, அடக்கம் யாகம், தத்தம் சாகையை அத்தியயனஞ் செய்தல், தவம், நேர்மை ஹிம்ஸையில்லாமை, வாய்மை, குரோதமின்மை, துறவு, சாந்தி (ஒழிவு), புறங்கூறாமை, பிராணிகளிடத்துத் தயை, பற்றின்மை, மென்மை, நாணம் சஞ்சலமின்மை, பராக்கிரமம், பொறுமை, தைரியம், சௌசம், துரோகமின்மை கர்வமின்மை இவை பாரத! பிறந்தவனுக்குத் தெய்வசம்பத்துக்களாகின்றன. தம்பம் (இடம்பம்,) கர்வம், அபிமானம், குரோதம், கடுக்குத்தன்மை, அஞ்ஞானமென்னுமிவை பார்த்த! பிறந்தவனுக்கு அசுரசம்பத்தாகின்றன." என்று சொல்லப்பட்டிருக்கின்றது. மறுபடியும் அத்தியாய முடிவுபரியந்தம் ஆசுரசம்பத்து விரிக்கப்பட்டுளது. அவற்றுள் அசாத்திரீயமும் * சுபாவசித்தமும் ஆசுரசம்பத்துமான துர்வாசனை சாஸ்திரீயமும் புருஷப்பிரயத்தினசாத்தியமும் தைவசம்பத்தாகிய சுத்(நல்) வாசனையினால் கெட்டபோது ஜீவன்முக்தி யுண்டாகின்றது.

வாசனாக்ஷயத்தினைப்போல மனோநாசத்திற்கும் ஜீவன்முக்திக்கு ஏதுவாந்தன்மை,

"मन एव मनुष्याणां कारणं बन्धमोक्षयोः ।
बन्धाय विषयासक्तं मुक्त्यै निर्विषयं स्मृतम् ॥
यतो निर्विषयस्यास्य मनसो मुक्तिरिष्यते ।
अतो निर्विषयं नित्यं मनः कार्यं मुमुक्षुणा ॥
निरस्तविषयासङ्गं संनिरुद्धं मनो हृदि ।
यदा यात्युन्मनीभावं तदा तत्परमं पदम् ॥
तावदेव निरोद्धव्यं यावद्धृदि गतं क्षयम् ।
एतज्ज्ञानं च ध्यानं च शेषो न्यायस्य विस्तरः ॥

மனிதர்களுக்கு மனமே பந்தத்திற்கும் மோக்ஷத்திற்கும் காரணமாம். விஷயப்பற்றுள்ளது பந்தத்தின் பொருட்டும், விஷயமின்றியது மோக்ஷத்தின் பொருட்டுமா மென்று கருதப்பட்டுளது. எதனால் நிர்விஷயமான இம்மனத்திற்கு முக்தி அங்கீகரிக்கப்படுகின்றதோ, அதனால் முமுக்ஷுவினால் மனம் தினமும் நிர்விஷயமாக்கத் தக்கதாம். விஷயப்பற்றொழிந்து இருதயத்தில் செவ்வையாய் அடக்கப்பட்ட மனதானது எப்போது உன்மனீபாவத்தை யடைகின்றதோ, அப்போது அது பரமபதமாம். இருதயத்தில் க்ஷயமடையும் பரியந்தமே அடக்கத்தக்கதாம். இது, ஞானமும், தியானமுமாம். எஞ்சியவை இந்நியாயத்தின் விஸ்தாரமாம்." என்று *சுருதியில் கேட்கப்படுகின்றது.

பந்தம் தீவிரம் மிருதுவென்று இருவகைப்படும். அவற்றுள் அசுரசம்பத்து நேரே கிலேசத்திற் கேதுவாயிருத்தலால் தீவிரபந்தமாம். துவைதத் தோற்றமோ இயல்பாகக் கிலேச மின்மை வடிவினதாயிருத்தலாலும், ஆசுரசம்பத்தினை யுண்டுபண்ணுவதாயிருத்தலாலும் மிருது பந்தமாம். அவற்றுள், வாசனாக்ஷயத்தினால் தீவிர பந்தமே நீங்குகின்றது. மனோநாசத்தினாலோ இருவகைப்பந்தமும் நீங்குகின்றன. அப்படியானால் மனோநாசமே போதுமானது, வாசனாக்ஷயமோ பயனின்றியதா மெனின், அப்படியன்று; போகஹேதுவான பிரபல பிராரப்தத்தினால் (சமாதியினின்றும்) எழுப்பப்பட்ட மனதில் வாசனாக்ஷயம் தீவிரபந்தத்தை நீக்குவதாயிருத்தலால்; போகம் மிருது பந்தத்தினாலும் பொருந்துவதாயிருத்தலின். தாமஸவிருத்திகள் தீவிரபந்தமாம். சாத்துவிக ராஜஸ விருத்திகளிரண்டும் மிருது பந்தமாம். இதுவும்,

"दुःखेष्वनुद्विग्नमनाः सुखेषु विगतस्पृहः ।

துக்கங்களில் கலங்காத மனதுடையவனும், சுகங்களில் விருப்பநீங்கியவனும்," என்னு மிடத்தில் தெளிவிக்கப்பட்டிருக்கின்றது. இவ்வாறாகவே மிருது பந்தம் அங்கீகரிக்கப்பட்டதாயிருத்தலாலும் தீவிரபந்தம் வாசனாக்ஷயத்தினாலேயே நீங்குதலாலும் மனோநாசம் பிரயோஜன மின்றிய தாமெனின், அப்படியன்று; மனோநாசம்

* அதர்வவேதீய அமிர்தபிந்தூபநிஷத்து.

தார்ப்பல் பிராரப்தத்தால் சம்பாதிக்கப்படுவனவாயும் அவசியம் வருவனவாயு மிருக்கிற போகங்களை நீக்குதற் பிரயோஜன முடையதாயிருத்தலின். அத்தன்மைப் போகம் பிரதி(பரி)காரத்தால் நீக்கத்தக்கதாமென்னும் அபிப்பிராயங்கொண்டே

"अवश्यंभाविभोगानां प्रतीकारो भवेद्यदि ।
तदा दुःखैर्न लिप्येरन्नलरामयुधिष्ठिराः ॥

அவசியமாய் வரத்தக்கபோகங்களுக்குப் பரிகாரம் இருந்திருக்குமாயின் அப்போது நளராமயுதிஷ்டிர (தர்ம)ர்கள் துக்கங்களால் பற்றப்பட்டிரார். (பிரதீகாரம் செய்யாமையால் பற்றப்பட்டார் என்பது பொருள்)" என்று கூறியிருக்கின்றனர்.

இவ்வாறு ஜீவன்முக்தியைக் குறித்து வாசனாக்ஷயம் மனோநாசமிரண்டும் நேர்சாதனமாயிருத்தலால் பிரதானமும், தத்துவஞானமோ அவ்விரண்டனையும் உண்டுபண்ணுதலால் மறைபட்டதாயிருத்தலின் அசாவது மனோநாசவாசனாக்ஷயங்களை யுண்டுபண்ணுதலால் ஜீவன்முக்திக்குப் பரம்பரைச்சாதன மாயிருத்தலின் அப்பிரதானமுமாம்.

தத்துவஞானம் வாசனாக்ஷயத்திற்கு ஏதுவாதல் வெகுவாகச் சுருதிகளில்

"ज्ञात्वा देवं सर्वपाशापहानिः ।

தெய்வத்தை அறிந்து அதனால் சர்வபாசமு மொழிகின்றன." என்றும்,

"अध्यात्मयोगाधिगमेन देवं मत्वा धीरो हर्षशोकौ जहाति ॥

அத்தியாத்மயோகவசனடைவால் தெய்வத்தை அறிந்து தீரன் ஹர்ஷசோகங்களை நீக்குகின்றான்." என்றும், "तरति शोकमात्मवित्
ஆத்மாவை யுணர்ந்தவன் சோகத்தைக்கடக்கின்றான்." என்றும்,

"तत्र को मोहः कः शोक एकत्वमनुपश्यतः ।

ஒருமையைக் காண்பவனுக்கு அங்கு மோகமேது? சோகமேது?" என்றும்,

"ज्ञात्वा देवं मुच्यते सर्वपाशैः ।

தெய்வத்தையறிந்து சர்வபாசங்களினின்றும் விடுபடுகின்றான்.'' என்றும், கேட்கப்படுகின்றது. அத்தத்துவஞானம் மனோநாசத்திற்கு ஏதுவாதல் சுருதியாற் பெறப்பட்டதாம். வித்தியா(ஞான) தசையினைக் கொண்டு

"यत्र त्वस्य सर्वात्मात्मैवाभूत्तत्केन कं पश्येत्केन कं जिघ्रेत् ॥

எங்கு இவனுக்கு எல்லாம் ஆத்மாவேயாகின்றதோ, அங்கு இவன் எதனால் எதனைக் காண்பான்? எதனால் எதனை முகருவான்.'' என்றல் முதலிய சுருதியில் இது கேட்கப்படுகின்றது.

ஸ்ரீ கௌடபாதாசாரியர் அவர்களும்,

"आत्मसत्यानुबोधेन न संकल्पयते यदा ।
अमनस्तां तदा याति ग्राह्याभावे तदग्रहः ॥

ஆத்மசத்தையின் ஞானத்தால் எப்போது சங்கற்பிக்கிறதில்லையோ அப்போது மனதின்றியதன்மையினை அடைகின்றது. கிரகிக்கப்படுவதி (திருசியமி) ல்லாதபோது அதனைக்கிரகிப்பது மில்லை.'' என்று கூறியிருக்கின்றனர். ஜீவன்முக்திக்கு வாசனாக்ஷய மனோநாசங்கள் நேர் சாதனமாவதுபோல விதேகமுக்திக்கு நேர் சாதனமாயிருத்தலால் ஞானம் பிரதானமாம்;

"ज्ञानादेव तु कैवल्यं प्राप्यते येन मुच्यते ।

எதனால் விடுபகின்றானோ அந்த ஞானத்தினாலேயே கைவல்யத்தையடைகின்றான்'' என்று ஸ்மிருதியிருத்தலால், கேவலமான (தனியான) ஆத்மாவின் தன்மை கைவல்யம் (தனிமை). அது தேகாதிகளின்றிய தன்மையாம். அதுவும் ஞானத்தினாலேயே அடையப்படுகின்றது; தேகத்தோடு கூடிய தன்மை அஞ்ஞானத்தினாற் கற்பிக்கப்பட்டதாயிருத்தலால் ஞானமொன்றினாலேயே நிவர்த்திக்கத்தக்கதாயிருத்தலின், ஞானத்தினாலேயே என்னும் ஏகாரத்தினால் கர்மம் சாதனமாதல் நீக்கப்படுகின்றது; "न कर्मणा न प्रजया கர்மத்தினாலுமில்லை; ஞானத்தினாலுமில்லை,'' என்று சுருதியிருத்தலால். எவன் ஞானசாஸ்திரத்தினை அப்பியசியாமல், நேர்ந்த வண்ணம் வாசனாக்ஷய மனோநாசங்களை அப்பியசித்துச் சகுணப்பிரஹ்மத்தை உபாசிக்கின்றானோ, அவனுக்குக் கைவல்யமில்லை, லிங்கதேகம் நீங்காமையால்,

ஆதலால் ஏகாரத்தால் (கர்மோபாசனைகளான) அவ்விரண்டும் நீக்கப்படுகின்றன. 'எதனால் விடுபடுகின்றானோ' என்ற சுருதிவாக்கியத்திற்கு, ஞானப்பிராப்தி வலிமையாகிய எதனால் சகல பந்தங்களினின்றும் விடுபடுகின்றானோ என்பது பொருள். பந்தமும் அநேக விதமாம்; அவித்தியாகிரந்தி, அப்பிரஹ்மத்துவம், ஹிருதயக்கிரந்தி, சம்சயம், கர்மங்கள், சர்வகாமத்துவம், மிருத்தியு, புனர்ஜன்மம் (மறுபிறப்பு) என்றல் முதலிய சொற்களால் அங்கங்கு வியவகரிக்கப்படுதலால். இப்பந்தங்கள்யாவும் ஞானத்தினால் நீக்கப்படுவனவாம். அவ்வாறே சுருதிகளும்,

"एतद्यो वेद निहितं गुहायां सोऽविद्याग्रन्थिं विकिरतीह सोम्य ।

சௌமியனே! எவன் குகையில் வைக்கப்பட்டுள்ள இதனை அறிகின்றானோ, அவன் அவித்தியாகிரந்தியினை அறுக்கின்றான்."

"ब्रह्म वेद ब्रह्मैव भवति ।

பிரஹ்மத்தை அறிகின்றவன் பிரஹ்மமேயாகின்றான்"

"भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः ।

"क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन्दृष्टे परावरे ॥

அப்பராவரத்தைக் கண்டகாலத்து இருதயக்கிரந்தி அறுகின்றது. சர்வ சம்சயங்களும் ஒழிகின்றன. இவனுடைய கர்மங்கள் நசிக்கின்றன."

"यो वेद निहितं गुहायां परमे व्योमन् ।

எவன் பரமா (அவ்யாகிருதத்தன்மையால் மேலான) ஆகாய(தேசம் பரிச்சேதமின்றிய அஞ்ஞான)மான (பஞ்சகோசவடிவ) குகையில் வைக்கப்பட்டதனை அறிகின்றானோ."

"सोऽश्नुते सर्वान्कामान्सह ।

அவன் சர்வகாமங்களையும் பிரஹ்மாவோடுகூடப் புசிக்கின்றான்."

"तमेव विदित्वाऽतिमृत्युमेति ।

அதனையே அறிந்து மிருத்தியுவைக் கடக்கின்றான்."

"यस्तु विज्ञानवान्भवति अमनस्कः सदा शुचिः ।

"स तु तत्पदमाप्नोति यस्माद्भूयो न जायते ॥

எவன் மனதின்றியவனாய், எப்போதும் சுசியாய், விஞ்ஞான முடையவனுகின்றானே, அவன் எதனின்று மறுபடியும் பிறவானே அந்தப்பதத்தை யடைகின்றான்."

"य एवं वेदाहं ब्रह्मास्मीति स इदं सर्वं भवति ।

எவன் யான் பிரஹ்மம் என்று இவ்வாறு அறிகின்றானே அவன் இவ்வெல்லா மாகின்றான்." என்றல் முதலிய சர்வத்துவமின்மை முதலிய பந்தத்தின் விருத்திபரமான வாக்கியங்கள் இங்கு உதகரிக்கத்தக்கனவாம். அத்தன்மைய இவ்விதேகமுத்தி ஞானேற்பத்தி சமகாலத்ததாக அறியத்தக்கதாம்; பிரஹ்மத்தில் அவித்தையினலாரோபிக்கப்பட்ட இப்பந்தங்கள் வித்தையினல் நசிக்குங்கால், மறுபடியும் உற்பத்தி சம்பவியாமையினுலும் அநுபவமின்மையினுலும் என்க. இவ்விதேகமுக்தி வித்தியாசமகாலத்த தென்பதனை ஸ்ரீமத் பாஷியகாரர் (பிரஹ்மசூத்திரத்தின்) சமந்வயசூத்திரத்தில் விரித்திருக்கின்றனர்.

"तदधिगम उत्तरपूर्वाघयोरश्लेषविनाशौ तद्व्यपदेशात् ॥

அதனடைவு முற்பிற்பாபங்கள் (பிந்திய பாபம்) தழுவாமையும் (முந்தி பாபம்) விநாசமாதலுமாம், அதனை (சுருதி) கூறுதலால்." (புண்ணியபாப மிரண்டும் பந்தஹேதுவாதலால் பாப மெனப்படும்.) என்பது பிரஹ்மசூத்திரம் ச-க-கங.

சங்கை:—நடப்புத் தேகம் விழுந்தபின் வருவது விதேகமுக்தியென்று அநேகர் வர்ணிக்கின்றனர். அப்படியே சுருதியும்

"तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्येऽथ संपत्स्ये ।

எதுவரையில் தேகம் விழவில்லையோ, அதுவரையில் அவனுக்கு (முக்தியடைய) தாமதமுண்டு. பின் அடைகின்றான்." என்று கூறுகின்றது. வாக்கிய விருத்தியினும்,

"प्रारब्धकर्मवेगेन जीवन्मुक्तो यदा भवेत् ।
"कंचित्कालमथारब्धकर्मबन्धस्य संक्षये ॥
"निरस्तातिशयानन्दं वैष्णवं परमं पदम् ।
पुनरावृत्तिरहितं कैवल्यं प्रतिपद्यते ॥

பிராரப்தகர்மவேகத்தால் எப்போது (அபரோக்ஷஞான உத்தரக்ஷணத்தில்) ஜீவன்முக்தனாகின்றானோ, அதன் பின் சிறிதுகாலத்தால் பிராரப்தம் நசிக்கவே, தன்னின் மிக்கவாநந்த மில்லாததும், வியாபகமும், பரமபதமும், மறுபடி மீட்சியில்லாததுமான கைவல்யத்தையடைகின்றான்." என்று கூறப்பட்டுளது. சூத்திரகாரரும்

"भोगेन त्वितरे क्षपयित्वा संपद्यते ।

போகத்தினால் மற்றிரண்டும் அதாவது பிராரப்தவடிவ புண்ணிய பாவமிரண்டும் குறையச் செய்து அடைகின்றான்." என்று கூறுகிறார் வசிஷ்டரும்,

"जीवन्मुक्तिपदं त्यक्त्वा स्वदेहे कालसात्कृते ।
विशत्यदेहमुक्तत्वं पवनोऽस्पन्दतामिव ॥

தனது தேகம் காலத்தால் விழும்போது ஜீவன்முக்திபதத்தை விட்டு, வாயு அசைவின்மைவடிவமடைவது போலத் தேகமின்றிய முக்தியினை அடைவான்." என்று கூறுகின்றார். எனின்,

உத்தரம்:—இது தோஷமன்று. சொல்லும் கருத்தும் வேறுபாட்டால் மதமிரண்டற்கு விரோதமின்மையால். விதேகமுக்தியென்பதிலுள்ள தேக சப்தத்தினால் எல்லாத் தேகக்கூட்டத்தினையும் கருதி அநேகர் வர்ணித்திருக்கின்றனர். யாம் வருந்தேகத்தினை மாத்திரம் கருதிக் கூறுகின்றோம்; அஃது ஆரம்பியாமைக்கே ஞானம் சம்பாதிக்கப்படுதலின். இத்தேகம் முன்னரே ஆரம்பிக்கப்பட்டதாம். ஆதலால் ஞானத்தினாலும் இதன் (வர்த்தமான தேகத்தின்) ஆரம்பம் நிவர்த்திக்கக்கூடிய தன்று. இத்தேக நிவிருத்தியும் ஞானத்தின் பயனன்று; அஞ்ஞானிகளுக்கும் பிராரப்த கர்மக்ஷயத்தில் அது நீங்குதலால். அப்படியானால் வர்த்தமான லிங்கதேகநிவிருத்தி ஞானத்தின் பயனாதக. ஞானமின்றி அது நீங்காதெனின், அங்ஙனமன்று; ஞானமிருக்கும் போதும் ஜீவன்முக்தியில் அதன் (லிங்கதேகத்தின்) நிவிருத்தியின்மையால் அப்படியானால் ஞானம் சிறிதுகாலம் பிராரப்த கர்மத்தினால் தடுக்கப்பட்டதாய் (லிங்கதேகத்தை) நீக்குவதாக விடினும், பிரதிபந்தம் (தடை) நீங்கியபோது லிங்கதேகத்தை நீக்குவதாகுமே யெனின், அது கூடாது; பஞ்சபாதிகாசாரியரால்

"यतो ज्ञानमज्ञानस्यैव निवर्तकम् ।

எதனால் ஞானம் அஞ்ஞானத்தை மாத்திரம் நிவர்த்திப்ப தாகின் றதோ" என்று கூறப்பட்டிருத்தலால். அப்படியானால் லிங்கதேக நிவிருத்திக்குச்சாதனம் யாதெனின், சாமக்கிரி நிவிருத்தி சாதன மென்று கூறுவாம். காரியத்தினை நிவர்த்திப்பது என்பது விரோதியின் இருப்பு, சாமக்கிரி நிவிருத்தி யென்று இருவகையினதே யாம். இலிங்கதேகத்திற்குச் சாக்ஷாத்விரோதியினைக் காணோம். சாமக்கிரியோ ஆரம்பிக்கப்பட்டது, ஆரம்பிக்கப்படாதது என்று இருவகைத்தாம். அவ்விரண்டானும் அஞ்ஞானிகளது லிங்கதேகம் இம்மையிலும் மறுமையிலும் நிற்கின்றது. ஞானிகளுக்கோ ஆரம்பிக்கப்படாதது ஞானத்தினால் நீங்குதலானும், ஆரம்பிக்க பட்டது போகத்தினால் நீங்குதலானும் நெய்யும் திரியுமின்றிய தீபம்போல் சாமக்கிரி நிவிருத்தியால் லிங்கதேகம் நீங்குகின்றது. ஆதலால் அதன் நிவிருத்தி ஞானத்தின் பயனன்று.

சங்கை:—அப்படியானால் இந்த நியாயத்தினால் வருந்தேகத்தின் ஆரம்ப மின்மையும் ஞானத்தின் பயனாகாது அவ்வாறாகவே ஆரம்பமின்மையே பயனோ? அல்லது அதனைக் காத்தல் பயனோ? முதலாவது அன்று; அது பிராகபாவ வடிவத்தால் அநாதிசித்தமாயிருத்தலின். இரண்டாவதும் அன்று; சஞ்சித கர்மவடிவசாமக்கிரி நிவிருத்தியினாலேயே வருந்தேகாரம்பப் பிராகபாவப்பிரதிபாலனம் சித்தித்தலால். அதன் நிவிருத்தியும் பயனன்று; அவித்தியா நிவிருத்தியே வித்தைக்குப் பயனாதலால்.

உத்தரம்:—இது தோஷமன்று, வரும் ஜன்ம சஞ்சிதங்கள் ஞானத்திற்குப் பயனாதல் பிரமாண முடையதாயிருத்தலின்;

" यस्माद्भूयो न जायते ।

எதனால் மறுபடியும் பிறக்கிறதில்லையோ." என்றல் முதலிய உதகரிக்கப்பட்ட சுருதிகள் அதில் பிரமாணமாம். ஞானம் அஞ்ஞானத்தினையே நிவர்த்திப்பதாமென்றும் நியாயத்தோடு விரோதமுமில்லை. அஞ்ஞானத்தோடு உடனிருக்கும் நியதங்களான அப்பிரஹ்மத்துவங்கள் அஞ்ஞான சப்தத்தால் பஞ்சபாதிகாசாரியர்களால்

கருதப்பட்டிருத்தலின். அப்படியன்றாயின் அநுபவவிரோதமாம். அஞ்ஞான நிவிருத்தியினைப்போல் அப்பிரஹ்மத்துவ முதலியவற்றின் நிவிருத்தியும் அநுபவிக்கப்படுகின்றது. ஆகலால் வருந்தேகமின்மை வடிவினதாகிய விதேக முக்தி ஞானசமகாலத்ததாம். அப்படியே யாஞ்ஞவல்கியவசனமும்

"अभयं वै जनक प्राप्तोऽसि ।

ஜனகரே! அபயத்தை யடைந்தவராயிருக்கின்றீர்." என்றும்,

"एतावदरे खल्वमृतत्वम् ।

இவ்வளவினாலே ஓ மைத்திரேயி! நிச்சயமாக அமிருதத்தன்மையுண்டாகின்றது." என்றும் சுருதியில் கேட்கப்பட்டிருக்கின்றது. வேறு சுருதியிலும்

"तमेवं विद्वानमृत इह भवति ।

அதனை இவ்வாறு அறிந்தவன் இங்கு அமிருதனாகின்றான்." என்று சொல்லப்பட்டிருக்கிறது. தத்துவ ஞான முண்டாயிருக்கினும், அதன் பயன் வடிவ விதேகமுக்தி அப்போதுண்டாகாது; காலாந்திரத்திற்றான் உண்டாகுமெனின், அப்போது ஜ்யோதிஷ்டோம முதலியவற்றிற் போல ஞானஜந்யமான அபூர்வ மொன்றனைக் கற்பிக்கவேண்டும். அவ்வாறாகவே கர்ம சாஸ்திரத்திற்றான் ஞான சாஸ்திரம் அடங்குகின்றது. இனி சொல்லபடுகின்றது:—மந்திர முதலியவற்றால் தடுக்கப்பட்ட அக்கினியினைப்போலப் பிராரப்தத்தால் தடுக்கப்பட்ட ஞானம் காலாந்தரத்தில் விதேகமுக்தியைக் கொடுக்கும் என்று சொல்லலாமெனின், இவ்வாறு கூடாது; விரோதமின்மையால். எம்மாற் கொள்ளப்பட்டுள்ள வருந்தேகத்தின் அத்தியந்தாபாவலக்ஷணமுள்ள விதேகமுக்தியானது எதனால் பிரதிபந்திக்கப்படுமோ, அந்த வர்த்தமான தேகத்தை மாத்திரம் ஸ்தாபிப்பதான பிராரப்தத்தோடு விரோதியாகாது. அன்றியும் க்ஷணிகத்தன்மையால் காலாந்தரத்தில் சுயம்(தானே) இல்லாததான ஞானம் எப்படி முக்தியைத் தரும்? ஞானத்திற்கு முக்ய கடைசி

சாக்ஷாத்காரலக்ஷண முண்டுபண்ணு மெனின், அது கூடாது; சாதன மின்மையால். பிரதிபந்தகமான பிராரப்த நிவிருத்தியோடு கூடவே குருசாஸ்திரதேகேந்திரியாதி சகல ஜகத்தோற்ற நீங்குதற்கு உனக்குச் சாதனம் யாதுளது? அப்படியானால்

"भूयश्चान्ते विश्वमायानिवृत्तिः ।

மறுபடியும் முடிவில் எல்லாமாயையும் நீங்குகின்றது." என்னும் இச்சுருதிக்குப் பொருள் யாதெனின், பிராரப்தத்தின் முடிவில் நிமித்தமின்மையால் தேகேந்திரிய முதலிய எல்லா நைமித்திக நிவிருத்தி யென்பதே பொருள். ஆதலால் உன்னால் கொள்ளப்படும் வர்த்தமான தேகமின்மைவடிவ விதேகமுக்தி பின் (தேகம் விழுந்த பிறகு) இருக்கட்டும் யாம் அபிப்பிராயப் பட்டுள்ளதோ ஞான சமகாலத்தினதேயாம். இவ்வபிப்பிராயங்கொண்டே பகவான் சேஷர்

"तीर्थे श्वपचगृहे वा नष्टस्मृतिरपि परित्यजन्देहम् ।
ज्ञानसमकालमुक्तः कैवल्यं याति हतशोकः ॥

ஞானசமகால முக்தன் தீர்த்தத்திலாவது நாயுண் புலையன் வீட்டிலாவது நினைவுதடுமாறினவனாயினும் தேகத்தை விட்டு, சோக நீங்கியவனாய்க் கைவல்யத்தை யடைகின்றான்." என்று கூறியிருக்கின்றார். ஆதலால் விதேகமுக்தியில் சாக்ஷாத்சாதனமான தத்துவஞானத்திற்குப் பிரதானத்துவம் பொருந்தியது. வாசனுக்ஷய மனோநாசங்கட்கு ஞான சாதனத்தன்மையால் மற்றபட்டதன்மையிருத்தலால் அப்பிரதானத்துவமாம். ஆசுரவாசனையின் க்ஷயத்தை யுண்டுபண்ணுந்தான் தைவ வாசனை ஞானசாதனமாதல் சுருதி ஸ்மிருதிகளால் காணப்படுகின்றது:—

"शान्तो दान्त उपरतस्तितिक्षुः समाहितो भूत्वा आत्मन्येवात्मानं पश्येत ॥

சமமுடையவனும் தமமுடையவனும் உபரதியுடையவனும், திதிக்ஷையுடையவனும், சமாதியுடையவனுமாய் ஆத்மாவினிடத்திலேயே ஆத்மாவைக் காண்பான்." என்பது சுருதி, ஸ்மிருதியும்,

"अमानित्वमदम्भित्वमहिंसा क्षान्तिरार्जवम् ।
आचार्योपासनं शौचं स्थैर्यमात्मविनिग्रहः ॥
इन्द्रियार्थेषु वैराग्यमनहंकार एव च ।
जन्ममृत्युजराव्याधिदुःखदोषानुदर्शनम् ॥
असक्तिरनभिष्वङ्गः पुत्रदारगृहादिषु ।
नित्यं च समचित्तत्वमिष्टानिष्टोपपत्तिषु ॥
मयि चानन्ययोगेन भक्तिरव्यभिचारिणी ।
विविक्तदेशसेवित्वमरतिर्जनसंसदि ॥
अध्यात्मज्ञाननित्यत्वं तत्त्वज्ञानार्थदर्शनम् ।
एतज्ज्ञानमिति प्रोक्तमज्ञानं यदतोऽन्यथा ॥

மானமின்மை, இடம்பமின்மை, ஹிம்ஸையில்லாமை, பொறுமை, நேர்மை, ஆசாரியோபாஸனம், செளசம், ஸ்தைரியம், தேகேந்திரியாதிப் பிரவிருத்தியினடக்கம், இந்திரியார்த்தங்களில் வைராக்கியம், அகங்காரமின்மை, பிறப்பு இறப்பு மூப்பு வியாதி என்பவற்றில் துக்கதோஷங்களை அநுசந்தித்தல், ஆசையின்மை, புத்திரதாரகிருகாதிகளில் அபிஷ்வங்கமின்மை, (அவர்களது சுகதுக்கங்களில் யான் சுகி துக்கி யென்று மதித்தலின்மை) இஷ்டா நிஷ்டங்களினடைவில் எப்போதும் சமமான சித்தமுடைமை, என்னிடத்து அநந்ய யோகத்தால் நழுவுதலில்லாத பக்தி, ஏகாந்தஸ்தலத்திருத்தல், ஜனக்கூட்டத்தைப் பிரீதியின்மை, அத்தியாத்ம ஞான நித்தியத்துவம் (ஆத்மாவை விஷயிக்கும் சாஸ்திரஜந்யஞானத்தில் நிஷ்டையுடைமை) தத்துவஞானார்த்த (அவித்தியாநிவிருத்தி ஆநந்தப் பிராப்திமய பிரயோஜனத்தின்) தரிசனம் என்னும் இது ஞான (ஞானசாதன) மென்று சொல்லப்பட்டுளது. இதனின் வேறானது யாதோ அது அஞ்ஞான மெனப்படும்." என்பதாம். பிறவற்றில் யானென்னும் புத்தி அபிஷ்வங்க மெனப்படும். இதனால் அறியப்படுகின்றது என்னும் வியுற்பத்தியால் இங்கு ஞானத்திற்கு ஞானசாதன மென்பது பொருளாம். மனோநாசமும் ஞானசாதனமாதல் சுருதிஸ்மிருதிகளில் பிரசித்தம்:—

"ततस्तु तं पश्यति निष्कलं ध्यायमानः ।

அதனால் நிஷ்கலத்தைத் தியானிப்பவன் அதனைக் காண்கின்றான்." என்பதும்.

अध्यात्मयोगाधिगमेन देवं मत्वा धीरो हर्षशोकौ जहाति ।

அத்தியாத்ம யோகத்தினடைவால் தெய்வத்தை யறிந்து, தீரன் ஹர்ஷசோகங்களை விடுகின்றான்." என்பதும் சுருதி. பிரத்தியகாத்மசமாதியினடைவால் தெய்வத்தை யறிந்து என்பது பொருள்.

यं विनिद्रा जितश्वासाः संतुष्टाः संयतेन्द्रियाः ।
ज्योतिः पश्यन्ति युञ्जानास्तस्मै विद्यात्मने नमः ॥

நித்திரை நீங்கினவர்களும், பிராணனை ஜயித்தவர்களும், சந்தோஷமுடையவர்களும், இந்திரியங்களை யடக்கினவர்களுமாய் யோகஞ் செய்கின்றவர்கள் எந்த ஜோதியைக் காண்கின்றார்களோ, அந்த வித்தியா சொரூபமான பிரமாத்மாவுக்கு நமஸ்காரம்." என்பது ஸ்மிருதி.

இவ்வாறு தத்துவஞானதி மூன்றற்கும் விதேகமுக்தி ஜீவன்முக்திவசத்தால் குண (அப்பிரதான)ப் பிரதானத்தன்மை வியவஸ்தை சித்தித்தது.

அப்படியானவ் விவிதிஷாஸந்நியாசியினால் சம்பாதிக்கப்பட்டனவாகிய இவற்றிற்கு வித்துவத்ஸந்நியாசத்திற்கு மேல் அநுவிருத்தி (பின் நிகழ்தல்) மாத்திரமா? அல்லது மறுபடியும் சம்பாதிக்கும் பிரயத்தனம அபேக்ஷிக்கப்படுகின்றதா? முதலாவது (அநுவிருத்தி மாத்திரமென்பது) கூடாது; தத்துவஞானத்தினைப்போலமற்றிரண்டும் பிரயத்தின மின்றிச் சித்திக்கவே, பிரதானியமாகப் பிரயோகிக்கப்பட்டதன் ஆகாமின்மை நேர்தலால். இரண்டாவதும் (மறுபடியும் சம்பாதிக்கும் பிரயத்தனம் அபேக்ஷிக்கப்படுகின்றதென்பதும்) கூடாது ; மற்றிரண்டினைப் போல ஞானத்திற்கும் பிரயத்தினபேக்ஷையுளதாகவே அப்பிரதானத்தன்மையாகப் பிரயோகிக்கப்பட்ட உதாசீனத்தன்மையின்மை நேர்தலால். இது தோஷமாகாது; ஞானத்திற்கு அநுவிருத்திமாத்திரமும், மற்றிரண்டற்கும் ஸத்தின் சாத்தியத்துவமு மென்று அங்கீகரித்தலால். அது

வருமாறு:—கிருதோபாசனன் அகிருதோபாசனன் என்று வித்தியாதிகாரி இருவகைப்படுவர். அவர்களுள், உபாஸிய(உபாசிக்கப் படுவதன்) சாக்ஷாத்கார பரியந்தமான உபாசனையைச் செய்து, ஞானத்தில் பிரவிர்த்திப்பானாயின், அப்போது வாசனக்ஷய மனோநாசங்கள் திடதரமாயிருத்தலால், ஞானத்திற்கு மேல் வித்துவத் ஸந்நியாசமும் ஜீவன் முக்தியும் சுவயமாகவே சித்திக்கின்றன. அப்படிப்பட்டவனே சாஸ்திரத்தில் கருதப்பட்ட முக்கிய வித்தியாதிகாரி ஆதலால் அவனைக் குறித்துச் சாஸ்திரங்களில் கூடவே உபந்நியசிக்கப்படுதலால், சொரூபமாக வேறு பிரிக்கப்பட்டவைகளாயினும், வித்துவத் ஸந்நியாசவிவிதிஷா சந்நியாஸங்களிரண்டும் கலந்தவை போலக் காணப்படுகின்றன. இக்காலத்தவர்களோ பெரும்பாலும் அகிருதோபாஸனர்களே; பிரிபத்தன்மை மாத்திரத்தினால் திடீரென்று வித்தையில் பிரவிருத்திக்கின்றனர். வாசனக்ஷய மனோநாசங்களையும் தாற்காலிகமாகச் சம்பாதிக்கின்றனர். அவ்வளவினால் சிரவணமனன நிதித்தியாசனங்கள் பொருந்துகின்றன. திடமாயப்பியசிக்கப்பட்ட அவற்றால் அஞ்ஞானசம்சய விபரீயயங்கள் நீங்குதலால் தத்துவஞானம் செவ்வைபாய் உதிக்கின்றது. உதித்தஞானத்தினைப்பாதிக்கும் பிரமாண மில்லாமையாலும், நீங்கிய அவித்தை மறுபடியும் உற்பத்தியாதற்குக் காரணமின்மையாலும் அதற்குத் தளர்ச்சியில்லை. வாசனக்ஷயமனோநாசங்களோ திடாப்பியாசமின்மையாலும் போகத்தைத்தரும் பிராரப்தத்தினால் அப்போதைக்கப்போது பாதிக்கப்படுதலாலும் காற்றுள்ளவிடத்து வைக்கப்பட்ட தீபம்போல் திடீரென்று நீங்குகின்றன. அப்படியே

"पूर्वेभ्यस्तु प्रयत्नेभ्यो विषमोऽयं हि संमतः ।
दुःसाध्यो वासनात्यागः सुमेरून्मूलनादपि ॥

முந்திய பிரயத்தினங்களினும் இது விஷமமென்று கருதப்படுகின்றது. வாசனாத்தியாகம் மகாமேருவைப் பிடுங்குவதைப் பார்க்கினும் கஷ்டசாத்தியமாம்" என்று வசிஷ்டரும்,

"चञ्चलं हि मनः कृष्ण प्रमाथि बलवद्दृढम् ।
तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम् ॥

கிருஷ்ண மூர்த்தியே! மனமானது சஞ்சலமும், கலக்குமியல்பின தும், பலமுடையதும் திடமுமாயிருக்கின்றது. அதன் நிக்கிரகம் வாயுவின் நிக்கிரகம் போல மிகத்துக்கத்தாற் செய்யக்கூடிய தென்று யான் கருதுகின்றேன்." என்றும் அர்ஜுனனும் கூறி யிருக்கின்றனர்.

ஆதலால் இக்காலத்தைப் வித்துவத் ஸந்நியாசிகட்கு ஞானத் தின் அநுவிருத்திமாத்திரமாம். வாசனாக்ஷயமனோநாசங்களோ பிரயத்தினத்தால் சம்பாதிக்கத்தக்கனவாமென்பது சித்தித்தது.

அப்படியானால் எதன்து க்ஷயத்தின் பொருட்டுப் பிரயத்தி னம் செய்யவேண்டுமோ அவ்வாசனை யாது எனின், அதன் சொரூ பத்தை

"दृढभावनया त्यक्तपूर्वापरविचारणम् ।
यदादानं पदार्थस्य वासना सा प्रकीर्तिता ॥
भावितं तीव्रसंवेगादात्मना यत्तदेव सः ।
भवत्याशु महाबाहो विगतेतरसंस्मृतिः ॥
तादृग्रूपो हि पुरुषो व समाविवशीकृतः ।
संपश्यति यदेवैतत्सद्वस्त्विति विमुह्यति ॥
वासनावेगवैवश्यात्स्वरूपं प्रजहाति तत् ।
भ्रान्तं पश्यति दुर्दृष्टिः सर्वं मदवशादिव ॥

திடபாவனையினால் முன்பின் விசாரித்தலைவிட்டுப் பதார்த்தத்தினை கொள்ளுதல் எதுவோ அது வாசனை யென்று சொல்லப்பட்டுளது, மகாபாகுவே! தீவிரவேகத்தால் தன்னால் பாவிக்கப்பட்டது எது வோ அதுவே யாகின்றான் அவன் மற்றவற்றை மறந்தவனாய் அப் படிப்பட்ட புருஷன் வாசனையினால் வசீகரிக்கப்பட்டவனாய் எத னைப் பார்க்கின்றானோ அதுவே சத்வஸ்துவென்று மோகிக்கின் றான். வாசனாவேகத்தால் வசமிழந்தவனாய் அச்சொரூபத்தை விடு கின்றான்; துர்த்திருஷ்டியானவன் கள்ளாலவசமிழந்தவனைப் போல எல்லாவற்றினையும் பிரமமுடையதாகக் காண்கின்றான்." என்று வசிஷ்டர் கூறியிருக்கின்றார். இங்கும் தத்தம் தேசாசார குலதர்ம பாஷாபேதங்களிலும் அவற்றின்கண் உள்ள தப்புமொழி நன்

மொழிகளிலும் பிராணிகளுக்குள்ள அபிநிவேசம் சாமானியமான உதாகரணம். விசேஷமாகவோ (வாசனையின்) பேதங்களைக் கூறிப் பின் உதாகரிப்பாம். கூறிடவிதமான வாசனையினை அபிப்பிராயப் பட்டே பிருகதாரணியகத்தில்

"स यथाकामो भवति तत्क्रतुर्भवति यत्क्रतुर्भवति तत्कर्म कुरुते यत्कर्म कुरुते तदभिसंपद्यते ।

அவன் எவ்விருப்பமுள்ளவனுகின்றானோ அந்தக்கிரதுவா (காமிய விஷயத்தில் மிகுந்த ருசியுள்ளவனு)கின்றான். எந்தக்கிரதுவாகின்றானோ, அக்கர்மத்தைச் செய்கின்றான். எக்கர்மத்தைச் செய்கின்றானோ, அதனைச் செவ்வையாய் அடைகின்றான்," என்பது கேட்கப்படுகின்றது.

வாசனுபேதம் வால்மீகி பகவானால்:—

"वासना द्विविधा प्रोक्ता शुद्धा च मलिना तथा ।
मलिना जन्महेतुः स्याच्छुद्धा जन्मविनाशिनी ॥
अज्ञानसुघनाकारा घनाहंकारशालिनी ।
जन्ममृत्युकरी प्रोक्ता मलिना वासना बुधैः ॥
पुनर्जन्माङ्कुरं त्यक्त्वा स्थिता संभृष्टबीजवत् ।
देहार्थे ध्रियते ज्ञातज्ञेया शुद्धेति चोच्यते ॥

வாசனை சுத்தமென்றும் அப்படியே மலினமென்றும் இருவகையாகச் சொல்லப்படும். மலினம் ஜன்மத்திற் கேதுவாகின்றது. சுத்தம் ஜன்மத்தைக் கெடுப்பதாம். அஞ்ஞான நற்கன வடிவினதும், கனாகங்காரவியல்பினதும், பிறப்பிறப்பினைத்தருவதும் மலினவாசனையாமென்று அறிஞர்களால் சொல்லப்படுகின்றது. மறுபிறப்பாகிய முளையினைவிட்டு வறுத்தவிதையினைப்போல நிற்பதாய் ஞாதஞேயமாய (அறியவேண்டியதனை அறிந்ததாய்)த் தேகத்தின் பொருட்டு எது தரிக்கப்படுகின்றதோ அது சுத்தமென்று சொல்லப்படுகின்றது.'' என்று சொல்லப்பட்டுள்ளது.

தேகாதிபஞ்சகோசங்களுக்கும் அவற்றின் சாக்ஷியாகிய ஆத்மாவிற்கு முள்ள பேதத்தினை மறைப்பது அஞ்ஞானம். அத

னால் நல்லகனமாகிய வடிவம் எதற்கிருக்கிறதோ அத்தன்மையது அஞ்ஞான நற்கனவடிவனதாம். எப்படிப் பாலானது மோர்கலத்தலால் கனமுடையது (கட்டி) ஆகின்றதோ, அல்லது எப்படி இளகிய நெய் அத்தியந்தம் குளிர்ந்த விடத்து நெடுங்காலம் வைக்கப்பட்டபோது நல்லகனவடிவின தாகின்றதோ, அதுபோல வாசனைக் கனவடினதாகின்றது என்று காண்க. இங்குக் கனமுடைமையும் பிராக்திபாம்பரையாம். அதனை (அசுத்தவாசனையை) ஆசுரசம்பத்தினை விவரிக்குமிடத்துப் பகவான்,

"प्रवृत्तिं च निवृत्तिं च जना न विदुरासुराः ।
न शौचं नापि चाचारो न सत्यं तेषु विद्यते ॥
असत्यमप्रतिष्ठं ते जगदाहुरनीश्वरम् ।
अपरस्परसंभूतं किमन्यत्कामहेतुकम् ॥
एतां दृष्टिमवष्टभ्य नष्टात्मानोऽल्पबुद्धयः ।
प्रभवन्त्युग्रकर्माणः क्षयाय जगतोऽहिताः ॥
काममाश्रित्य दुष्पूरं दम्भमानमदान्विताः ।
मोहाद्गृहीत्वाऽसद्ग्राहान्प्रवर्तन्तेऽशुचिव्रताः ॥
चिन्तामपरिमेयां च प्रलयान्तमुपाश्रिताः ।
कामोपभोगपरमा एतावदिति निश्चिताः ॥
आशापाशशतैर्बद्धाः कामक्रोधपरायणाः ।
ईहन्ते कामभोगार्थमन्यायेनार्थसंचयान् ॥

ஆசுரசம்பத்துள்ள ஜனங்கள் பிரவிருத்தியினையும் நிவிருத்தியினையும் அறியார்கள். அவர்களிடத்தும் சௌசமுமிராது; ஆசாரமுமிராது. அவர்கள் ஜகத்தினை அசத்தியமும், அதிஷ்டானவடிவப் பிரதிஷ்டையில்லாததும், ஈசுவரனின்றியதும், இயல்பாயுண்டாகியதும் காமத்தினைக்காரணமாக வுடையதுமாம்; (அதிருஷ்டாதிகாரணமும், சுவர்காதிபலனுமாகிய) வேறென்னையுளது? என்று கூறுகின்றனர். இந்தத்திருஷ்டியினை ஆசிரயித்து நாசமடைந்தது போன்ற ஆத்மாவினை யுடையவர்களும், அற்பபுத்திகளும், கொடிய செய்கையினரும், ஹித(நல)மின்றியவர்களுமாய் உலகத்தினது

அழிவின் பொருட்டுப் பலுகுகின்றார்கள். நிரப்புதற்கரிய காமத்தினையாசிரயித்துத் தம்பாகங்காரமதங்களோடு கூடியவர்களாய், (ஸ்நான சௌச்சாதிகளின்றிய) மலினவிரதமுடையவர்களாய், மோகத்தினால் விபரீதநிச்சயங்களைக் கொண்டு, இகலோக போககாரணமான கர்மங்களில் தமதிஷ்டப்படி பிரவர்த்திக்கின்றார்கள். மரணபரியந்தம் (யோகக்ஷேம நிமித்தமான) அளவற்ற சிந்தையினைக் கொண்டவர்களாய், விஷயபோக தற்பரர்களாய், (காணப்படும் போகவிலாசவடிவசுகம்) இவ்வளவினதே யென்னும் நிச்சயமுடையவர்களாய், நூற்றுக்கணக்கான ஆசாபாசங்களால் கட்டப்பட்டவர்களாய், காமக்குரோத தற்பரர்களாய், விஷயபோகத்தின் பொருட்டுக் களவு சூது வஞ்சனை முதலிய அநியாயத்தால் பொருட் சேர்த்தலை விரும்புகின்றார்கள்." என்று கூறியிருக்கின்றனர்.

அகங்காரமும் அவ்விடத்திற்றானே:—

"इदमद्य मया लब्धमिमं प्राप्स्ये मनोरथम् ।
इदमस्तीदमपि मे भविष्यति पुनर्धनम् ॥
असौ मया हतः शत्रुर्हनिष्ये चापरानपि ।
ईश्वरोऽहमहं भोगी सिद्धोऽहं बलवान्सुखी ॥
आढ्योऽभिजनवानस्मि कोऽन्योऽस्ति सदृशो मया ।
यक्ष्ये दास्यामि मोदिष्य इत्यज्ञानविमोहिताः ॥
अनेकचित्तविभ्रान्ता मोहजालसमावृताः ।
प्रसक्ताः कामभोगेषु पतन्ति नरकेऽशुचौ ॥

இது இப்பொழுது என்னால் அடையப்பட்டது. இம்மனோரதத்தைப் பெறுவேன். இது எனக்கு உளது. எண்ணிய இத்தனமும் எனக்குண்டாகும். இச்சத்துரு என்னால் கொல்லப்பட்டான். மற்றவர்களையும் கொல்லுவேன். யான் ஈசுவரன் (எல்லோரையும் அடக்குவதிற் சமர்த்தன்). யான் போகி; யான் சித்தன்; பலமுடையவன்; சுகி; செல்வமுடையவன்; ஜனக்கட்டுடையவன்; எனக்குச் சமமானவன் வேறுயாவன் உளன்? (ஒருவனும் இல்லை.) யாகஞ் செய்வேன்; கொடுப்பேன்; மகிழ்வேன் என்று அஞ்ஞானத்தினால் நாநாவிதமோகத்தை யடைந்திருக்கின்றனர்." அநேக என்

ணங்களால் பலவாறு மயங்கியவர்களாய் மோகவலையிலகப்பட்டவர்களாய் விஷயபோகங்களில் மிகப்பற்றியவர்களாய் அசுசியான நரகத்தில் விழுகின்றார்கள்." என்று உதாகரிக்கப்பட்டுளது. இதனால் மறுபிறப்பிற்குக் காரணமாதல் உதாகரிக்கப்பட்டதாகின்றது.

அது மறுபடியும்:—

"आत्मसंभाविताः स्तब्धा धनमानमदान्विताः ।
यजन्ते नामयज्ञैस्ते दम्भेनाविधिपूर्वकम् ॥
अहंकारं बलं दर्पं कामं क्रोधं च संश्रिताः ।
मामात्मपरदेहेषु प्रद्विषन्तोऽभ्यसूयकाः ॥
तानहं द्विषतः क्रूरान्संसारेषु नराधमान् ।
क्षिपाम्यजस्रमशुभानासुरीष्वेव योनिषु ॥
आसुरीं योनिमापन्ना मूढा जन्मनि जन्मनि ।
मामप्राप्यैव कौन्तेय ततो यान्त्यधमां गतिम् ॥

தம்மைத்தாமே மதிப்பவர்களும் (வணக்கமையாகிய) இறுமாப்புடையவரும், தனமானமதங்களோடுகூடியவர்களுமாகிய அவர்கள் பெயர் மாத்திரமாகிய யஞ்ஞங்களால் விதிபூர்வகமல்லாது இடம்பமாக யஜிக்கின்றார்கள். அகங்காரத்தையும், வலிமையையும், (பிறரை அலக்ஷியஞ்செய்தலாகிய) கர்வத்தையும், காமத்தையும் குரோதத்தையும் ஆசிரயித்தவர்களாய் தமது தேகங்களினும், பிறர் தேகங்களிலும் உள்ள என்னை மிகத்துவேஷிக்கின்றவர்களாய் எல்லாவிதத்தாலும் அசூயையைச் செய்கின்றவர்களாய் இருக்கின்றனர். பகைப்பவர்களும், கொடியவர்களும், நராதமர்களும், அசுபர்களுமாகிய அவர்களை யான் நிரந்தரம் சிங்கம் பாம்பு முதலிய) ஆசுரயோனிகளான சம்ஸாரங்களிலேயே தள்ளுகிறேன். குந்திபுத்திரா! ஆசுரயோனியை யடைந்தவர்களாய்ப் பிறப்புக்கள்தோறும் மூடர்களாய் என்னை அடையாமலே அதன்பின் அதமமானகதியை யடைகின்றார்கள்." என்று விரிக்கப்பட்டுளது.

சுத்தவாசனை ஞாதஞேய (அறியவேண்டியதனையறிந்த) வடிவினதாம். ஞேயசொரூபத்தினைப் பதின்மூன்றாவது அத்தியாயத்தில் பகவான்

"ज्ञेयं यत्तत्प्रवक्ष्यामि यज्ज्ञात्वाऽमृतमश्नुते ।
अनादिमत्परं ब्रह्म न सत्तन्नासदुच्यते ॥
सर्वतःपाणिपादं तत्सर्वतोऽक्षिशिरोमुखम् ।
सर्वतःश्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति ॥
सर्वेन्द्रियगुणाभासं सर्वेन्द्रियविवर्जितम् ।
असक्तं सर्वभृच्चैव निर्गुणं गुणभोक्तृच ॥
बहिरन्तश्च भूतानामचरं चरमेव च ।
सूक्ष्मत्वात्तदविज्ञेयं दूरस्थं चान्तिके च तत् ॥
अविभक्तं च भूतषु विभक्तमिव च स्थितम् ।
भूतभर्तृ च तज्ज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च ॥
ज्योतिषामपि तज्ज्योतिस्तमसः परमुच्यते ।
ज्ञानं ज्ञेयं ज्ञानगम्यं हृदि सर्वस्य धिष्ठितम् ॥

அறியத்தக்கது எதுவோ, எதனையறிந்து அமிருதத்தைப் புசிக்கின்றானோ அதனைச் சொல்லுகின்றேன்:—அது(ஞேயம்) அநாதியுடையது(காரியம் அன்று); மேலானது; வியாபகமானது; (பிரகிருதி பரமாணுக்களைப்போல்) சத்தன்று; (சூனியம்போல்)அசத்தன்று என்று சொல்லப்படுகின்றது. அது (ஞேயம்) எங்கும் கை கால்களை உடையது, எங்கும் கண்களையும் தலைகளையும், முகங்களையுமுடையது, எங்கும் செவிகளையுடையது; உலகத்தில் எல்லாவற்றையும் வியாபித்து நிற்கின்றது. எல்லா விந்திரியங்களாகவும் குண (விஷய)ங்களாகவும் விளங்குவது; சர்வேந்திரியங்களின்றியது; ஒருபற்றுமில்லாதது; எல்லாவற்றையும் தாங்குவது, குணமின்றியது, குணங்களின் போக்தா; அதுவே பூதங்களின் வெளியிலும் உள்ளிலுமிருப்பதும், அசரமும் சரமுமாம். சூக்ஷ்மமாயிருத்தலால் அறியப்படாததாம். அது (அஞ்ஞர்களுக்குத்) தூரத்ததும், (அறிஞருக்குச்) சமீபித்ததுமாம்; பூதங்களில் வேறுபடாததும் வேறுப்பட்டது போலிருப்பதுமாம்; பூதங்களைக் காப்பதும், விழுங்குவதும், ஆக்குவதுமாம். அது ஞேயம். அது ஜோதிகளுக்கெல்லாம் ஜோதியும் தமஸிற்குமேலான

தென்றும் சொல்லப்படுகின்றது. ஞான (சேதன) வடிவமும், ஞேய (விருத்திவியாப்தியா லறியப்படும்) வடிவமும் (அகம் பிரஹ்மாஸ்மி விருத்திவடிவ)ஞானத்தினு லடையப்படுவதும், எல்லோருடைய இதயத்திலும் நிலைத்துள்ளது மாம்." என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

இங்குத் தடஸ்தலக்ஷண சொரூபலக்ஷணங்களால் அறிதற்கு சோபாதிக நிருபாதிக சொரூப மிரண்டும் நிரூபிக்கப்பட்டது. ஒருபோது சம்பந்த முடையதாய் எது இலக்ஷியிக்கின்றதோ அது தடஸ்தலக்ஷணமாம். அது காகமிருப்பது தேவதத்தன்வீடு என்பதாம். அப்படியே மூன்று காலத்திலும் சம்பந்தமுடையதாய் எது இலக்ஷயிக்கின்றதோ அது சோரூபலக்ஷணமாம். அது மிகுந்த பிரகாசமுடையது சந்திரன் என்பதாம்.

அப்படியானுல் முன்பின் விசாரத்தினைவிட்ட தன்மை வாசனையின் லக்ஷணமாகச் சொல்லப்பட்டது. ஞேயஞானமோ விசாரஜந்நியமாம். அதலால் சுத்த வாசனையில் அந்த லக்ஷணம் இல்லையெனின், அது கூடாது; லக்ஷணத்தில் திடபாவனையினுல் என்று சொல்லப்பட்டிருத்தலால். எப்படி வெகு ஜன்மங்களில் திடமாய்ப் பாவிக்கப்பட்ட தன்மையினுல் இந்த ஜன்மத்தில் அந்நியர் உபதேசமில்லாமலே அகங்கார மமகார காமக்குரோதாதி மலினவாசனை உண்டாகின்றனவோ, அதுபோல முதல் ஞானம் விசாரத்தினுல் பெறப்பட்டதாயினும், நீண்டகாலம் நிரந்தரம் சற்காரங்களால் பாவிக்கப்பட்ட தத்துவத்தில் பின்னர் வாக்கிய யுக்தி விசாரமின்றியே முன்னிருக்கும் கடமுதலிய வற்றைப்போல திடமென்று தத்துவம் விளங்குகின்றது. அத்தன்மைய ஞானுநுவிருத்தியோடு கூடிய இந்திரிய வியாபாரம் சுத்தவாசனையாம். அதுவும் தேகம் ஜீவித்தற்குமாத்திரம் உபயோகப்படுகின்றது; இடம்பம் தர்ப்பமுதலிய ஆசுரசம்பத்தை யுண்டுபண்ணுதற் பொருட்டன்று; ஜன்மாந்திர ஏதுவான தர்மா தர்மங்களை யுண்டுபண்ணுதற் பொருட்டுமன்று. எப்படி வறுத்தநெல் முதலிய வித்துக்கள் குதிர் நிரப்புதல் மாத்திரத்திற் குபயோக முள்ளனவாகுமோ, உருசியுள்ள அந்நத்திற்காகா, பயிரிடவு முதவாவோ, அதுபோலவாம்.

மலினவாசனையும் லோகவாசனை, சாஸ்திரவாசனை, தேகவாசனை என்று மூவகையாம். எல்லா ஜனங்களும் எவ்விதத்தால்

என்னை நிந்திப்பார்களோ, அல்லது எவ்விதத்தால் துதிப்பார்களோ, அவ்விதமாகவே எப்போதும் நடப்பேனாக என்னும் அபிநிவேசம் (ஆக்கிரஹம் பிடிவாதம்) லோகவாசனையாம். அது சம்பாதிக்க முடியாததாயிருத்தலின் மலினமாம். அப்படியே

"को न्वस्मिन्सांप्रतं लोके गुणवान्कश्च वीर्यवान् ।

இவ்வுலகத்தில் குணவான் யாவன்? வீரியவான் யாவன்?" என்றல் முதலியவற்றால் வெகுவிதமாக வால்மீகி வினவியபோது அதற்கு நாரதர்

"इक्ष्वाकुवंशप्रभवो रामो नाम जनैः श्रुतः ।

இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த இராமன் என்பவர் அத்தன்மையராக ஜனங்களால் கேட்கப்படுகின்றார்." என்று விடைகொடுத்தார். அப்படிப்பட்ட இராமருக்கும் பதிவிரதா சிரோமணியாகிய உலகமாதாவான சீதாபிராட்டியாருக்கும் கேட்க முடியாததான ஜனாபவாதம் (பழிச்சொல்) பிரவர்த்தித்தது. மற்றவர்களுக்கு என்ன சொல்லவேண்டியிருப்பது? அப்படியே தேசவிசேஷத்தால் ஒருவரை யொருவர் நிந்திப்பதும் மிகுதியாகக் காணப்படுகின்றது. தென்தேசத்துப் பிராஹ்மணர்களால் வடதேசத்து வேதமுணர்ந்த பிராஹ்மணர்கள் மாம்ஸபக்ஷணிகளென்று நிந்திக்கப்படுகின்றனர். வடதேசத்தார்களால் தென்தேசத்தவர்கள் அம்மான் மகளை மணஞ்செய்பவர்கள் யாத்திரைகளில் மண்பாத்திரம் வகிக்கிறவர்கள் என்று நிந்திக்கப்படுகின்றனர். பஹ்ருசர்கள் ஆசுவலாயன சாகையினை கண்வசாகையினைவிட மேலானதாக மதிக்கின்றார்கள். வாஜஸநேயிகளோ அதனின் விபரீதமாகக் கூறுகின்றனர்.

இவ்வாறே தத்தம் குலகோத்திர பந்து வர்க்க இஷ்டதேவதாதிப் புகழ்ச்சியும் அந்நியர்களது குலகோத்திராதிகளின் நிந்தையும் பண்டிதர் முதல் பெண்கள் இடையர்கள் பரியந்தம் எங்கும் பிரசித்தமானதாம். இவ்வபிப்பிராயங்கொண்டே

"शुचिःपिशाचो विचलो विचक्षणः क्षमोऽप्यशक्तो बलवांश्च दुष्टः।

निश्चिन्तचोरः सुभगोऽपि कामी को लोकमाराधयितुं समर्थः ॥

சுசியுள்ளவன், பிசாசன் (அசுசியுள்ளவன்), சமர்த்தன், பொறு மையுள்ளவன், வலியில்லாதவன், வலியுடையன், துஷ்டன், மன தின்றிய திருடன், நல்லைசுவரிய முடையவன், காமி என்னும் எவன் உலகத்தை ஆராதிக்க (திருப்தி செய்விக்க)ச் சமர்த்தனாவன்? என் றும்.

"विद्यते न खलु कश्चिदुपायः सर्वलोकपरितोषकरो यः ।
सर्वथा स्वहितमाचरणीयं किं करिष्यति जनो बहुजल्पः ॥

எல்லா ஜனங்களையும் சந்தோஷிப்பிக்கும் ஓர் உபாயம் நிச்சயமாகக் கிடையாது. எவ்விதத்தினாலும் தனது இதம் ஆசரிக்கத்தக்கதாம். வெகுவாய்ப்பிதற்றும் உலகம் என்ன செய்யும்? என்றும் சொல்லப் பட்டுளது. ஆதலால் லோகவாசனை மலினவாசனையா மென்னும் அபிப்பிராயங் கொண்டே யோகீசுவரனுக்கு நிந்தையிலும் துதியி லும் சமமாயிருக்குந்தன்மை மோக்ஷசாஸ்திரங்களில் வர்ணிக்கப் பட்டிருக்கின்றது.

சாஸ்திரவாசனை பாடவியசனம், சாஸ்திரவியசனம், அநுஷ் டான வியசனம் என்று மூவகைப்படும். அவற்றுள் பாடவியசனம் பாரத்துவாஜரிடத்தில் காணப்படுகின்றது:—அவர் மூன்று புருஷா யுசுகளால் வெகுவேதங்களை ஓதி, இந்திரனால் நான்காவது ஆயு ளில் விரும்பப்பட்டவரானார். அதிலும் மிஞ்சிய வேதத்தை யத்திய யனஞ்செய்ய முயற்சித்தார். அவருக்கும் பாடம் முடியாததாயி ருத்தலால் மலினவாசனையாம். அம்முடியாமையை இந்திரன் அவ ருக்கறிவித்து பாடத்தினின்றும் நிவர்த்தித்து, அதனினும் அதிக மான புருஷார்த்தத்தின் பொருட்டு சகுணப்பிரஹ்ம வித்தையினை உபதேசித்தார். இவ்வெல்லாமும் தைத்திரீயப் பிராஹ்மணத்தில் காணத்தக்கதாம். அப்படியே அத்தியந்த புருஷார்த்தமாகாமை யால் வெகு சாஸ்திரவியசனமும் மலினமா மென்பது காவஷேய கீதையில்

"कश्चिन्मुनिर्दुर्वासा बहुविधशास्त्रपुस्तकभारैः सह महादेवं नमस्कर्तुमागतस्तत्सभायां नारदेन मुनिना भारवाहिगर्दभसाम्यमापादितः, कोपात्पुस्तकानि लवणार्णवे परित्यज्य महादेवेनाऽऽत्मविद्यायां प्रवर्तितः ॥

துர்வாசர் என்னும் ஓர் முனிவர் வெகுவித சாஸ்திரமான புஸ்தக பாரங்களோடு மகாதேவனை நமஸ்கரிக்க வந்தார். அச்சபையில் நாரதமுனிவரால் பாரஞ்சுமக்கும் கழுதைக்கொப்பாக மதிக்கப்பட்டார். அப்போது கோபத்தினால் புஸ்தகங்களை உப்புக்கடலில் எறிந்து விட்டு வந்து மகாதேவரால் ஆத்மவித்தையில் பிரவர்த்திக்கப்பட்டார்." என்று காணப்படுகின்றது. ஆத்மவித்தையும் அந்தர்முகமில்லாதவனும், குருகிருபையில்லாதவனுமாகிய ஒருவனுக்கு வேதசாஸ்திமாத்திரத்தினால் உண்டாகிறதில்லை. அப்படியே சுருதியும்

"नायमात्मा प्रवचनेन लभ्यो न मेधया न बहुना श्रुतेन ।

இந்த ஆத்மா பிரசங்கத்தினால் அடையப்படாது. மேதை (தாரணசக்தி) யினாலும் அடையப்படாது. வெகு கேள்வியினாலும் அடையப்படாது." என்று கூறுகின்றது. வேறிடத்திலும்

"बहुशास्त्रकथाकन्थारोमन्थेन वृथैव किम् ।
अन्वेष्टव्यं प्रयत्नेन तत्त्वज्ञैर्ज्योतिरान्तरम् ॥

வெகு சாஸ்திர கதையாகிய கந்தையினை வீணாக மெல்லுவதனால் என்ன பயன்? தத்துவமுணர்ந்தவர்களால் உள்ஜோதி பிரயத்தனத்தால் தேடத்தக்கதாம்." என்றும்,

"अधीत्य चतुरो वेदान्धर्मशास्त्राण्यनेकशः ।
ब्रह्मतत्त्वं न जानाति दर्वी पाकरसं यथा ॥

நான்கு வேதங்களையும் அநேகமாகத் தர்மசாஸ்திரங்களையும் ஓதி அகப்பை பாகத்தின் ரஸத்தையறியாதது போல பிரஹ்மதத்துவத்தை யறிகிறதில்லை." என்றும் சொல்லப்பட்டிருக்கின்றது.

"नारदश्चतुःषष्टिविद्याकुशलोऽप्यनात्मवित्त्वेनानुतप्तः सनत्कुमारमुपससाद ॥

நாரதர் அறுபத்துநான்கு வித்தைகளில் சமர்த்தராயிருந்தும் ஆத்மஞானமின்மையால் அநுதாபமடைந்தவராய்ச் சனற்குமாரரைச் சரணமடைந்தார்." என்று சாமவேதிகள் படிக்கின்றனர்.

அநுஷ்டான விபசனம் விஷ்ணு புராணத்தில் நிதாகருக்குக் காணப்படுகின்றது. வாசிஷ்ட ராமாயணத்தில் தாசூருக்குக் காணப்படுகின்றது. நிதாகரோ ருபுமுநிவரால் அடிக்கடி போதிக்கப்பட்டவராயினும் கர்மத்தில் சிரத்தையாகிய ஜடத்தன்மையை நெடுங்காலம் விடவில்லை. தாசூரனும் அத்தியந்த சிரத்தையாகிய ஜாட்டியத்தினால் அநுஷ்டானத்திற்குச் சுத்தமான இடத்தைப் பூமியில் ஓரிடத்தும் பெறவில்லை. இக்கர்மவாசனையும் மறுபிறப்புக்கு ஏதுவாயிருத்தலால் மலினமாம். அவ்வாறு அதர்வண வேதிகள்

"प्लवा ह्येते अदृढा यज्ञरूपा अष्टादशोक्तमवरं येषु कर्म ।
एतच्छ्रेयो येऽभिनन्दन्ति मूढा जरामृत्युं ते पुनरेवापियन्ति ॥
अविद्यायामन्तरे वर्तमानाः स्वयं धीराः पण्डितंमन्यमानाः ।
जङ्घन्यमानाः परियन्ति मूढा अन्धेनैव नीयमाना यथान्धाः ॥
अविद्यायां बहुधा वर्तमाना वयं कृतार्था इत्यभिमन्यन्ति बालाः ।
यत्कर्मिणो न प्रवेदयन्ति रागात्तेनातुराः क्षीणलोकाश्च्यवन्ते ॥
इष्टापूर्तं मन्यमाना वरिष्ठं नान्यच्छ्रेयो वेदयन्ते प्रमूढाः ।
नाकस्य पृष्ठे ते सुकृतेनानुभूत्वेमं लोकं हीनतरं वा विशन्ति ॥

எவற்றின்கண் தாழ்வான கர்மம் சொல்லப்பட்டுளதோ அந்தப் பதினெட்டு (ருத்துவிக்குகள் கசு, யஜமானன், பத்தினி உ, ஆக கஅ.) யஞ்ஞரூபங்களான இவை திடமின்றிய தெப்பங்களாம். இதனைச் சிரேயசாகக் கொண்டு எந்த மூடர்கள் களிக்கின்றனரோ, அவர்கள் மறுபடியும் மறுபடியும் ஜராமரணங்களை யடைகின்றனர். அவித்தியையினுள் இருப்பவர்களும் சுவயம் தீரர்களும் தம்மைப் பண்டிதராக மதிக்கின்றவர்களும் பிறக்கின்றவர்களுமான மூடர்கள் குருடனாற் செலுத்தப்படும் குருடர்களைப் போலப்பிறவிக்குழியில் விழுந்து வருந்துகின்றனர். பெரும்பாலும் அவித்தையிலிருப்பவர்களாய் யாம் கிருதார்த்தர் என்று அபிமானிக்கின்றனர் பாலர்கள். எதனால் கர்மிகள் இராகத்தினால் அறியார்களோ, அதனால் தாமடைந்த லோகம் நசிக்கப்பெற்றவராய்த் துக்கிகளாய் நழுவுகின்றனர். இஷ்டத்தினை (யாகாதிகளை) யும் பூர்த்தத்தினை (சத்திரம்,

சோவிற்சுட்டல், கிணறு வெட்டல் முதலியவற்றை)யும் மிகமேலா னதாக மதிப்பவர்களாய் மூடர்கள் இங்கு வேறு சிரேயஸின் அறி யார்கள் அவர்கள் சுவர்க்கத்தின் கண்ணே சுகிருதங்களை யநுப வித்து இந்த லோகத்தினையாவது அல்லது இதனிற் றாழ்ந்ததனை யாவது அடைகின்றனர்." என்று ஓதுகின்றனர்.

பகவானும்,

"यामिमां पुष्पितां वाचं प्रवदन्त्यविपश्चितः ।
वेदवादरताः पार्थ नान्यदस्तीति वादिनः ॥
कामात्मानः स्वर्गपरा जन्मकर्मफलप्रदाम् ।
क्रियाविशेषबहुलां भोगैश्वर्यगतिं प्रति ॥
भोगैश्वर्यप्रसक्तानां तयाऽपहृतचेतसाम् ।
व्यवसायात्मिका बुद्धिः समाधौ न विधी ते ॥
त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्यो भवार्जुन ।
निर्द्वन्द्वो नित्यसत्त्वस्थो निर्योगक्षेम आत्मवान् ॥
यावानर्थ उदपाने सर्वतःसंप्लुतोदके ।
तावान्सर्वेषु वेदेषु ब्राह्मणस्य विजानतः ॥

பார்த்த! வேதத்தின் (கர்மபயனைத் துதிக்கும் அர்த்தவாதவடிவ) வாக்கியத்தில் பற்றுள்ளவர்களும், (கர்மத்தைவிட)வேறான துவொன்று இல்லை யென்று சொல்லுபவர்களும், விஷயபோகங்களில் மனது டையவர்களும், சுவர்க்கத்தினையே மேலாகக்கொள்பவர்களுமான அபண்டிதர்கள், (அவிசாரத்தால் இரமணீயமாயிருத்தலின்)புஷ்பித் ததும் (மலர்ந்ததும்), ஜன்மகர்மபயன்களைத்தருவதும், போகைசுவ ரியங்களினது அடைவின்பொருட்டு (சாதனவடிவ) கிரியையின் பேதங்களால் விரிந்துள்ளதுமான யாதொரு இந்த (பிரசித்த) (கர்ம காண்டவடிவ வேதத்தின்) வாக்கினைக் கூறுகின்றனர். போக ஐசு வரியங்களில் பற்றுள்ளவர்களும், (முற்கூறிய வாக்காகிய) அதனால் இழுக்கப்பட்ட சித்தமுடையவர்களுமான புருஷர்களது உள்ளத் தில் நிச்சயவடிவினதாகிய புத்தி நிகழாது. (கர்மகாண்டவடிவ) வேதங்கள் முக்குண விஷய முடையனவாம். அர்ஜுன! நீ முக்

குண விஷய (சம்சார) மில்லாதவனும், துவந்த்வ மில்லாதவனும், நித்திய (சலிப்பின்றிய) சத்துவ (சத்துவகுணகாரியமான தைரிய)த் திலிருப்பவனும், (பெறாததைச் சம்பாதித்தலாகிய) யோகமும், (பெற்றதைக்காத்தலாகிய) க்ஷேமமும் இல்லாதவனும், ஆத்மாவை யுடையவனும் (அந்தர்முக அப்பியாசத்தில் சாவதானனும்) ஆவாய், (வாபி கூப தடாக முதலிய எல்லா) ஜலாசிரயத்திலும் எவ்வளவு (ஸ்நானபானாதி) பயனுளதோ, அவ்வளவு (பயன்)எங்கு மாக நிரம்பிய ஜலமுள்ள (நன்னீர்) சமுத்திரத்தில் உளதாம். அதுபோல(கர்மோபாசனுவடிவ) எல்லா வேதங்களிலும் (எவ்வளவு விஷயாநந்தவடிவ பயனுளதாமோ) அவ்வளவு (ஆநந்தாநுபவ வடிவபயன்) (பிரஹ்மாத்ம ஐக்கியத்தின்) விசேஷஞான முடையவனுன பிராஹ்மண (பிரஹ்ம நிஷ்டையுடையவ) னுக்கு உளதாம்.” என்று சொல்லப்பட்டுளது.

தர்ப்ப(கர்வ)த்திற்குக் காரணமாயிருத்தலால் சாஸ்திரவாசனை மலினமாம். சுவேதகேது அற்பகாலத்திற்றுனே சகல வேதங்களையும் ஓதி தர்ப்பத்தால் பிதாவுக்கு முன்னும் வணக்கமின்மையைச் செய்தான் என்று சாந்தோக்கியத்தின் ஆறுவது அத்தியாயத்தில் கூறப்பட்டுளது. அப்படியே பாலாகியென்னும் பிராஹ்மணர் சிலவுபாசனைகளைத் தெரிந்துகொண்டு தர்ப்பமுடையவராய் உசீனர முதலிய வெகு தேசங்களில் திக்குவிஜயத்தினுல் வெகு பிராஹ்மணர்களை அவமதித்துக் காசியில் அஜாதசத்துரு வென்னும் பிரஹ்மவிச்சிரோமணிக்கு உபதேசிக்கத்துணிந்தார் என்று கௌஷீதகியுபநிஷதத்தினரும் வாஜஸநேயிகளும் ஓதுகின்றனர்.

தேகவாசனையும் ஆத்மத்தன்மை குணம் பெறுதல் தோஷநீக்கமென்னும் பிராந்திகளால் மூவகைத்தாம். அவற்றுள் ஆத்மத்தன்மையினைப் பாஷியகாரர்

“देहमात्रं चैतन्यविशिष्टमात्मेति प्राकृता लोकायतिकाश्च प्रतिपन्नाः।

சைதன்னிய விசிஷ்டமான தேகமாத்திரத்தினை ஆத்மாவென்று பிராகிருதர்களும் லோகாயதிகர்களும் அறிந்திருக்கின்றனர். என்று உதகரித்திருக்கின்றனர்.

“स वा एष पुरुषोऽन्नरसमयः।

அந்த (பிராஹ்மணத்திற்கூறிய) இந்த (மந்திரத்திற்கூறிய) புருஷன் அந்நரஸமயன்" என்றாரம்பித்து,

"तस्मादन्नं तदुच्यते ।

அதனால் அது அந்நமென்று சொல்லப்படுகின்றது." என்னும் முடிவான கிரந்தத்தால் எடுத்துக்கொண்ட அவ்வுணர்ச்சியினையே தைத்திரீயர் விளக்குகின்றனர்.

"विरोचनः प्रजापतिनाऽनुशिष्टोऽपि स्वचित्तदोषेण देहात्मबुद्धिं दृढीकृत्वासुरान्सर्वाननुशशास ॥

விரோசனன் பிரஜாபதியினால் உபதேசிக்கப்பட்டும், தனது சித்த தோஷத்தினால் தேகாத்மபுத்தியைத் திடஞ்செய்து, எல்லா அசுரர்களுக்கும் உபதேசித்தான்." என்று சாந்தோக்கியர்கள் எட்டாவது அத்தியாயத்தில் கூறுகின்றனர்.

குணம் பெறுதல் இலௌகிகம் சாஸ்திரீய மென்று இருவகையாம். நல்ல சப்தமுதலியவற்றைச் சம்பாதித்தல் இலௌகிகம். இனிய குரலால் பாடவாவது அத்தியயனஞ் செய்யவாவது தைலபானம் மிளகுதின்னல் முதலியவற்றில் உலகத்தவர் முயலுகின்றனர். மிருதுவானஸ்பரிசத்தின் பொருட்டு உலகத்தினர் புஷ்டியைத்தரும் ஔஷத ஆகாரங்களை யுபயோகப்படுத்துகின்றனர். அழகின்பொருட்டு அப்பியங்கம் தேய்ப்பு, வஸ்திரம் அலங்காரம் என்பவற்றைக் கொள்ளுகின்றனர். நல்லவாசனையின் பொருட்டு புஷ்பமாலை சந்தனங்களைத் தரிக்கின்றனர். சாஸ்திரீயமான குணத்தினைக்கொள்ளுதற்குக் கங்காஸ்நான சாளிக்கிராமதீர்த்த முதலியவற்றைச் சம்பாதிக்கின்றனர்.

தோஷநீக்கமும் சிகித்ஸக(வைத்தியர்)களாற் சொல்லப்பட்ட ஔஷதங்களால் முகமுதலியவற்றைக் கழுவுதலால் இலௌகிகமும், சௌசாசமனங்களால் வைதிகமுமாக இருவகைப்படும். இத்தேகவாசனைக்கும் மலினத்துவம் சொல்லப்படுகின்றது. தேகத்திற்கு ஆத்மத்துவம் முற்றும் அப்பிரமாணமாயிருத்தலாலும் சகல துக்கத்திற்குங் காரணமாயிருத்தலாலும் மலினத்துவமாம். இவ்வர்த்தத்தில் பூர்வாசாரியர்கள் எல்லோராலும் பாராக்கிரமிக்கப்பட்டுளது.

குணு தானத்தினையும் பெரும்பாலும் காண்கின்றோம். பாடகர்களும் அத்தியாபகர்களும் பிரயத்தனஞ் செய்பவர்களாயினும் அநேகர் நல்ல குரலை அடைகிறதில்லையென்பது பிரசித்தமே. மிருதுவஸ்பரிசமும் அங்க புஷ்டியும் நியமமாய் ஆகத்தக்கனவன்று. அழகும் நல்வாசனையும் வஸ்திரமாலைகளிலிருப்பனவாம்; தேகத்திலிருப்பனவன்று. இதனுற்றான் விஷ்ணுபுராணத்தில்

"मांसासृक्पूयविण्मूत्रस्नायुमज्जास्थिसंहतौ ।
देहे चेत्प्रीतिमान्मूढो भविता नरकेऽपि सः ॥
स्वदेहाशुचिगन्धेन न विरज्येत यः पुमान् ।
विरागकारणं तस्य किमन्यदुपदिश्यते ॥

மாம்சம், ரக்தம், சீழ், மலம், மூத்திரம், நரம்பு, மஞ்ஜை(கொழுப்பு), எலும்பு இவைகள் கூடிய தேகத்தில் பிரீதியுள்ளவனுயின், அம்மூடன் நரகத்திலும் பிரீதியுள்ளவனவன். தனது தேகத்தின் அசுசிகந்தத்தினுல் எப்புருஷன் விரக்தியடைய வில்லையோ, அவனுக்கு விரக்தி காரணமாக வேறு யாது உபதேசிக்கப்படும்?" என்று சொல்லப்பட்டுளது. சாஸ்திரீயமான குணத்தைப்பெறுதலும் பிரபலமான சாஸ்திரத்தினுல் நீக்கப்படுகின்றது. எப்படி

"न हिंस्यात्सर्वाभूतानि ।

சர்வஜீவர்களையும் ஹிம்ஸிக்கலாகாது." என்பதற்கு

"अग्नीषोमीयं पशुमालभेत ।

அக்கினீஷோமீய பசுவை கொல்லுக." என்பதனுல் அபவாதமுண்டோ அது போலவாம். மற்ற சாஸ்திரத்தினைவிட இச்சாஸ்திரமே பிரபலதரமாம்:—

"यस्याऽऽत्मबुद्धिः कुणपे त्रिधातुके स्वधीः कलत्रादिषु भौम इज्यधीः।
यत्तीर्थबुद्धिः सलिले न कर्हिचिज्जनेष्वभिज्ञेषु स एव गोखरः ॥

எவனுக்கு முத்தாது (வாதபித்தகப) வடிவ பிணத்தில் ஆத்மபுத்தியும், களத்திர முதலியவற்றில் எனது என்னும் புத்தியும், பூமிகாரியமான விக்கிரகாதிகளில் தேவதாபுத்தியும், (கங்கையாதி) நீரில் தீர்த்த (பரிசுத்த) புத்தியுமிருக்கின்றதோ, அப்படிப்பட்ட புத்தி

தத்துவஞானிகளிடத்தில்லையோ, அவனே *கோகாமாம் (பசுக்கழுதையாம்)."

"अत्यन्तमलिनो देहो देही चात्यन्तनिर्मलः ।
उभयोरन्तरं ज्ञात्वा कस्य शौचं विधीयते ॥

தேகம் அத்தியந்தமலினம். தேகி அத்தியந்த நிர்மலன். இவ்விரண்டற்கும் பேதத்தையுணர்ந்து எதற்குச் சௌசம் விதிக்கப்படுகின்றது." என்பது பிரபலசாஸ்திரம். இந்தச் சாஸ்திரத்தினால் தோஷநீக்கம் நிஷேதிக்கப்பட்டு, குணதானம் நிஷேதிக்கப்படாவிடினும், விரோதியான பிரபல தோஷமுள்ள விடத்துக் குணம் கொள்ளக்கூடியதாகா தெனக் குணத்தைக்கொள்ளுதல் நிஷேதிக்கப்படுகின்றது. அத்தியந்த மலினத்தன்மையும் இங்கு மைத்திராயணீய சாகையில்

"भगवन्नस्थिचर्मस्नायुमज्जामांसशुक्रशोणितश्लेष्माश्रुदूषिकादूषिते
विण्मूत्रवातपित्तसंघाते दुर्गन्धे निःसारेऽस्मिञ्शरीरे किं कामोपभोगैः ॥

பகவானே! எலும்பு, தோல், நரம்பு, மஜ்ஜை, மாம்ஸம், சுக்கிலம், சோணிதம், கபம், கண்ணீர், கண்ணின்பூளை என்பவற்றால் தூஷிக்கப்பட்டதும், மலமூத்திர வாதபித்தக் கூட்டமும், தீநாற்ற முடையதும், சாரமில்லாததுமான இந்தச்சரீரத்தில் விரும்பப் படுவனவாகிய விஷயங்களின் போகங்களால் என்ன பயன்?" என்று கேட்கப்பட்டிருக்கின்றது. இச்சரீரம் மைதுனத்தினாலேயே யுண்டாகியதும், சம்வித்தி (சைதன்னியமி)ல்லாததும், நரகத்தினைப்போல மூத்திரத்துவாரத்தால் வெளிப்பட்டதும், எலும்புகளால் சேர்க்கப்பட்டதும், மாம்ஸத்தினால் பூசப்பட்டதும், தோலால் மூடப்பட்டதும், மலமூத்திர கப பித்த மஜ்ஜா மேதசு (கொழுப்பு) † வஸா என்பவற்றாலும் மற்று மனேக மலங்களாலும் பொக்கிஷம் பணத்தினால் நிரப்பப்படுவது போல நிரப்பப்பட்டுள்ளதுமாம். சிகித்ஸையினால் ரோகம் சாந்தியாவது நியதமன்று; ரோகம்

* கோக்களுக்காகப் புல் முதலியபாரம் சுமக்கும் கழுதை.

† வஸா என்பது மஜ்ஜா எனப்படும் எலும்பின் மூளையைவிட வேறான ஓர்வகை மாம்ஸத்தின் மூளை.

ஒருகால் சாந்தமானாலும் மறுபடியும் உதிக்கின்றது. ஒன்பது துவாரங்களாலும் நிரந்தரம் ஒழுகுகின்ற மலங்களுடையதும், எண்ணிறந்த மயிர்க்கால்களால் வெளிப்படும் வேர்வையால் நனைபடுவதுமான சரீரத்தை எவன்றான் சுத்தி செய்யக்கூடியவன்? அது பூர்வாசாரியர்களால்

"नवच्छिद्रकृता देहाः स्रवन्ति घटिका इव ।
बाह्यशौचैर्न शुध्यन्ति नान्तःशौचं तु विद्यते ॥

ஒன்பது துவாரங்களாலாக்கப்பட்ட சரீரங்கள் துலைக்கலயங்களைப் போல் ஒழுகுகின்றன. வெளி சௌசங்களால் சுத்தியாகிறதில்லை. உள்சௌசமும் கிடையாது." என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அதனால் தேகவாசனை மலினமாம். இது மலினமா மென்னும் அபிப்பிராயங்கொண்டே வசிஷ்டர்

"आपादमस्तकमहं मातापितृविनिर्मितः ।
इत्येको निश्चयो राम बन्धायासद्विलोकनात् ॥
सा कालसूत्रपदवी सा महावीचिवागुरा ।
साऽसिपत्रवनश्रेणी या देहोऽहमिति स्थितिः ॥
सा त्याज्या सर्वयत्नेन सर्वनाशेऽप्युपस्थिते ।
स्प्रष्टव्या सा न भव्येन सश्वमांसेव पुल्कसी ॥

இராமா! பாதமுதல் சிரசுபரியந்தமான யான் மாதா பிதாக்களால் நிர்மிக்கப்பட்டவன் என்னும் ஒரு நிச்சயமானது அசத்துணர்ச்சியாதலால் (மித்தியா ஞானமாதலால்) பந்தத்தின் பொருட்டாம். தேகம் யான் என்னும் நிலை எதுவோ அது காலசூத்திர மென்னும் நரகமார்க்கமாம்; மகா அவீசியென்னும் நரகவலையாம்; அசிபத்திர வனமென்னும் நரகத்திற்கு ஏணியாம். அது எல்லா நாசங்களும் நெருங்கினும் முழுமுயற்சியோடும் நீங்கத்தக்கதாம். நாய் மாம்ஸத்தோடு கூடிய சண்டாளியினைப்போல புனித முடையவனால் அது (தேகம் யானென்னும் ஸ்திதி) தொடத்தக்கதன்று." என்று கூறியிருக்கின்றனர். இந்த லோகசாஸ்திர தேகவாசனைமூன்றும் அவிவிவேகிகளால் கொள்ளத்தக்கதாகக் காணப்படினும், ஞான விருப்புடையவனுக்கு ஞானோற்பத்திக்கு விரோதியா யிருத்தலாலும்

ஞானிக்கு ஞானப்பிரதிஷ்டைக்கு (ஞான நிலைப்பிற்கு) விரோதியா யிருத்தலாலும், விவேகிகளால் தள்ளத்தக்கதாம். இதனாற்றான்

"लोकवासनया जन्तोः शास्त्रवासनयाऽपि च ।
देहवासनया ज्ञानं यथावन्नैव जायते ॥

லோகவாசனையினாலும் சாஸ்திரவாசனையினாலும் தேகவாசனையினாலும் பிராணிகளுக்கு ஞானம் உள்ளபடியே யுண்டாகிறதில்லை." என்று ஸ்மிருதி கூறுகின்றது. தம்பம் தர்ப்பமுதலிய ஆசுரசம்பத்துவடிவ மானஸவாசனை எதுவோ அது நரகவேதுவா யிருத்தலால் மலினமாதல் அதிப்பிரசித்தம். ஆதலால் எவ்வுபாயத்தினலாவது வாசனா நாசன க்ஷயம் சம்பாதிக்கத்தக்கதாம், எப்படி வாசனாக்ஷயம் சம்பாதிக்கத்தக்கதோ, அப்படியே மனதின் க்ஷயமும் சம்பாதிகத்தக்கதாம். தார்க்கிகனைப்போல நித்தியத்திரவியம் அணுபரிமாணம் மனமென்று வைதிகர் கொள்ளுவதில்லை. எதனால் மனோநாசம் வருத்தத்தினால் சம்பாதிக்கத்தக்கதாமோ அதனால் மனம் சாவயவமும் அநித்தியமும், எப்போதும் அரக்கு பொன் முதலியவற்றைப் போல வெகுவிதபரிணாம மாதற்குரிய திரவியமாம். அதன் லக்ஷணத்தினையும் பிரமாணத்தினையும் வாஜஸநேயிகள்

"कामः संकल्पो विचिकित्सा श्रद्धाऽश्रद्धा धृतिरधृतिर्ह्रीर्धीर्भीरित्येतत्सर्वं मन एव ।

காமம், சங்கற்பம், விசிகித்஛ை, (சம்சயம்) சிரத்தை, அசிரத்தை, திருதி (தைரியம்), அதிருதி, வெட்கம், புத்தி, பயம் என்னும் இவையாவும் மனமே." என்று இதன் இலக்கணத்தினைச் செவ்வையாய்க் கூறுகின்றனர். காமாதிவிருத்திகள் கிரமமாகவுண்டாகின்றவைகளாய்ச் சாக்ஷாத்ப்பிரத்தியக்ஷ (கட்புலனாற் கவரப்படும்) கடாதிகளைப் போல சாக்ஷிப்பிரத்தியக்ஷத்தினால் மிக வெளிப்படையாய்க் காணப்படுகின்றன. அவ்விருத்தியுபாதானம் மனமென்பது பொருள்.

"अन्यत्रमना अभूवं नादर्शमन्यत्रमना अभूवं नाश्रौषम् ।

வேறிடத்து மனமாயிருந்தேன். அதனால் பார்க்கவில்லை, வேறிடத்து மனதாயிருந்தேன். அதனால் கேட்கவில்லை." என்பதும்,

"मनसा ह्येष पश्यति मनसा शृणोति ।

மனதினாலேயே பார்க்கின்றான். மனதினால் கேட்கின்றான்." என்றல் முதலியனவும் பிரமாணமாம். கண்ணிற்கருகில் மிக்க வொளியினிடையிலிருக்கும் குடமும், காதுக்கருகில் உரத்துப்படிக்கப்பட்டவேதமும் எதனுடைய கவனமில்லாதபோது அறியப்படுகிறதில்லையோ, எதனுடைய கவனிப்புள்ளபோது அறியப்படுகின்றதோ, அத்தன்மையதான சர்வ விஷயஞானத்திற்கும் சாதாரணகாரணம் அந்வயவியதிரேகங்களால் அறியப்படுகின்றது என்பது பொருள். அசனாலும் முதுகுப்பக்கமாகத் தொடப்பட்டவன் மனதினால் அறிகின்றான் என்னும் இஃது உதாரணமாம். எதனால் லக்ஷணப்பிரமாணங்களால் சித்தித்தது மனதோ அதனால் அது இவ்வாறு உதாகரிக்கத்தக்கதாம். முதுகுப்புறத்தில் பிறனால் தொடப்பட்ட தேவதத்தன் கையின் ஸ்பரிசம் இது, விரலின் ஸ்பரிசமிது என்று விசேஷமாய் அறிகின்றான்; அங்கு நேத்திரம் செல்லுகிறதில்லை. துவக்கிந்திரியமோ மென்மைவன்மைகளை மாத்திரம் கிரகித்து நீங்குகின்றது. ஆதலால் மனமே விசேஷ ஞானகாரணமாக மிஞ்சுகின்றது. அதுவும் மனனத்தினால் மனமென்றும், சிந்தனத்தினால் சித்தமென்றும், சொல்லப்படுகின்றது. அச்சித்தமும் சத்துவரஜதமோ குணவடிவமாம்; பிரகாச பிரவிருத்தி மோகங்களான சத்துவாதிகளின் காரியங்கள் அங்குக் காணப்படுதலால். பிரகாச முதலியன குணங்களின் காரியமென்பது குணாதீதலக்ஷணத்தில் அறியப்படுகின்றது;

"प्रकाशं च प्रवृत्तिं च मोहमेव च पाण्डव ।

பாண்டவ! (குணங்களின் காரியம்) பிரகாசம் (ஞானம்) பிரவிருத்தி (செய்கை) மோகம் (அறியாமை) என்பவற்றை." என்று கூறுதலால், சாங்கிய சாஸ்திரத்திலும், "பிரகாசப் பிரவிருத்திமோகங்கள் நியமத்தின் பொருட்டா"மென்று சொல்லப்பட்டுளது. பிரகாசமென்பது இங்கு வெள்ளிய விளக்கவடிவினதன்று; மற்றோ ஞானமாம் அது

"सत्त्वात्संजायते ज्ञानं रजसो लोभ एव च ।
प्रमादमोहौ तमसो भवतोऽज्ञानमेव च ॥

சத்துவத்தினின்றும் ஞானமுண்டாகின்றது. இரஜஸினின்றும் லோபமேயுண்டாகின்றது. தமஸினின்றும் பிரமாத மோகங்கள் உண்டாகின்றன. அஞ்ஞானமுமே யுண்டாகின்றது." என்று சொல்லப்பட்டிருத்தலால் ஞானம்போல் சுகமும் சத்துவத்தின் காரியமாம். அது

सत्त्वं सुखे सञ्जयति रजः कर्मणि भारत ।
ज्ञानमावृत्य तु तमः प्रमादे सञ्जयत्युत ॥

"பாரத! சத்துவம் சுகத்தில் செவ்வையாய் ஜயிக் (முக்கியமா)கின்றது. இரஜஸ் கர்மத்தில் ஜயிக்கின்றது. தமஸ் ஞானத்தினை மறைத்து மோகத்தில் வெல்லுகின்றது" என்று சொல்லப்பட்டுளது; சமுத்திரத்தின் அலைகளைப்போல இடைவிடாது குணங்கள் பரிணமிக்குங்கால் ஒருகாலத்து ஒன்று உண்டாகின்றது; மற்றிரண்டும் அடங்குகின்றன. அது

"रजस्तमश्चाभिभूय सत्त्वं भवति भारत ।
रजः सत्त्वं तमश्चैव तमः सत्त्वं रजस्तथा ॥

பார்த்த! இரஜஸையும் தமஸையும் அடக்கிச் சத்துவம் உண்டாகின்றது. சத்துவத்தினையும் தமஸினையும் அடக்கி இரஜஸுண்டாகின்றது." என்றும்

"बाध्यबाधकतां यान्ति कल्लोला इव सागरे ।

சமுத்திரத்தில் அலைகளைப்போல் பாதிக்கப்படுவது பாதிப்பது எனுந்தன்மையை யடைகின்றன." என்றும் சொல்லப்பட்டுளது. அவற்றுள், தமஸ் உண்டாகுங்கால் ஆசுரசம்பத்து உதிக்கின்றது. இரஜஸ் உண்டாகுங்காலத்து லோகமுதலிய வாசனை மூன்றும் உதிக்கின்றன; சத்துவமுதிக்குங்காலத்துத் தைவீசம்பத்து உண்டாகின்றது. இவ்வபிப்பிராயங் கொண்டே

"सर्वद्वारेषु देहेऽस्मिन् प्रकाश उपजायते ।
ज्ञानं यदा तदा विद्याद्विवृद्धं सत्त्वमित्युत ॥

இந்தத்தேகத்தில் எல்லாத்துவாரங்களிலும் பிரகாசமுண்டாகின்றது; எப்போது ஞானமுண்டாகிறதோ அப்போது சத்துவம்

மிக விருத்தியடைந்தது என்றறிக." என்று கூறப்பட்டுளது. அந்தக்கரணம் முக்குண வடிவமாகக் காணப்படினும் சத்துவமே இம்மனதிற்கு முக்கிய உபாதான காரணமாம். (உபாதானத்திற் குச்சகாரிவடிவமான அவயவங்கள் உபஷ்டம்பக (துணைக்காரண) மெனப்படும்.) இரஜஸும் தாமஸும் உபஷ்டம்பகங்களாம். இது காரணம் ஞானிகளுக்கு யோகாப்பியாசத்தினால் இரஜஸ் தமசுகள் நீக்கப்பட்டபோது சத்துவசொரூபமே மிஞ்சுகின்றது. இவ் வபிப்பிராயங்கொண்டே

"ज्ञस्य चित्तमचित्तं स्याज्ज्ञचित्तं सत्त्वमुच्यते ।

அறிஞனுடைய சித்தம் அசித்தமாகின்றது. அறிஞனது சித்தம் சத்துவமெனப்படுகின்றது." என்று சொல்லப்பட்டுளது. அந்தச் சத்துவமும் சஞ்சலத்தன்மைக்குக் காரணமான இராஜோகுணமின் மையால் ஏகாக்கிரமாம்; பிராந்திகற்பித ஆத்ம அநாத்மசொரூப மான ஸ்தூலபதார்த்தாகாரத்திற்குக் காரணமான தமோகுண சூநிய மாயிருத்தலால் சூக்ஷ்மமாய்; அதனால் ஆத்மதரிசன யோக்கியமாம். இதனாற்றான் சுருதி

"दृश्यते त्वग्र्यया बुध्या सूक्ष्मया सूक्ष्मदर्शिभिः ।

சூக்ஷ்மதரிசிகளால் மேன்மையான (ஏகாக்கிரமான நுட்ப) புத்தியி னால் (ஆத்மா) அறியப்படுகின்றது." என்று கூறுகின்றது. நிச் சலமாக வாயுவினால் அசைக்கப்படும் விளக்கினாற் இரத்தினம் முத்து முதலியவற்றின் இலக்ஷணங்கள் நிச்சயிக்கக்கூடியனவாகா. ஊசியினால் தைக்கப்படுவதான மெல்லியதுணி ஸ்தூலமான கடப் பாரையினால் தைக்கப்படமாட்டாது. அந்த இத்தன்மைய சித் தமே அயோகிகளிடத்துத் தமோகுணத்தோடு கூடிய இராஜோ குணத்தினால் அடக்கப்பட்டதாய் பெருவித துவைத கற்பனத்தால் சிந்திக்கப்படுவதாய்ச் சித்தமாகின்றது. அச்சித்தம் தமோகுண மதிகரித்தபோது ஆசுரீசம்பத்தோடுகூடி தடி(பரு)த்ததாகின்றது. அப்படியே வசிஷ்டரும்,

"अनात्मन्यात्मभावेन देहभावनया तथा ।
पुत्रदारैः कुटुम्बैश्च चेतो गच्छति पीनताम् ॥

अहङ्कारविकारेण ममतामललीलया ।
इदं ममेतिभावेन चेतोगच्छति पीनताम् ॥
आधिव्याधिविलासेन समाश्वासेन संसृतौ ।
हेयाहेयविभागेन चेतो गच्छति पीनताम् ॥
स्नेहेन धनलोभेन लाभेन मणियोषिताम् ।
आपातरमणीयेन चेतो गच्छति पीनताम् ॥
दुराशाक्षीरपानेन भोगानिलबलेन च ।
आस्थादानेन चारेण चित्ताहिर्याति पीनताम् ॥

அநாத்மாவில் ஆத்மபாவனையினாலும், அப்படியே தேசபாவனையினாலும், புத்திரதாரங்களாலும் குடும்பங்களாலும் சித்தமானது பருமையை(தடிப்பை) அடைகின்றது. அகங்கார விகாரத்தினாலும், மமதைமலலீலையினாலும், இஃது எனது என்னும் பாவத்தி(தன்மையி)னாலும் சித்தமானது பீனத்தன்மை (பருமை)யை அடைகின்றது. ஆதிவியாதி விலாசத்தினாலும், சம்ஸாரத்தில் நம்பிக்கையினாலும், தள்ளத்தக்கதாகாதது என்றும் விபாகத்தினாலும் சித்தம் பருமையை அடைகின்றது. சிநேகத்தினாலும், தனலோபத்தினாலும், மணிபெண்களது இலாபத்தினாலும், மேலெழுந்த தன்மையாய் இரமணீயமாயிருப்பதினாலும் சித்தமானது பருமையையடைகின்றது. துராசையாகிய பாலைப்பருகுதலாலும், போகமாகிய வாயுவின் பலத்தினாலும், ஆஸ்தையைக் கொள்ளுதலாகிய சரிப்பினாலும் சித்தமாகிய பாம்பு பருமையையடைகின்றது." என்று கூறியிருக்கின்றனர். ஆஸ்தையாவது பிரபஞ்சத்தில் சத்தியத்துவ புத்தி. அதனைக்கொள்ளுதலாவது அங்கீகரித்தலாம். அதுவே சரிப்பு அதாவது போக்குவரத்தாகிய கிரியையாம்.

இவ்வாறு கெடுக்கத்தக்கனவாகிய வாசனை மனதுகளின் சொரூபம் நிரூபிக்கப்பட்டது.

இப்போது வாசனாக்ஷயமனோநாசங்கள் கிரமமாக நிரூபிக்கப்படுகின்றன. அவற்றுள், வாசனாக்ஷயத்தின்றன்மையினை வசிஷ்

டர்

"बन्धो हि वासनाबन्धो मोक्षः स्याद्वासनाक्षयः ।
वासनास्त्वं परित्यज्य मोक्षार्थित्वमपि त्यज ॥
मानसीर्वासनाः पूर्वं त्यक्त्वा विषयवासनाः ।
मैत्र्यादिवासनानाम्नीर्गृहाणामलवासनाः ॥
ता अप्यन्तः परित्यज्य ताभिर्व्यवहरन्नपि ।
अन्तः शान्ततमस्नेहो भव चिन्मात्रवासनः ॥
तामप्यन्तः परित्यज्य मनोबुद्धिसमन्विताम् ।
शेषे स्थिरसमाधानो येन त्यजसि तत्त्यज ॥

வாசனாபந்தமே பந்தமாம், வாசனாக்ஷயம் மோக்ஷமாம். நீ வாசனைகளைவிட்டு மோக்ஷ விருப்புடைமையையும் விடு. மானஸவாசனைகளை முன்னர் விட்டுப் பின்னர் விஷயவாசனைகளை விட்டு, மைத்திரியாதி வாசனையென்னும் பெயருள்ள அமல (சுத்த) வாசனையைக் கொள்ளுவாயாக. அவற்றினால் வியவகரித்தும் உள்ளே அவற்றையும் விட்டு, உள்ளே ஸ்நேகம் மிகச் சாந்தியடையப்பெற்றவனாய்ச் சின்மாத்திர வாசனையுடையவனாகுக. மனோபுத்திகளோடுகூடிய அதனையும் உள்ளேவிட்டு மிஞ்சியதில் ஸ்திரசமாதியுடையவனாய் எதனால் (சின்மாத்திர வாசனையை) விடுகின்றாயோ, அதனையும் விடுவாயாக." என்று கூறியிருக்கின்றனர்.

இங்கு மானஸவாசனையென்னும் சொல்லால் முன் சொல்லப்பட்ட லோகசாஸ்திர தேகவாசனைகள் மூன்றும் கருதப்பட்டனவாம். விஷயவாசனையென்னும் சொல்லால் தம்பம், தர்ப்பமுதலிய ஆசுரசம்பத்து கருதப்பட்டதாம். மிருது தீவிரத்தன்மைகள் அவற்றின் சொல்லக்கருதிய பேதத்திற்குக் காரணங்களாம். அல்லது, சப்தஸ்பரிசரூபரஸகந்தங்கள் விஷயங்களாம். அவற்றின் விரும்பப்படுந்தன்மைத் தசையிற்றோன்றிய சம்ஸ்காரம் மானஸவாசனையாம். புசிக்கப்படுந் தன்மைத் தசையிற்றோன்றிய சம்ஸ்காரம் விஷயவாசனையாம். இந்தப்பக்ஷத்தில் முற்கூறப்பட்ட நான்கிற்கும் இவ்விரண்டிலும் அடக்கமாம்; உள்வெளி என்பதனை விட்டு வேறுவாசனை சம்பவியாமையால்.

சங்கை:—வாசனையை விடுதல் எப்படிப் பொருந்துகின்றது, அவற்றிற்கு வடிவமில்லை. வடிவிருந்தால் துடைப்பத்தினால் ஒதுக்கப்பட்ட தூசிகுப்பைகளை யெறிவதுபோல் கையினால் எடுத்து வெளியே எறியலாம் எனின், அப்படியன்று; உபவாசம் கண்விழித்தல் என்பவற்றைப்போல் பொருந்துதலால். இயல்பாய்ப் பெறப்பட்டுள்ள புசித்தற்கிரியையும் நித்திரையும் அபூர்த்தமாயினும், அவற்றைவிடுதல் வடிவ உபவாசமும் விழிப்பும் எல்லோராலும் அநுஷ்டிக்கப்படுகின்றன. அதுபோல இங்கும் இருக்கலாம்.

"अद्य स्थित्वा निराहारः ।

இன்று நிராகாரமாக (உணவின்றி)யிருந்து" என்பன முதலிய மந்திரத்தினால் சங்கற்பஞ்செய்து சாவதானத் தன்மையாக விருத்தல் அதில் நியாகமாமெனின், இங்கும் அது தண்டத்தினால் நீக்கப்படுவதன்று, பிரைஷமந்திரத்தினால் சங்கற்பித்து சோர்வின்றிய தன்மையாக நிலைக்கக்கூடியதாயிருத்தலின். வைதிக மந்திராதிகாரமில்லாதவர்களுக்கோ பாஷையினால் சங்கற்பம் இருக்குக. அங்குச் சாகப்பருப்பு அன்னம் முதலியவற்றின் சந்நிதி நீக்கமுண்டெனின், இங்கும் மாலைசந்தனம் ஸ்திரீயென்பவற்றின் சந்நிதிநீக்கம் இருக்க வேண்டியது. இனி அங்கு போஜனவிருப்பம் நித்திரை சோம்பல் முதலியவற்றை மறக்கச்செய்யும் புராணசிரவணம் தேவபூஜை நிருத்தியம் கீதவாத்திய முதலியவற்றால் சித்தம் சமாதானஞ் செய்யப்படுகின்றதேயெனின், இங்கும் மைத்திரி முதலியவற்றால் அது சமாதானஞ் செய்யப்படுகின்றது. மைத்திரியாதிகளும் பதஞ்சலி பகவானால்.

मैत्रीकरुणामुदितोपेक्षाणां सुखदुःखपुण्यापुण्यविषयाणां भावनात-श्चित्तप्रसादनम् ॥

*சுகதுக்க புண்ணியா புண்ணிய முடையவர்களின் விஷயமான மைத்திரிகருணை முதிதையுபேக்ஷைகளைப் பாவித்தலால் சித்தப்பிரசாதமு(தெளிவு)ண்டாகின்றது.' என்று சூத்திரஞ் செய்யப்

* சுகிகளிடத்து மைத்திரியையும், துக்கிகளிடத்தில் கருணையையும், புண்ணியவான்களிடத்தில் முதிதையையும், பாபிகளிடத்தில் உபேக்ஷையையும் பாவித்தலால் என்பதுபொருள்.

பட்டுளது, சித்தம் இராகத்துவேஷ புண்ணியபாபங்களால் கலக்கப் படுகின்றது. இராகத்துவேஷங்களும் பதஞ்லிபகவானால்

"सुखानुशायी रागः, दुःखानुशायी द्वेषः ।

சுகத்தைப் பின்பற்றிய சித்தவிருத்தி இராகம்; துக்கத்தைப் பின் பற்றிய சித்தவிருத்தி துவேஷம்." என்று சூத்திரஞ் செய்யப்பட்டுளது. பிரியத்தினால் தன்னாலநுபவிக்கப்படுகின்ற சுகத்தினை ஓர் புத்திவிருத்தி விசேஷமானது சுகவினத்ததுயாவும் எனக்குண்டாருக என்று சுகத்தினைப் பின்பற்றி நிற்கின்றது. அதுவும் திருஷ்டாதிருஷ்டமாகிய சாமக்கிரியின்மையால் சம்பாதிக்கக்கூடியதன்று. ஆதலால் அந்தராகம் சித்தத்தினைக் கலக்குகின்றது. எப்போது சுகிப்பிராணிகளிடத்து இவன் இச்சுகிகள் எல்லோரும் என்னுடையவர்களென்று மைத்திரியைச் செய்கின்றானே அப்போது அச்சுகம் தனதாகவே அடையப்பட்டதாமென்று பாவிப்பவனுக்கு அங்கு (அச்சுகத்தில்) இராகம் நீங்குகின்றது. எப்படித்தனக்கு இராஜ்யமில்லாவிடினும் புத்திராதியரின் இராஜ்யமே தனது இராஜ்ஜியமாகின்றதோ அதுபோல இராகம் நீங்கவே மழை நீங்கிய சரத்காலத்து நதியினைப்போலச் சித்தம் தெளிகின்றது. அப்படியே ஒரு புத்திவிருத்தியானது எனக்கு இப்படிப்பட்டதுக்கம் எப்போதுமுண்டாகலாகாதென்று துக்கத்தினைப் பின்பற்றி நிற்கின்றது. அது சத்துரு புலிமுதலியன விருக்கும்போது நீக்கக்கூடியதாகாது. துக்ககாரணமாயுள்ளயாவும் கொல்லக்கூடியனவாகா. அதனால் அந்தத்துவேஷம் எப்போதும் இருதயத்தினைத் தகிக்கின்றது. எப்போது தன்னைப்போல பிறருக்கெல்லாம் பிரதிகூலமான துக்கமுண்டாகலாகாதென்று இவ்வகையாகக் கருணையைத் துக்கிப் பிராணிகளிடத்துப் பாவிக்கின்றானோ, அப்போது சத்துரு முதலியோரிடத்துத் துவேஷம் நீங்க சித்தம் தெளிகின்றது. இது னற்றான்,

"प्राणा यथाऽऽत्मनोऽभीष्टा भूतानामपि ते तथा ।
आत्मौपम्येन भूतानां दयां कुर्वीत मानवः ॥

எப்படிப் பிராணன் தனக்கு மிகப்பிரியமானதோ அப்படியே ஜீவர்களது பிராணனும் உனக்குப் பிரியமுள்ளதாம். தன்கொப்பாக

ஜீவர்களிடத்து மானவன் தயையினைச் செய்யவேண்டும்" என்று ஸ்மிருதியில் சொல்லப்பட்டிருக்கின்றது. அதன்றன்மையினையும் மகான்கள்:

सर्वेऽत्र सुखिनः सन्तु सर्वे सन्तु निरामयाः ।
सर्वे भद्राणि पश्यन्तु मा कश्चिद्दुःखमाप्नुयात् ॥

எல்லோரும் இங்கே சுகிகளாயிருக்கட்டும். எல்லோரும் நோயில்லாதவர்களாயிருக்கட்டும். எல்லோரும் க்ஷேமங்களைக் காண்க. ஒருவரும் துக்கமடையலாகாது." என்று காட்டுகின்றனர். அவ்வாறே பிராணிகள் இயல்பாகவே புண்ணியத்தை அநுஷ்டிக்கிறதில்லை; பாபத்தை யநுஷ்டிக்கின்றனர். அதனை

"पुण्यस्य फलमिच्छन्ति पुण्यं नेच्छन्ति मानवाः ।
न पापफलमिच्छन्ति पापं कुर्वन्ति यत्नतः ॥

மானவர்கள் புண்ணியத்தின் பயனை விரும்புகின்றனர்; புண்ணியத்தை விரும்புகிறதில்லை, பாபத்தின் பயனை விரும்புகிறதில்லை; பாபத்தினை முயன்று செய்கின்றனர்." என்று கூறுகின்றனர். அப்புண்ணிய பாபங்களிரண்டும் பச்சாத் தாபத்தினை (பின்வருந்துதலை) யுண்டுபண்ணுகின்றன. அப்பாபமும் சுருதியினால்

"किमहं साधु नाकरवं, किमहं पापमकरवम् ॥

ஏன் யான் நன்மை புண்ணியம்) செய்திலேன். ஏன் யான் பாபஞ் செய்தேன்" என்று அநுவதிக்கப் பட்டிருக்கின்றது. இவன் புண்ணிய புருஷர்களிடத்து முதிதையினைப் பாவிப்பானாயின் அப்போது அவ்வாசனையினால் தானே அப்பிமத்த(பிரமாதமின்றியவ)னாய்ப் புண்ணியங்களில் பிரவர்த்திக்கின்றான். அப்படியே பாபிகளிடத்து உபேக்ஷையினைப் பாவித்துத் தானும் பாபத்தினின்றும் விலகுகின்றான். அதனால் பச்சாத் தாபமின்மையால் சித்தம் தெளிகின்றது. சுகிகளிடத்து மைத்திரியினைப் பாவிப்பதனால் இராகம் நீங்குதல் மாத்திரமன்று; அசூயை ஈரிஷை முதலியனவும் நீங்குகின்றன. பிறர்குணங்களைச் சகியாமை ஈரிஷை, குணங்களில் தோஷமாரோபித்தல் அசூயை எப்போது மைத்திரியின் வசத்தால் பிறர்சுகம் தன் சுகமாகவே யடையப்படுகின்றதோ, அப்

போது பிறர்குணங்களில் எப்படி அசூயை முதலியன உண்டாகும்? இப்படியே மற்றையதோஷங்களின் நிவிருத்தியும் ஏற்படி ஊகிக்கத்தக்கதாம். துக்கிகளிடத்துக் கருணையைப் பாவித்தலால் சத்துருவத முதலியவற்றைச் செய்யும் த்வேஷம் எப்படி நீங்குகின்றதோ, அப்படியே துக்கித்தன்மையைப் பிரதியோகியினதான தனது சுகித்தன்மையினால் பிரயோகிக்கப்பட்ட தர்ப்பமும் நீங்குகின்றது. அந்தத்தர்ப்பமும் ஆசுர சம்பத்தகங்காரப் பிரஸ்தாபத்தில் முன்

"ईश्वरोऽहमहं भोगी सिद्धोऽहं बलवान्सुखी ।
आढ्योऽभिजनवानस्मि कोऽन्योऽस्ति सदृशो मया ॥

ஈசுவரன் யான், போகி யான், சித்தன் யான், பலவான், சுகி, செல்வன், ஜனக்கட்டுள்ளவன் எனக்குச் சமமானவன் வேறு எவனிருக்கின்றான்?" என்று உதாகரிக்கப்பட்டுளது.

சங்கை:—புண்ணியாத்மாக்களிடத்து முதிதையைப் பாவிப்பதனால் புண்ணியப் பிரவிருத்தி பயனாகச் சொல்லப்பட்டது. அதுவும் யோகிக்குப் பொருந்தாது; மலினமான சாஸ்திரவாசனையில் புண்ணியத்தினை யடக்கி முன் உதாகரித்திருத்தலாலெனின், (சமாதானம்) அதுகூடாது; மறுபிறப்பினை யுண்டுபண்ணும் காமியமான இஷ்டாபூர்த்த முதலியன அங்கு மலினத்துவமாக உதாகரிக்கப்பட்டிருத்தலால். இவ்விடத்திலோ அசுக்கில கிருஷ்ணத்தன்மையாக யோகாப்பியாசத்தாற் றோன்றியதும் பிறப்பை யுண்டுபண்ணாததுமான புண்ணிய கர்மம் கருதப்பட்டதாம். அசுக்கில கிருஷ்ணத்தன்மையினைப் பதஞ்சலிபகவான்

"कर्माशुक्लाकृष्णं योगिनस्त्रिविधमितरेषाम् ।

அசுக்கில கிருஷ்ணகர்மம் (சுக்கிலமும் கிருஷ்ணமு மல்லாதது) யோகிகளுக்காம். மற்றையோருக்கு மூன்று விதமாம்." என்று சூத்திரஞ் செய்திருக்கின்றார். காமியகர்மம் விகிதமாயிருத்தலால் சுக்கிலம். நிஷித்தம் கிருஷ்ணம். மிசிரம் சுக்கிலகிருஷ்ணமாம். இம்மூன்றும் யோகிகளல்லாத பிறருக்குப் பொருந்துகின்றது. அதுவும் மூவகைப் பிறப்பினைத் தருகின்றது. அதனை விசுவரூபாசாரியர்

"शुभैराप्नोति देवत्वं निषिद्धैर्नारकीं गतिम् ।
उभाभ्यां पुण्यपापाभ्यां मानुष्यं लभतेऽवशः ॥

சுபகர்மங்களால் தேவத்தன்மையையும், நிஷித்தகர்மங்களால் நரக கதியையும் அடைகின்றான். புண்ணிய பாபங்களிரண்டினாலும் (மிசிரகர்மத்தால்) வசமிழந்தவனாய் மனுஷியத்தன்மையை யடைகின்றான்." என்று கூறியிருக்கின்றனர்.

சங்கை :— யோகத்திற்கு நிஷித்தத்தன்மை யில்லாமையால் கிருஷ்ணத்துவமில்லாவிடினும், விகிதத்துவமிருத்தலால் சுக்கிலத்துவமுண்டெனின், (சமாதானம்:—) அது கூடாது; காமியத்துவ மின்மை யபிப்பிராயத்தால் அசுக்கிலத்துவம் சொல்லப்படுதலால். ஆதலால் அசுக்கிலகிருஷ்ணமாகிய புண்ணியத்தில் பிரவிருத்தியானது யோகியால் அபேக்ஷிக்கப்படுவதாம்.

சங்கை:—இந்த நியாயத்தினால் யோகிகளும் எற்றவண்ணம் புண்ணியாத்மாக்களிடத்து முதிதையைப் பாவித்துப் புண்ணியங்களிலேயே பிரவர்த்திப்பர் எனின், (சமாதானம்:—) பிரவர்த்திக்குக; மைத்திரியாதிகளால் சித்தத்தினைத் தெளிவிக்கின்றவர்கள் எவர்களோ அவர்களுக்கே யோகித்தன்மை யுண்மையின், மைத்திரியாதி நான்கும் உபலக்ஷணம். அதனால் "अभयं सत्त्वसंशुद्धिः பயமின்மை, அந்தக்கரண சுத்தி" என்றல் முதலிய தெய்வசம்பத்தும், "अमानित्वमदम्भित्वम् அமானித்துவம் இடம்ப மின்மை." என்றல் முதலிய ஞான சாதனங்களும், ஜீவன்முக்தன் ஸ்திதப்பிரஞ்ஞன் முதலிய வசனங்களாற் சொல்லப்பட்ட தர்மங்களும் உபலக்ஷிக்கப்படுகின்றன; இவை யாவும் சுபவாசனை வடிவத்தால் மலினவாசனையை நீக்குவனவாயிருத்தலால்.

சங்கை:—அநந்த சுபவாசனைகள் இருக்கின்றன; ஒருவனால் அவை யாவும் அப்பயிசிக்கக் கூடியவைகளன்று, பயனற்றதும், அதன் அப்பியாசப் பிரயாசமுமுண்டாகுமேயெனின், (சமாதானம்:—) அப்படியன்று. அதனால் நிவர்த்திக்கத்தக்கனவாகிய அநந்தமலின் வாசனைகளும் ஒருவனது மனதிற் சம்பவியாமையால் ஆயுர்வேதத்திற் சொல்லப்பட்ட சகல ஔஷதங்களும் ஒருவனால் சேவிக்கக் கூடியவைகளாகா. அவற்றால் நீக்கத்தக்க சகல ரோகங்

களும் ஒருவனுடைய தேகத்தில் சப்பவியா. இவ்வாறாகவே தனது சித்தத்தினை முதலில் பரீக்ஷித்து அதில் எப்போது எவ்வளவு மலின வாசனைகளுளவோ அப்போது அவ்வளவினதாகிய விரோதியான சுபவாசனைகளை அப்பியாசிக்கவேண்டும். எப்படிப் புத்திரமித்திர களத்திராதிகளால் பீடிக்கப்படுகின்றவன் அதனின்றும் விரக்தனாய் அதனை நிவர்த்திப்பதான சந்நியாசத்தைக்கொள்ளுகின்றானோ, அப்படியே வித்தியாமத தனமத குலாசாரமத முதலிய மலின வாசனைகளால் பீடிக்கப்படுகிறவன் அதன் விரோதியான விவேகத்தினை அப்பியசிக்க வேண்டும். அந்த விவேகம் ஜநகரால்

"अद्य ये महतां मूर्ध्नि ते दिनैर्निपतन्त्यधः ।
हन्त चित्तमहत्तायाः कैषा विश्वस्तता तव ॥
क्व धनानि महीपानां ब्रह्मणः क्व जगन्ति वा ।
प्राक्तनानि प्रयातानि केयं विश्वस्तता तव ॥
कोटयो ब्रह्मणो याता गताः सर्गपरम्पराः ।
प्रयाताः पांसुवद्भूपाः का धृतिर्मम जाविते ॥
येषां निमेषणोन्मेषौ जगतां प्रलयोदयौ ।
तादृशाः पुरुषा नष्टा मादृशां गणनैव का ॥

இன்றுளவர்கள் பெருமையுடையவர்களின் சிரசிலிருக்கிறார்களோ அவர்கள் (சில) தினங்களில் கீழே விழுகின்றார்கள். ஆச்சரியம்! (ஆதலால்) சித்தமே! பெருமையை விசுவசிக்குந்தன்மையாகிய இது என்னையுளது உனக்கு? பூமியையாள்பவரின் தனங்கள் எங்கே? பிரஹ்மாவின் சிருஷ்டிகள் எங்கே? பழமையானவைகள் போய்விட்டன. உனக்கு (அவற்றினை) விசுவசிக்குந்தன்மையாகிய ஈதென்னையுளது? கோடி பிரஹ்மாக்களின் சிருஷ்டி பரம்பரைகள் வந்தன போயின. தூசிகள்போல் இராஜாக்கள் போய்விட்டனர். என்னுடைய ஜீவிட்பில் என்ன தைரியமுளது? எவர்களுடைய இமை மூடுவதனாலும் திறத்தலினாலும் ஜகத்தின் பிரளயமும் சிருஷ்டியுமுண்டாகுமோ அப்படிப்பட்ட புருஷர்களும நசித்தனர் என்றால் என்னைப்போன்றவர்களைப்பற்றிய கணிப்பு (எண்ணிக்கை)யாதுளது?" என்று காட்டப்பட்டுளது.

சங்கை:—இந்த விவேகமும் தத்துவ ஞானோதயத்திற்கு முந்தியதாம்; நித்தியாநித்திய வஸ்து விவேக முதலிய சாதனமின்றிப் பிரஹ்மஞானம் சம்பவியாமையால் இங்குப் பிரஹ்மசாக்ஷாத்காரமுண்டானவனுக்கு ஜீவன்முக்தியின் பொருட்டு வாசனக்ஷய முதலிய சாதனம் தொடங்கப்பட்டது. ஆதலால் அகாண்ட (அகால)த்தில் இத்தாண்டவம் யாதெனின், இது தோஷமன்று. சாதன சதுஷ்டய முடையவனுக்குப்பின் பிரஹ்மஞான முண்டாமென்பது சர்வபுருஷ சாதாரணமான பிரௌட (கம்பீர) ராஜமார்க்கமாம். ஜநகருக்கோ புண்ணியக்கூட்டங்களின் பரிபாகத்தால் ஆகாயத்திலிருந்து பழம் விழுந்ததுபோல, அகஸ்மாத்தாகச் சித்தர்கள் கீதையைக்கேட்டல் மாத்திரத்தால் தத்துவஞான முண்டாயிற்று. அதன்பின் சித்த விசிராந்தியின் பொருட்டு இவ்விவேகம் செய்யப்படுகின்றது என்பதனால் காண்ட(கால)த்திலேயே இத்தாண்டவம் உசிதமாம்.

சங்கை:—இவ்வாறாயினும் இந்த விவேகம் ஞானம் செவ்வையாயுண்டானபின் உண்டாகுவதாயிருத்தலால் மலினவாசனைத்தொடர்பின்மையால் சுத்தவாசனைப்பியாசம் அபேக்ஷிக்கப் படுவதன்றெனின், (சமாதானம்:—) அப்படியன்று; ஜநகருக்கு அதன் (மலினவாசனையின்) தொடர்பில்லையாயினும், யாஞ்ஞவல்கியர் பகீரதர் முதலியோருக்கு அதன் தொடர்பு காணப்படுதலால். யாஞ்ஞவல்கியருக்கும் அவருக்குப் பிரதிவாதிகளான உஷஸ்தர் கஹோலர் முதலியோருக்கும் வித்தியாமத முளது. அவர்கள் எல்லோராலும் வெற்றியை விரும்பும் வாதத்தில் பிரவர்த்திக்கப்பட்ட தன்மையிருந்தமையால். அப்படியானால் அவர்களுக்கு வேறு வித்தையிருந்திருக்கலாம், பிரஹ்மவித்தை யிருந்திராதெனின், அப்படியன்று; வாதத்திலிருந்த பிரசிநோத்தரங்கட்குப் பிரஹ்மம் விஷயமாயிருந்தமையால். சங்கை:—பிரஹ்மம் விஷயமாயிருக்கினும் அவர்களுக்கு மேலெழுந்தவண்ணமான ஞானமேயிருந்தது. செவ்வையான ஞானமில்லையெனின், (சமாதானம்) அப்படியன்று; அவ்வாறுமாயின், நமக்கும் அவர்களது வாக்கியங்களாலுண்டாகிய வித்தைக்குச் செவ்விதான தன்மை யில்லாமை நேருதலால். அப்படியானால் சங்கை:— செவ்விதான தன்மையிருக்கினும், (அது) பக்ஷாந

ஞானமே யாமெனின், (சமாதானம்:—) அப்படியன்று; 'யாதொரு சாக்ஷாத் அபரோக்ஷத்தினுல் பிரஹ்மம்' என்று முக்கியாபரோக்ஷ விஷயத்தன்மையாகவே விசேஷமாகப் பிரசினம் (வினு)காணப்படு தலான். சங்கை:— ஆத்மஞானிகட்கு வித்தியாமதம் ஆசாரியர் களால் அங்கிகரிக்கப் படுகிறதில்லை. அவ்வாறே உபதேச சகஸ்ரி யில்,

"ब्रह्मवित्त्वं तथा मुक्त्वा स आत्मज्ञो न चेतरः ।

அப்படியே பிரஹ்மவித்துத் தன்மையை (யான் பிரஹ்மஞானி யென்னும் அபிமானத்தினை) விட்டு அவன் ஆத்மாவை யறிந்தவனு கின்றான்; அங்கியனுகிறதில்லை." என்று சொல்லப்பட்டிருக்கின் றது. நைஷ்கர்மிய சித்தியிலும்

"न चाध्यात्माभिमानोऽपि विदुषोऽस्त्यासुरत्वतः ।
विदुषोऽप्यासुरश्चेत्स्यान्निष्फलं ब्रह्मदर्शनम् ॥

ஞானிக்கு அத்தியாத்மாபிமானமும் ஆசுரத்தன்மையாதலால் இரு ப்பதில்லை. ஞானிக்கும் ஆசுரமிருக்குமாயின் பிரஹ்மதரிசனம் பயனற்றதாம்." என்று சொல்லப்பட்டிருக்கின்ற தெனின், (சமா தானம்:—) இத்தோஷமில்லை; ஜீவன்முக்தி பரியந்தமான தத்துவ ஞானம் அங்குக் கருதப்பட்டதாகலின். நாமும் ஜீவன்முக்தர் களுக்கு வித்தியாமதத்தினை அங்கிகரியோம்.

சங்கை:—வெல்லும் விருப்புடையோருக்கு ஆத்மபோதமே யில்லை,

"रागो लिङ्गमबोधस्य चित्तव्यायामभूमिषु ।
कुतः शाद्वलता तस्य यस्याग्निः कोटरे तरोः ॥

சித்தம் முயலும் பூமிகளில் அஞ்ஞானத்திற்கு குறி இராகமாம். எம்மரத்தின் பொந்தில் நெருப்புளதோ, அதற்கு பசும் புற்களாற் சூழப்பட்டிருக்குந் தன்மை எங்கிருந்துளதாம்?" என்று ஆசாரி யர்களால் அங்கிகரிக்கப் பட்டிருத்தலா லெனின், (சமாதானம்:—) அப்படியன்று;

"रागादयः सन्तु कामं न तद्भावोऽपराध्यति ।
उत्खातदंष्ट्रोरगवदविद्या किं करिष्यति ॥

இராகாதிகள் வேண்டியவாறிருக்குக. அதன் இருப்பு குற்றப் படுத்துகிறதில்லை. பல் பிடுங்கப்பட்ட பாம்பினைப்போன்ற அவித்தை என்ன செய்யும்?" என்று இவ்வாறு அவர்களாலேயே இராகாதிகள் அங்கீகரிக்கப்பட்டிருத்தலின். இங்கு ஒன்றற்கொன்று கெடுதியில்லை. ஸ்திதப் பிரஞ்ஞனிடத்திலும் ஞானிமாத்திரத்திலும் வசனமிரண்டும் நிறுத்தத்தக்கனவாயிருத்தலின்.

சங்கை:— ஞானிக்கு இராகாதிகளை யங்கீகரிக்கின், தர்மாதர்மவாயிலாக ஜந்மாந்தரம் நேருமேயெனின்; (சமாதானம்:—) அப்படியன்று; வறுக்கப்படாத விதையினைப்போல அவித்தையை முன்னிட்டவைகளுக்கே முக்கிய ராகாதித்தன்மை யிருத்தலால். ஞானிக்கோ வறுத்த விதையினைப்போல இராகாதிகள் ஆபாஸங்களேயாம். இவ்வபிப்பிராயங் கொண்டே

"उत्पद्यमाना रागाद्या विवेकज्ञानवह्निना ।
तदा तदैव दह्यन्ते कुतस्तेषां प्ररोहणम् ॥

உற்பத்தியாகின்ற இராகாதிகள் விவேக ஞானமாகிய நெருப்பினால் அப்போதைக்கப்போதே தகிக்கப்படுகின்றன. (அவ்வாறாகவே) அவை எவ்வாறு மூளைக்கும்?" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அப்படியானால் ஸ்திதப் பிரஞ்ஞனுக்கும் இருக்கட்டுமேயெனின், அக்காலத்தில் முக்கியத்தினைப் போலவே ஆபாஸ ராகாதிகட்கும் பாதகத்தன்மையிருத்தலால் கூடாது. இரஜ்ஜு சர்ப்பமும் முக்கிய சர்ப்பத்தினைப்போலவே அப்போது பயமுறுத்திக் காணப்படுகின்றது அதுபோலவென்க.

சங்கை:— ஆபாஸத்துவாநுசந்தாநாநுவிருத்தியில் ஒரு பாதகமுமில்லையெனின், (சமாதானம்:—) தாம் நெடுங்காலம் ஜீவித்திருப்பீராக. இதுதான் யாம் கொண்ட ஜீவன்முக்தியாம். யாஞ்ஞவல்கியர் வெல்லும் விருப்புடைய தசையில் இத்தன்மையாயிருந்ததில்லை; சித்த விசிராந்தியின் பொருட்டு வித்துவத் ஸந்நியாஸம் அவரால் செய்யப்படுவதாயிருந்தமையால். இவருக்கு வெல்லும்

விருப்பமாத்திர மிருந்ததென்பதில்லை. பணவாசையும் பெருத்ததா யுண்டாயிருந்தது. எதனை லெனின், வெகு பிரஹ்மவித்துக்களுக்கு முன்பாக நிறுத்தப்பட்ட அலங்காரத்தோடு கூடிய ஆயிரம் பசுக் களைக் கைப்பற்றித்தாமே

"नमो वयं ब्रह्मिष्ठाय कुर्मो गोकामा एव वयं स्मः ।

யாம் பிரஹ்மவித்துக்களுக்கு நமஸ்காரம் செய்கின்றோம். யாம் பசு விருப்புடையோமே." என்னும் இதனைக் கூறினர். இது மற்றைய பிரஹ்மவித்துக்களை அவமதிக்க ஓர் பரிகாசவார்த்தையா மெனின், அப்போது இம்மற்றோர் தோஷமுமுளதாம். மற்றப் பிரஹ்மவித்துக்களும் தம்முடைய தனம் இவரால் யபகரிக்கப் பட்டதென்று கோபித்தனர். இவரும் கோபபரவசராய் (வேதாந்த மரியாதை கடந்து பேசியதற்காக) சாகல்லியரைச் சாபத்தினால் கொன்றார். பிரஹ்மக்கொலை செய்த இவருக்கு மோக்ஷமில்லை யென்று சங்கிக்கலாகாது. எத்தாலெனின், கௌஷீதகி யுபநிஷ த்தினர்

"नास्य केनापि कर्मणा लोको मीयते न मातृवधेन न पितृवधेन न स्तेयेन भ्रूणहत्यया ॥

எந்தக்கர்மத்தினாலும் இவனது உலகம் (ஆத்மா) கெடுகிறதில்லை. தாய்க் கொலையினாலுமில்லை; பிதாக்கொலையினாலுமில்லை; திருட்டி னாலுமில்லை, சிசுக்கொலையினாலுமில்லை." என்று கூறுகின்றனர். சேஷரும் தாம் செய்த ஆர்யா பஞ்சாசீதி யென்னும் நூலில்

"हयमेधशतसहस्राण्यथ कुरुते ब्रह्मघातलक्षाणि ।
परमार्थविन्न पुण्यैर्न च पापैः स्पृश्यते विमलः ॥

பரமார்த்தத்தை யுணர்ந்தவன் அசுவமேதம் நூறாயிரங்கள் செய் கிறான். அப்படியே பிரஹ்மஹத்தி லக்ஷங்கள் செய்கின்றான். விமலனாகிய அவன் புண்ணியங்களாலும் பாபங்களாலும் பற்றப் படுகிறதில்லை." என்று இதனைக் கூறுகின்றார். ஆதலால் வெகு வாய்ச் சொல்லுவானேன்? பிரஹ்மவித்துக்களாகிய யாஞ்ஞவல் கியர் முதலியோருக்கு மலினவாசனாநுவிருத்தி உள்ளதே யாம். பகீரதரும் தத்துவத்தினை அறிந்தும் இராஜ்யத்தைப் பரிபாலித்து

மலினவாசனைகளால் சித்த விசிராந்தி யில்லாததாகவே எல்லா வற்றையும் விட்டுப் பிறகு விசிராந்தியுடையவரானார் என்று வசிஷ்டரால் சொல்லப்பட்டுளது. ஆதலால் தனது நிகழ்கின்ற மலின வாசனை விசேஷத்தினைப் பிறரது தோஷம்போலச் செவ்வையாய் ஊன்றிப்பார்த்து அதன் பிரதீகாரத்தை (மாற்றை)ப் பழகவேண்டும். இவ்வபிப்பிராய மாகவே

"यथा सुनिपुणः सम्यक्परदोषेक्षणे रतः ।
तथा चेन्निपुणः स्वेषु को न मुच्येत बन्धनात् ॥

எப்படி செவ்வையாய்ப் பிறர்தோஷங் காணுதலில் பிரிய முள்ளவனாய் மிகவும் நிபுணனாயிருக்கின்றானோ, அப்படித் தனது தோஷங்களைப் பார்ப்பதில் நிபுணனானாயின், எவன் பந்தத்தினின்றும் விடுபடான்." என்று ஸ்மரிக்கப்படுகின்றது.

அப்படியானால், முதலில் வித்தியாமதத்தின் பிரதீகாரம் யாதெனின், தன்னிடத்திலிருப்பதாய் பிறன் விஷயமாவதான மதத்தினதா? அல்லது பிறனிடத்திலிருப்பதாய்த் தன் விஷயமாவதான மதத்தினதா? முதலாவதில் எங்கேனும் பங்கம் அவசியம் உண்டாகுமென்று இடைவிடாது பாவிக்கவேண்டும். அது எப்படியெனின், சுவேதகேது வித்தையினால் மதர்த்தவனாய், பிரவாஹண ராஜனது சபையிற்சென்று, அவனால் பஞ்சாக்கினி வித்தை கேட்கப்பட்டபோது, தான் அறியாதவனாய், உத்தரமின்றி, இராஜாவினால் வெகுவிதமாக இழித்துக் கூறப்பட்டவனாய், பிதாவின் சமீபத்தில்வந்து தனது அவமதிப்பினைச் சொன்னான். பிதாவோ மதமின்றியவராய் அவ்வாசனையே அநுசரித்து அவ்வித்தையினைப் பெற்றார். வித்தையினால் மதர்த்த பாலாகிப் பிராஹ்மணனும் அஜாதசத்துரு ராஜாவினால் இழித்துக் கூறப்பட்டவனாய் கர்வத்தைச் செவ்வையாய் விட்டு அரசனைச் சரணடைந்தான். உஷஸ்த கஹோலன் முதலியோரும் மதத்தினால் வார்த்தையாடித் தோல்வியடைந்தவரானார். (இரண்டாவது) தன் விஷயமாவதான பிறனிடத்திருப்பதான மதம் பிரவர்த்திக்குமாயின், அப்போது மதர்ப்புள்ள அப்பிறன் நிந்திக்குக அல்லது அவமதிக்குக. எவ்விதத்தாலும் எனக்கு ஆனியில்லை என்று பாவிக்கவேண்டும். அவ்வாறே,

"आत्मानं यदि निन्दन्ति निन्दन्ति स्वयमेव हि ।
शरीरं यदि निन्दन्ति सहायास्ते मता मम ॥
निन्दावमानावत्यन्तं भूषणं यस्य योगिनः ।
धीविक्षेपः कथं तस्य वाचाटैः क्रियतामिह ॥

ஆத்மாவை நிந்திக்கிறார்களெனின், நிச்சயமாகத் தம்மையே நிந்திக்கின்றனர். சரீரத்தினை நிந்திக்கிறார்கள் எனின், அவர்கள் எனக்குச் சகாயமானவர்களாக மதிக்கப்பட்டவர். (ஏனெனின், என்னால் நிந்திக்கப்படும் சரீரத்தை நிந்தித்தலால்.) எந்த யோகிக்கு நிந்தையும் அவமானமும் அத்தியந்தம் பூஷணமாயிருக்கிறதோ, அவனுக்கு இங்கு வாயாடி வேண்டியவாறு பேசுக: புத்தியின் விக்ஷேபம் எவ்வாறுண்டாம் (உண்டாகாதென்றபடி)" என்றும், நைஷ்கர்மியசித்தியில்

"पुरीषे संपरित्यक्ते दोषतश्चावधारिते ।
यदि दोषं वदेत्तस्मै किं तत्रोच्चरितुर्भवेत् ॥
तद्वत्स्थूले तथा सूक्ष्मे देहे त्यक्ते विवेकतः ।
यदि दोषं वदेत्ताभ्यां किं तत्र विदुषो भवेत् ॥

தோஷமாக நிச்சயிக்கப்பட்டதும் செவ்வையாய் நீக்கப்பட்டதுமான மலத்தில் ஒருவன் தோஷத்தினைச் சொல்லுவானாயின், அங்கு அதற்காக மலங்கழித்தவனுக்கு (வருத்தம்) என்ன உண்டாகும்? அதுபோல் விவேகத்தினால் நீக்கப்பட்ட ஸ்தூலதேகத்திலும் அவ்வாறே சூக்ஷ்மதேகத்திலும் தோஷத்தைச் சொன்னால், அங்கு அவற்றால் ஞானிக்கு என்ன உண்டாம்?"

"शोकहर्षभयक्रोधलोभमोहस्पृहादयः ।
अहंकारस्य दृश्यन्ते जन्म मृत्युश्च नात्मनः ॥

சோகம், சந்தோஷம், பயம், குரோதம், லோபம், மோகம், ஆசை முதலியனவும் பிறப்பும் இறப்பும் அகங்காரத்திற்குக் காணப்படுகின்றன; ஆத்மாவுக்கில்லை." என்றும் கூறுவர்.

நிந்தையின் பூஷணத்துவம் ஞானாங்குசத்தில்

"मन्निन्दया यदि जनः परितोषमेति नन्वप्रयत्नसुलभोऽयमनुग्रहो मे। श्रेयोर्थिनो हि पुरुषाः परितुष्टिहेतोर्दुःखार्जितान्यपि धनानि परित्यजन्ति ॥ सततसुलभदैन्ये निःसुखे जीवलोके यदि मम परिवादात्प्रीतिमाप्नोति कश्चित्। परिवदतु यथेष्टं मत्समक्षं तिरो वा जगति हि बहुदुःखे दुर्लभः प्रीतियोगः ॥

உலகம் என் நிந்தையினால் மிகச்சந்தோஷமடையுமாயின், இவ்வநுக்கிரகம் எனக்குப் பிரயத்தனமின்றிப் பிறந்ததாய் எளிதிற்பெறுவதாம். ஏனெனின், சிரேயஸை விரும்பினவர்களான புருஷர்கள் மிக்க சந்தோஷகாரணமாக (தாம்) வருந்தப்பட்டுச் சம்பாதித்த திரவியங்களைச் செலவிடுகிறார்கள். இடைவிடாது எளிதிற்பெறப்படும் தைன்யமுடையதான சுகமின்றிய (இந்த) ஜீவலோகத்தில் ஒருவன் எனது தூஷணையால் பிரீதியை யடைவானாயின், அவன் என் முன்னாகவாவது மறைவாகவாவது வேண்டியபடி தூஷிக்குக. எதனாலெனின், வெகு துக்கமுடைய ஜகத்தில் பிரீதியின் சம்பந்தம் (சுகம்) துர்லபமாம்." என்று காட்டப்பட்டுளது. அவமானத்தின் பூஷணத்துவம்.

"तथा चरेत वै योगी सतां धर्ममनुस्मरन्।
जना यथावमन्येरन्गच्छेयुर्नैव संगतम् ॥

யோகியானவன் சத்துக்களின் தர்மத்தினைச் சிந்தித்துக்கொண்டு எவ்வாறு ஜனங்கள் தன்னை அவமதித்து நெருங்கமாட்டார்களோ, அவ்வாறு நடக்கவேண்டும்" என்று ஸ்மிருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. யாஞ்ஞவல்கியர் உஷஸ்தர் முதலியோருடைய தன்னிடத்திருப்பதும் பிறனிடத்திருப்பதுமான வித்தியாமதங்கள் எவையோ அவ்விரண்டற்கும் எப்படி விவேகத்தினால் பிரதீகாரம் அறியப்பட்டதோ, அப்படியே தனலோபத்தைக் குரோதமென்னும் இரண்டற்கும் அறியவேண்டும்.

"अर्थानामार्जने क्लेशस्तथैव परिपालने।
नाशे दुःखं व्यये दुःखं धिगर्थान् क्लेशकारिणः ॥

பொருள்களைச் சம்பாதித்ததில் கிலேசமாம். பரிபாலித்தலிலும் அவ்வாறேயாம் (துன்பமாம்.) நாசத்திலும் துக்கம். செலவாதலிலும் துக்கம். கிலேசத்தைத் தருவனவாகிய பொருள்கள் திக்கரிக்கத்தக்கனவாம்." என்பது தனவிஷயமான விவேகம். குரோதமும், தன்னிடத்திருப்பதாய்ப் பிறனை விஷயஞ்செய்வது என்று இரண்டு வகையினதாம், தன்னிடத் திருப்பதான கோபத்தை குறித்து,

"अपकारिणि कोपश्चेत्कोपे कोपः कथं न ते ।
धर्मार्थकाममोक्षाणां प्र[illegible] पारिपन्थिनि ॥
फलान्वितो धर्मयशोर्थनाशनः स चेदपार्थः स्वशरीरतापनः ।
न चेह नामुत्र हिताय यः सतां मनांसि रोषः स समाश्रयेत्कथम्॥

அபகாரியினிடத்திற் கோபமாயின், தர்மார்த்தகாமமோக்ஷங்களின் கொடிய சத்துருவான கோபத்தினிடத்தில் உனக்கு ஏன் கோபமில்லை. வசவு அடி கொலைமுதலிய பயனோடுகூடிய கோபம், புண்ணியம் புகழ் பொருள் என்பவற்றைக் கெடுப்பதாம். அது பயனின்றியதாயின், தனது சரீரத்தைத் தபிக்கச் செய்வதாம். எது இம்மையிலும் மறுமையிலும் நலத்தின் பொருட்டாகிறதில்லையோ, அத்தன்மையகோபம் சத்துக்களின் மனதுகளை எப்படி ஆசிரயிக்கும்? (நெருங்காதென்றபடி)" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. பிறரிடத் திருப்பதாய்த் தன்னை விஷயிக்கும் கோபத்தைக் குறித்து

"न मेऽपराधः किमकारणे नृणां मदभ्यसूयेत्यपि नैव चिन्तयेत् ।
न यत्कृता प्राग्भवबन्धनिष्कृतिस्ततोऽपराधः परमो नु चिन्त्यताम् ॥
नमोऽस्तु कोपदेवाय स्वाश्रयज्वालिने भृशम् ।
कोप्यस्य मम वैराग्यदायिने दोषबोधिने ॥

என்னிடத்தில் அபராதமில்லை, ஏன் அகாரணமாய் என்னிடத்தில் ஜனங்கட்கு அசூயை என்று சிந்திக்கலாகாது. ஏதனால் யான் முன்னரே பவபந்தத்தினின்றும் விடுபடவில்லையோ, அதனால் என்னிடத்தில் பெரிய அபராதம் உளதென்று சிந்திக்கவேண்டும்.

கோபிக்கிறவர்களாகிய தனது ஆசிரயத்தினை எரிப்பதும் கோபிக்கப்படுபவனான எனக்குத் தோஷத்தினை யறிவிப்பதும் வைராக்கியத்தினைத் தருவதுமான கோபமாகிய தெய்வத்திற்கு நமஸ்காரம் உளதாகுக." என்றிவ்வாறு சொல்லப்பட்டுளது.

தனாபிலாஷை கோபமென்பவற்றைப் போல ஸ்திரீ புத்திராபிலாஷைகளும் விவேகத்தினால் விலக்கத்தக்கவைகளாம். அவ்விரண்டனுள், ஸ்திரீயின் விவேகம் வாசிஷ்டத்தில்

"मांसपाञ्चालिकायास्तु यन्त्रलोलेऽङ्गपञ्जरे ।
स्नाय्वस्थिग्रन्थिशालिन्याः स्त्रियाः किमिव शोभनम् ॥
त्वङ्मांसरक्तबाष्पाम्बु पृथक्कृत्वा विलोचने ।
समालोकय रम्यं चेत्किं मुधा परिमुह्यसि ॥
मेरुशृङ्गतटोल्लासि गङ्गाजलरयोपमा ।
दृष्टा यस्मिन्स्तने मुक्ताहारस्योल्लासशालिता ॥
श्मशानेषु दिगन्तेषु स एव ललनास्तनः ।
श्वभिरास्वाद्यते काले लघुपिण्ड इवान्धसः ॥
केशकज्जलधारिण्यो दुःस्पर्शा लोचनप्रियाः ।
दुष्कृताग्निशिखा नार्यो दहन्ति तृणवन्नरान् ॥
ज्वलतामतिदूरेऽपि सरसा अपि नीरसाः ।
स्त्रियो हि नरकाग्नीनामिन्धनं चारु दारुणम् ॥
कामनाम्ना किरातेन विकीर्णा मुग्धचेतसाम् ।
नार्यो नरविहङ्गानामङ्गबन्धनवागुराः ॥
जन्मपल्वलमत्स्यानां चित्तकर्दमचारिणाम् ।
पुंसां दुर्वासनारज्जुर्नारी बडिशपिण्डिका ॥
सर्वेषां दोषरत्नानां सुसमुद्गिकयाऽनया ।
दुःखशृङ्खलया नित्यमलमस्तु मम स्त्रिया ॥

इतो मांसमितो रक्तमितोऽस्थीनीति वासरैः ।
ब्रह्मन्कतिपयैरेव याति स्त्री विशरारुताम् ॥
यस्य स्त्री तस्य भोगेच्छा निःस्त्रीकस्य क्व भोगभूः ।
स्त्रियं त्यक्त्वा जगत्त्यक्तं जगत्त्यक्त्वा सुखी भवेत् ॥

நரம்பு எலும்புகளின் முடிச்சுகளாலமைந்த மாம்ஸப் பொம்மையாகிய ஸ்திரீயின் யந்திரம்போற் சுழலும் அங்கமாகிய பஞ்சரத்தில் சோபனம் போன்றது யாது? அவர்களது கண்களை தோல் மாம்ஸம் ரக்தம் கண்ணீர் என்பவற்றை வேறுபடுத்திச் செவ்வையாய்ப்பார். இரம்மியமாயிருந்தால் (விரும்பு). ஏன் வீணாக மோகிக்கிறாய். எந்த ஸ்தனத்தில் மேருமலையின் உச்சியில் பிரகாசிக்கும் கங்கையின் அருவிபோன்ற முத்துமாலையின் உல்லாசமுடைமை காணப்பட்டதோ, அதே ஸ்திரீயின் ஸ்தனம் மரித்தபின் ஸ்மசானத்திலும் திக்குகளிலும் நாய்களால் சோற்றின்பிண்டம்போலத் தின்னப்படுகின்றது. கேசமாகிய மையினையுடையவர்களும், தொடத்தகாதவர்களும், கண்ணுக்குப் பிரியமானவர்களும் பாபமாகிய அக்கினிச்சுடருடையவர்களுமான நாரிகள் நரர்களைத் துரும்புபோல் எரிக்கின்றனர். மிகத்தூரத்தில் எரிவதாயினும் (பார்வைக்கு) ரஸமுள்ளவர்களாயினும் ரசமில்லாதவர்களான ஸ்திரீகள் நிச்சயமாக நரகாக்கினிக்கு அழகிய கொடிய விறகுகளாவர். ஸ்திரீகள் காமன் என்னும் வேடனால் மோகிக்கப்பட்ட சித்தமுடையவர்களான நரர்களாகிய பக்ஷிகளின் அங்கங்களைக் கட்டுவதற்கு விரிக்கப்பட்ட வலைகளாவர். சித்தமாகிய சேற்றிற் சரிப்பனவாய்ப் பிறவிக்குளத்திலிருக்கும் மீன்களான புருஷர்களுக்குத் துர்வாசனை கயிறாய்; நாரீ தூண்டில் முள்ளிலுள்ள மாம்ஸபிண்டமாவள். தோஷங்களான இரத்தினங்க ளெல்லாவற்றிற்கும் சிமிழாயும் துக்கவிலங்கா (தளையா) யுமுள்ள இந்த ஸ்திரீயினால் நித்தியம் எனக்கு போதும், ஸ்திரீயானவள் சிலநாட்களில் இங்கிருந்து மாம்சம் இங்கிருந்து இரக்தம் இங்கிருந்து எலும்புகள் என்று அழியுமியல்பினைப் பெறுவாள். எவனுக்கு ஸ்திரீயிருக்கிறாளோ அவனுக்குப் போகேச்சையுண்டு. ஸ்திரீயில்லாதவனுக்குப் போகத்திற் கிடமேது? ஸ்திரீயினைவிட்டால் ஜகத்தினைவிட்டதாம். ஜகத்

தினை விட்டுச் சுகியாகின்றான்." என்று சொல்லப்பட்டுளது. புத்திரவிஷயமான விவேகம் பிரஹ்மாநந்தப்பிரகரணத்தில்,

"अलभ्यमानस्तनयः पितरौ क्लेशयेच्चिरम् ।
लब्धोऽपि गर्भपातेन प्रसवेन च बाधते ॥
जातस्य ग्रहरोगादि कुमारस्य च मूर्खता ।
उपनीतेऽप्यविद्यत्वमनुद्वाहश्च पण्डिते ॥
यूनश्च परदारादि दारिद्र्यं च कुटुम्बिनः ।
पित्रोर्दुःखस्य नास्त्यन्तो धनी चेन्म्रियते तदा ॥

"உற்பத்தியாகாத புத்திரன் மாதாபிதாக்களை நீண்டகாலம் துயரப்படுத்துகிறான். கிடைத்த புத்திரனும் கர்ப்பம்விழுதலாலும் பிரசவத்தாலும் துன்பப்படுத்துகிறான். பிறந்தாலும் கிரகம் ரோகம் முதலியவற்றால் துன்பப்படுத்துகிறான். குமாரனால் மூர்க்கத்தன்மையை (அறியாமையாற் செய்யும் காரியங்களைக்குறித்த) துன்பம். உபநயனஞ்செய்யப்பட்டால் வித்தை வராமையைக்குறித்த துன்பம். பண்டிதனாயின் விவாகத்தைக்குறித்த துன்பம். யௌவனனானால் பரதாரகமன முதலியவற்றைக்குறித்த துன்பம். குடும்பியானால் தாரித்திரியத்தைக்குறித்த துன்பம். தனமுடையவனாயின் அப்போது இறந்துபோவான் என்னும் துன்பம். (இவ்வாறு பிதா மாதாக்களின் துன்பத்திற்கு எல்லையில்லை.)" என்று காட்டப்பட்டுளது. எப்படி வித்தை தனம் குரோதம் ஸ்திரீ புத்திரன் என்பவற்றின் விஷயங்களான மலினவாசனைகளின் பிரதீகாரம் விவேகத்தினாற் செய்யபட்டதோ, அப்படியே மற்றையவாசனைகளின் பிரதீகாரமும் தக்கவாறு சாஸ்திரங்களாலும் தனது யுக்தியினாலும் தோஷத்தினை விவேகித்துப் பிரதீகாரம் செய்யவேண்டும். பிரதீகாரஞ்செய்யப்பட்டபோது ஜீவன்முக்திலக்ஷணமாகிய பரமபதம் பெறப்படுகின்றது. அதனை வசிஷ்டர்,

"वासनानां परित्यागे यदि यत्नं करोष्यलम् ।
तत्ते शिथिलतां यान्ति सर्वाधिव्याधयः क्षणात् ॥

पौरुषेण प्रयत्नेन बलात्संत्यज्य वासनाः ।
स्थितिं बध्नासि चेत्तर्हि पदमासादयस्यलम् ॥

"வாசனைகளை செவ்வையாய் விடுதலில் முயற்சி செய்வாயாயின் போதும். அதனால் உன்னுடைய சர்வ ஆதி வியாதிகளும் கணத்தில் தளர்ச்சியடைகின்றன. பௌருஷமாகிய முயற்சியால் வாசனைகளை வலியால் நன்றாய்விட்டு, சித்தத்தின் நிலைப்பைக்கட்டுவாயாயின் (நிர்விகற்ப ஸ்திதியை யடைந்தால்) போதும். அப்போது பதத்தினைச் சம்பாதிப்பாய்" என்று கூறியிருக்கின்றார்.

சங்கை :—அப்படியானால் இங்கு பௌருஷ முயற்சி யென்பது முற்கூறப்பட்ட விஷயதோஷவிவேகமாம். அது மறுபடியும் மறுபடியும் செய்யப்படுவதாயினும், பிரபலமான இந்திரியவியாபாரத்தினால் அமிழ்த்தப்படுகின்றது. அது பகவானால்,

"यततो ह्यपि कौन्तेय पुरुषस्य विपश्चितः ।
इन्द्रियाणि प्रमाथीनि हरन्ति प्रसभं मनः ॥
इन्द्रियाणां हि चरतां यन्मनोऽनुविधीयते ।
तदस्य हरति प्रज्ञां वायुर्नावमिवाम्भसि ॥

கௌந்தேய! முயற்சி செய்பவனாகிய அறிவுடைய புருஷனுடைய கலக்குவனவாகிய இந்திரியங்கள் மனதை வலிந்து இழுக்கின்றன. விஷயங்களிற் செல்லுவனவாகிய இந்திரியங்களை எவனுடைய மனது தழுவிச்செல்லுகின்றதோ, அது அவனுடைய பிரஞ்ஞையை ஜலத்தில் கப்பலை வாயுபோல இழுத்துத் தள்ளுகிறது" என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறாயினும், உண்டாகிய விவேகத்தினை இரக்ஷிக்கும்பொருட்டு இந்திரியங்கள் தடுக்கத்தக்கனவாம். அதுவும் அங்குதானே பிற்சுலோகங்களால்,

"तानि सर्वाणि संयम्य युक्त आसीत मत्परः ।
वशे हि यस्येन्द्रियाणि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥
तस्माद्यस्य महाबाहो निगृहीतानि सर्वशः ।
इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥

அவ்வெவ்வலாவற்றையும் அடக்கி எனது பரனைப் போகமுடையவ னாயிருக்க. எவனுக்கு இந்திரியங்கள் வசத்திலுள்ளவோ அவனு டைய பிரஞ்ஞை நிலைபெற்றதாம். ஆதலால் மகாபாகுவே! எவன் இந்திரியங்களை இந்திரியார்த்தங்களினின்றும் முற்றும் அடக்கியி ருக்கிறானோ, அவனுடைய பிரஞ்ஞை நிலைபெற்றதாம்” என்று காட் டப்பட்டுளது. வேறு ஸ்மிருதியிலும்

“न पाणिपादचपलो न नेत्रचपलो यतिः ।
न च वाक्चपलश्चैवमिति शिष्टस्य लक्षणम् ॥

யதியானவன் கைகாலசைவுடையவனல்லன்; நேத்திரசபலமுடை யனல்லன்; வாக்குச்சபலமுடையவனுமல்லன் என்பது சிஷ்டனது லக்ஷணமாம்” என்று கூறப்பட்டுளது. இதுவே இக்குத் தொடர் விரிகளால் ஸ்பஷ்டமாக்கப்பட்டுளது:—

“अजिह्वः षण्डकः पङ्गुरन्धो बधिर एव च ।
मुग्धश्च मुच्यते भिक्षुः षड्भिरेतैर्न संशयः ॥
इदमिष्टमिदं नेति योऽश्नन्नपि न सज्जते ।
हितं सत्यं मितं वक्ति तमजिह्वं प्रचक्षते ॥
अद्य जातां यथा नारीं तथा षोडशवार्षिकीम् ।
शतवर्षां च यो दृष्ट्वा निर्विकारः स षण्डकः ॥
भिक्षार्थं गमनं यस्य विण्मूत्रकरणाय च ।
योजनान्न परं याति सर्वथा पङ्गुरेव सः ॥
तिष्ठतो व्रजतो वाऽपि यस्य चक्षुर्न दूरगम् ।
चतुर्युगां भुवं त्यक्त्वा परिव्राट् सोऽन्ध उच्यते ॥
हितं मितं मनोरम्यं वचः शोकापहं च यत् ।
श्रुत्वा यो न शृणोतीव बधिरः स प्रकीर्तितः ॥
संनिधौ विषयाणां च समर्थोऽविकलेन्द्रियः ।
सुप्तवद्वर्तते नित्यं भिक्षुर्मुग्धः स उच्यते ॥

न निन्दां न स्तुतिं कुर्यान्न किंचिन्मर्माणि स्पृशेत् ।
नीतवादी भवेत्तद्वत्सर्वत्रैव समो भवेत् ॥

न संभाषेत्स्त्रियं कांचित्पूर्वदृष्टां च न स्मरेत् ।
कथां च वर्जयेत्तासां न पश्येल्लिखितामपि ॥

அஜிஹ்வன் (நாவில்லாதவன்), ஷண்டகன் (ஆண்மையில்லாதவனை அலி), பங்கு (முடவன்), அந்தன் (குருடன்), பதிரன் (செவிடன்), முக்தன் (அறிவில்லாதமூடன்) என்னும் இவ்வாறினாலும் சந்நியாசி முக்தனாகின்றான், சம்சயமில்லை. எவன் புசிக்கின்றவனாயினும் இது பிரியமுள்ளது இது பிரியமானதன்று என்று அமூந்துகிறதில்லையோ, இதமாகவும் சத்தியமாகவும் பேசுகிறானோ அவன் அஜிஹ்வன் எனப்படுகின்றான். இப்போது பிறந்த நாரியை எப்படியோ அப்படியே பதினாறு வயதுள்ளவளையும் நூறு வயதுள்ளவளையும் பார்த்து, எவன் விகாரமில்லாதவனாகின்றானோ அவன் ஷண்டகன். எவனுக்குப் பிக்ஷையின்பொருட்டும் மலமூத்திரங்களைக் கழித்தற்கும் நடையுள்ளதோ, (அவசியமானால்) யோஜனை (காத) தூரத்திற்குமேற் செல்லானோ, அவன் எல்லாவிதத்தாலும் பங்குவேயாவன். இருக்கும்போதேனும் நடக்கும்போதேனும் எவனுடைய கண் நான்கு நுகத்தடி (பதினாறுமுழ) அளவுள்ள பூமியை விட்டுத் தூரத்திற் செல்லுவதாகாதோ, அச்சந்நியாசி அந்தன் எனப்படுகின்றான். இதமும் மிதமும் மனோரம்மியமும் சோகத்தைக் கெடுப்பதுமான எவ்வார்த்தையினைக் கேட்டு எவன் கேளாததுபோலிருப்பானோ, அவன் பதிரனென்று சொல்லபடுகிறான். விஷயங்கள் சமீபத்திலுளதாகவும் இந்திரியக் குறைவில்லாதவனும் சமர்த்தனுமாயிருந்து, எவன் நித்தியம் சுழுத்தனைப்போ விருக்கின்றானோ, அச்சந்நியாசி முக்தன் எனப்படுகின்றான். நிந்தையும் செய்யலாகாது ஸ்துதியும் செய்யலாகாது. ஒருவனது இரகசியத்தை வெளியிட்டுத் துன்புறுத்தலாகாது. அதிகப் பேச்சுடையவனாகலாகாது. அவ்வாறு எங்குமே சமமுடையவனாகவேண்டும். எந்த ஸ்திரீயோடும் சம்பாஷிக்கலாகாது. முன்பார்த்தவள் எவளையும் நினைக்கலாகாது.

அவர்கள் சம்பந்தமான வார்த்தையையும் நீக்கவேண்டும். சித்திரத்தில் எழுதியவளையும் பார்க்கலாகாது." என்பதாம். எப்படி ஓர் விரதமுடையவன் இரவில் ஒருவேளை சாப்பிடுதல் உபவாசம் மௌனம் முதலிய விரதத்தினைச் சங்கற்பித்துக்கொண்டு கவனமுடையவனாய் நழுவச்செய்யாது செவ்வையாய் பரிபாலிக்கின்றானோ, அப்படியே அஜிஹ்வத்துவாதி விரதத்தில் நிற்பவன் கவனமுள்ளவனாய் விவேகத்தினைக் காக்கவேண்டும். இவ்வாறு நீண்டகாலம் நிரந்தரம் ஆதரவோடு சேவிக்கப்பட்ட விவேகம் இந்திரிய நிரோதமென்னும் இரண்டினாலும் மைத்திரியாதி பாவனைகள் செவ்வையாய் நிலைத்தபோது, ஆசுரசம்பத்துவடிவ மலினவாசனைகள் நசிக்கின்றன. அதன்பின் மூச்சுவாங்குதலும் விடுதலும் இமைமூடுதலும் திறத்தலும்போல புருஷப்பிரயத்தனமின்றிப் பிரவர்த்திப் பணவாகிய மைத்திரியாதிவாசனைகளோடு உலகத்தில் வியவகரித்தும், அவற்றினது குறைவு நிறைவுகளைச் சித்தத்தில் கொள்ளாது விட்டு, நித்திரை தந்திரை மனோராஜ்யமுதலிய சமஸ்த சேஷ்டைகளையும் பிரயத்தனத்தால் ஒழிந்தன வாக்கிச் சின்மாத்திரவாசனையினை இயல்பாகச் சித்ஜடவடிவ இந்த ஜகத்துத்தோற்றம் வரையில் பழகவேண்டும்.

"पराञ्चि खानि व्यतृणत्स्वयंभूः ॥

சுயம்புவானவர் இந்திரியங்களை வெளியிற் செல்லுவனவாகவே படைத்தார்" என்னும் சுருதியின்படி சப்த ஸ்பரிசாதி ஜடவஸ்து விளக்கத்தின் பொருட்டே இந்திரியங்கள் படைக்கப்பட்டனவாயினும், சைதன்னியத்திற்கு உபாதானமாயிருத்தற்றன்மை யிருத்தலால் அது நீக்கக்கூடியதாகாமையின், ஜடமானது ஜகத்து சைதன்ய பூர்வகமாகவே விளங்குகிறது."

"तमेव भान्तमनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति ।

பிரகாசமுடைய அத (ஆத்மாவி) னையே தொடர்ந்து பிரகாசிக்கின்றன யாவும். அதன் பிரகாசத்தினால் இவ்வெல்லாம் பிரகாசிக்கின்றது'' என்னும் சுருதியினால். அவ்வாறாகவே, பின்பிரகாசிப்பதற்கு முதலாக விளங்குகிற சைதன்யமே வாஸ்தவமான ரூபம் என்று நிச்சயித்து, ஜடத்தினை உபேக்ஷித்து, சின்மாத்திரத்தனைச் சித்தத்தில் வாசனை யாக்கவேண்டும். இதுவும் பலிசுக்கிரர்களின் பிரசினோத்தரங்களால் மிகத் தெளிவாய் அறியப்படுகின்றது:—

"किमिहास्तीह किंमात्रमिदं किंमयमेव च ।
कस्त्वं कोऽहं क एते वा लोका इति वदाऽऽशु मे ॥
चिदिहास्तीह चिन्मात्रमिदं चिन्मयमेव च ।
चित्त्वं चिदहमेते च लोकाश्चिदिति संग्रहः ॥

வினா:—இங்கு என்ன இருக்கிறது? இது எது மாத்திரமாம்? எது மயமேயாம்?, நீ யார்? நானார்? இவ்வுலகங்கள் யாவை? என்பதனை எனக்கு விரைவில் சொல்லுக.

(விடை:—) இங்கு சித்தே யுள்ளது. இந்த இது சின்மாத்திரமாம்; சின்மயமேயாம் சித்து நீ சித்து நான். இவ்வுலகங்கள் சித்து என்பது சுருக்கமாம்." என்பதாம். எப்படிச் சுவர்ணகாரன் கடகத்தினை விலைக்கு வாங்குகிறவனாயினும் வளையவடிவத்தின் குணதோஷங்களை உபேக்ஷித்து, நிறையிலும் மாற்றிலுமே மனதைச் செவ்வையாய் வைக்க விரும்புகின்றானோ, அதுபோலச் சின்மாத்திரத்தில் மனதை வைக்கவேண்டும். எவ்வளவு காலம்வரையில் ஜடத்தினை முற்றும் உபேக்ஷித்துச் சின்மாத்திரத்தில் மனதின் பிரவிருத்தி மூச்சு முதலியவற்றைபோல இயல்புடையதாகப் பொருந்துமோ, அவ்வளவு காலம்வரையில் சின்மாத்திரவாசனையில் முயலவேண்டும். அப்படியானால் முதலிலேயே சின்மாத்திரவாசனை உளதாகுக; அதனாலேயே மலினவாசனை நீங்குதலால்; இந்த வினான மைத்திரியாதியப்பியாசத்தினால் என்ன பயனெனின், அவ்வாறன்று; சித்வாசனை நிலைக்கப்படாமையின் எப்படி அஸ்திவாரதிடத்துவமின்றிக் கட்டப்பட்டதாயினும் கம்பம் சுவர்முதலிய வீடு நிலைபெறாதோ (விழுந்துவிடுமோ), எப்படிப் பேதிக்குச் சாப்பிடுதலால் பிரபல தோஷங்களை நீக்கிக்கொள்ளாமல் சாப்பிடப்பட்ட மருந்து ஆரோக்கியத்தினைச் செய்வதாகாதோ, அதுபோல வாகும். சங்கை:—"அதனையும் விடவேண்டும்." என்று சின்மாத்திரவாசனைக்கும் நீக்கப்படுந்தன்மை காணப்படுகின்றது. அது பொருத்தமுடையதன்று; சின்மாத்திரத்தினை விட்டு, கொள்ளத்தக்கதான வேறொன்றின்மையாலெனின் (சமாதானம்:—) இது தோஷமன்று. சின்மாத்திரவாசனை மனோபுத்திகளோடு கூடியது அவையின்றியது என்று இருவகையினதாம். கரணம் மனம், கர்த்திருத்துவோபாதி புத்தியாம். ஆகவே

அப்பிரமத்தனாகிய யான் ஏகாக்கிரமான மனதினால் சின்மாத்திரத்தினைப் பாவிப்பேன் என்னும் இத்தன்மையதான கர்த்திருகாரணானு சந்தானத்தோடு கூடிய முதலாவதான எந்த சின்மாத்திரவாசனை தியான சப்தத்தினால் சொல்லப்படுவதோ, அதனை விடவேண்டும். எது அப்பியாசமுதிர்ச்சியால் கர்த்திருத்துவாதி யநுசந்தானத்தின் அவதானமின்றியதாய்ச் சமாதி சப்தத்தாற் சொல்லப்படுவதாகுமோ, அந்தச் சின்மாத்திரவாசனையைக் கொள்ளவேண்டும். தியான சமாதிகளின் லக்ஷணத்தினைப் பதஞ்சலியார்.

"तत्र प्रत्ययैकतानता ध्यानम् ।
तदेवार्थमात्रनिर्भासं स्वरूपशून्यमिव समाधिः ॥

அதில் (தியேயவஸ்துவில்) பிரத்தியயத்தின் (அறிவின்) இடையின்றிய ஒரே தொடர்பான தன்மை தியானம். அத்தியானமே தியேயவஸ்து மாத்திரவிளக்கமாய் ஸ்வரூபசூனியம் போல்வது சமாதியாம்." என்று சூத்திரஞ் செய்திருக்கிறார். அத்தன்மைய சமாதியில் நெடுங்காலம் இடையின்றி ஆதரவோடு சேவித்து, ஸ்திரத்தன்மையைப்பெற்று, பின் கர்த்திருகாரணானு சந்தானப் பரித்தியாகத்தின் பொருட்டதான முயற்சி எதுவோ, அதனையும் விடவேண்டியது.

சங்கை:—இவ்வாறாகவே அந்தத்தியாக முயற்சியும் விடத்தக்கதாமென்று அநவஸ்தை (வரம்பின்மை யென்பது) வருமே யெனின் (சமாதானம்:—) இவ்வாறு வெண்டியதில்லை; கதகரஜோ நியாயத்தால் (தேற்றாங்கொட்டைப் பொடி திருஷ்டாந்தத்)தால் தன்னையும் பிறிதையும் நீக்குவதாயிருத்தலின். எப்படி ஜலத்தில் போடப்பட்ட தேற்றாம்பொடி மற்றய தூசிகளோடு தன்னையும் நீக்குகிறதோ, அதுபோலத் தியாகத்தின்பொருட்டதான பிரயத்தனம் கர்த்திருகாரணானு சந்தானத்தினை நீக்கித் தன்னையும் நீக்குகின்றது. அது நீங்கவே மலினவாசனையினைப்போல சுத்த வாசனைகளும் கெடுதலால் மனது வாசனையின்றியதாய் நிற்கின்றது. இவ்வபிப்பிராயங்கொண்டே வசிஷ்டர்,

"तस्माद्वासनया बद्धं मुक्तं निर्वासनं मनः ।
राम निर्वासनीभावमाहराशु विवेकतः ॥

सम्यगालोचनात्सत्याद्वासना प्रविलीयते ।
वासनाविलये चेतः शममायाति दीपवत् ॥

ஆதலால் மனது வாசனையோடுகூடி பந்தமுடையதும், வாசனையின்றியதாய் விடுபட்டதுமாம். இராம! விவேகத்தினால் வாசனையின்றிய தன்மையை விரைவில் கொள். சத்தியப்பிரஹ்ம விஷயமான நல்ல ஆலோசனையினால் வாசனை நன்றாய் ஒடுங்குகிறது. வாசனை யொடுங்கியபோது சித்தம் (எண்ணமின்றிய) தீபம்போல் சமமடை (கெடு)கின்றது" என்றும்,

"यो जागर्ति सुषुप्तिस्थो यस्य जाग्रन्न विद्यते ।
यस्य निर्वासनो बोधः स जीवन्मुक्त उच्यते ॥

எவன் விழிப்புள்ளவனாய்ச் சுழுத்தியி லிருப்பவனாகின்றானோ, எவனுக்கு ஜாக்கிரத் இல்லையோ, எவனுக்கு வாசனையின்றியதான போதமுளதோ, அவன் ஜீவன்முக்தன் எனப்படுகின்றான்" என்றும்

"सुषुप्तिवत्प्रशमितभाववृत्तिना स्थितः सदा जाग्रति येन चेतसा ।
कलान्वितो विधुरिव यः सदा बुधैर्निषेव्यते मुक्त इतीह स स्मृतः ॥

எவன் ஜாக்கிரத்தில் எப்போதும் சுழுத்திபோல் மிகவொடுங்கிய தன்மையான விருத்தியுடைய சித்தத்தோடு நிற்பவனாகின்றானோ, எப்போதும் அறிஞர்களால் (பூர்ண)கலையோடுகூடிய சந்திரனைப்போல் சேவிக்கப்படுகின்றானோ, அவன் இங்கு முக்தன் என்று கருதப்பட்டவனாவன்" என்றும்,

"हृदयात्संपरित्यज्य सर्वमेव महामतिः । यस्तिष्ठति गतव्यग्रः समुक्तः परमेश्वरः ॥ समाधिमथ कर्माणि मा करोतु करोतु वा । हृदयेनास्तसर्वाशो मुक्त एवोत्तमाशयः ॥ नैष्कर्म्येण न तस्यार्थस्तस्यार्थोऽस्ति न कर्मभिः । न समाधानजप्याभ्यां यस्य निर्वासनं मनः ॥ विचारितमलं शास्त्रं चिरमुद्ग्राहितं मिथः । संत्यक्तवासनान्मौनादृते नास्त्युत्तमं पदम् ॥

மகாமதியினன் எவன் இருதயத்தினின்று எல்லாவற்றையுமே செவ்வையாய் விட்டு, கலக்கமின்றியவனாய் நிற்கின்றானோ, அவன் முக்தன்; பரமேசுவரன். சமாதியையாவது கர்மங்களையாவது செய்

யாதிருக்குக, அல்லது செய்க. உள்ளத்தினால் எல்லாவாசைகளு மொழிந்தவன் உத்தமாபிப்பிராயமுள்ளவனை முக்தனே. எவன் மனதுவாசனையின்றியதாயிருக்கிறதோ அவனுக்குக் கர்மமின்றிய தன்மையால் ஒரு பயனுமில்லை. கர்மங்களால் அவனுக்கு ஒரு பயனுமில்லை; சமாதானத்தினாலும் ஜபத்தினாலும் பயனில்லை. பரஸ்பரம் நீண்டகாலம், விசாரிக்கப்பட்டதும் மேலாகக்கொள்ளப் பட்டதுமான சாஸ்திரம் போதும். வாசனை செவ்வையாய் விடப் பட்டதாகிய மௌனத்தைவிட உத்தமமான பதம் இல்லை.'' என் றும் சொல்லுகின்றார். வாசனையின்றி மனதுடையவனுக்கு ஜீவ னத்திற்கேதுவான வியவகாரம் லோபமாகுமே யென்று சங்கிக்க லாகாது. சக்ஷு முதலியவற்றின் வியாபாரத்திற்கு லோபமா? அல்லது மானசவியவகாரத்திற்கு லோபமா? அவற்றுள் முதலா வதனை உத்தாலகர்,

"वासनाहीनमप्येतच्चक्षुरादीन्द्रियं स्वतः ।
प्रवर्तते बहिः स्वार्थे वासना नात्र कारणम् ॥

இந்தச் சக்ஷு முதலிய இந்திரியம் வாசனையின்றியதாயினும் வெளி யில் தனது விஷயத்தில் இயல்பாகவே பிரவர்த்திக்கும். இதில் வாசனை காரணமன்று.'' என்று கிராகரித்திருக்கின்றனர். இரண் டாவதனை வசிஷ்டர்,

"अयत्नोपनतेष्वक्षिदिग्द्रव्येषु यथा पुनः ।
नीरागमेव पतति तद्वत्कार्येषु धीरधीः ॥

பிரயத்தனமின்றிச் சமீபித்த திக்குத் திரவியங்களில் கண்ணனது எப்படி மறுபடியும் இராகமின்றியதாகவே விழுகின்றதோ அது போல தீரபுத்தியுள்ளவன் காரியங்களில் இராகமின்றிப் பொருந்து வன்'' என்று கிராகரித்திருக்கின்றனர். அப்படிப்பட்ட புத்தியி னால் பிராப்த போகத்தினை அவரே,

"परिज्ञायोपभुक्तो हि भोगो भवति तुष्टये ।
विज्ञाय सेवितश्चोरो मैत्रीमेति न चोरताम् ॥

अशङ्कितोपसंप्राप्ता ग्रामयात्रा यथाध्वगैः ।
प्रेक्ष्यते तद्वदेव ज्ञैर्भोगश्रीरवलोक्यते ॥

தெரிந்து புசிக்கப்பட்ட போகமே சந்தோஷத்தின் பொருட்டாகின்றது. தெரிந்து சேவிக்கப்பட்ட திருடன் மித்திரத்தன்மையை யடைகிறான்; திருடன்றன்மையை யடைகிறதில்லை. சந்தேகமின்றிய தாயதாய் செவ்வையாயடையப்பட்ட கிராமயாத்திரை எப்படி வழிப்போக்கர்களாற் பார்க்கப்படுகின்றதோ அதுபோலவே போக லக்ஷ்மி அறிஞர்களால் (மேலெழுந்த தன்மையாகப்) பார்க்கப்படுகின்றது" என்று உபபாதனஞ் செய்கின்றார். போக காலத்திலும் வாசனையுள்ளவனைவிட வாசனை யின்றியவனுக்கு விசேஷத்தினை,

"नापदि ग्लानिमायाति हेमपद्मं यथा निशि ।
नेहन्ते प्रकृतादन्यद्रमन्ते शिष्टवर्त्मनि ॥
नित्यमापूर्णतामन्तरक्षुब्धामिन्दुसुन्दरीम् ।
आपद्यपि न मुञ्चन्ति शशिनः शीततामिव ॥
अब्धिवद्धृतमर्यादा भवन्ति विगताशयाः ।
नियतिं न विमुञ्चन्ति महान्तो भास्करा इव ॥

இரவில் பொற்றாமரையினைப்போல் ஆபத்தில் வாட்டமடைகிறதில்லை. தனக்கு தற்காலம் வாய்த்துள்ளதைவிட வேறொன்றனை விரும்பார். சிஷ்டர்களது மார்க்கத்தில் இரமிப்பார்கள். உள்ளில் க்ஷோபமின்றியதும் இந்துபோல் சுந்தரமானதுமான நிறைவினை நித்தியம் ஆபத்திலும் சந்திரன் சீதத்தன்மையினை விடாததுபோல விடார். விரிந்த கருத்துடையோராய்ச் சமுத்திரம்போல மரியாதையற்ற(வரம்பில்லாத) வராயிருப்பார்கள். மகான்கள் சூரியர்களைப்போல நியதியை விடமாட்டார்கள். (சூரியர்கள் என்ற பன்மை மாதந்தோறுமுள்ள வியக்திபேதத்தினாலாம் அல்லது சந்திரன் அக்கினி முதலியோரையும் கொள்ளுதற்காம் உபமேயத்தினை நோக்கியென்னினுமாம்.)" என்று கூறுகின்றார். சமாதியினின்றெழுந்த ஜநகருக்கும் இவ்விதமான நடையே

"तूष्णीमथ चिरं स्थित्वा जनको जनजीवनः ।
व्युत्थितश्चिन्तयामास मनसा शमशालिना ॥
किमुपादेयमस्तीह यत्नात्संसाधयामि किम् ।
स्वतः स्थितस्य शुद्धस्य चितः का मेऽस्ति कल्पना ॥
नाभिवाञ्छाम्यसंप्राप्तं संप्राप्तं न त्यजाम्यहम् ।
स्वस्थ आत्मनि तिष्ठामि यन्ममास्ति तदस्तु मे ॥
इति संचिन्त्य जनको यथाप्राप्तक्रियामसौ ।
असक्तः कर्तुमुत्तस्थौ दिनं दिनपतिर्यथा ॥
भविष्यन्नानुसंधत्ते नातीतं चिन्तयत्यसौ ।
वर्तमाननिमेषं तु हसन्नेवानुवर्तते ॥

ஜனங்களின் ஜீவனரான ஜனகர் சும்மாவிருந்து, பின் விழித்தவராய்ச் சமவியல்பினதாகிய மனதினால் சிந்திக்கலானார்:—இங்கு கொள்ளத்தக்கது யாதுளது? யத்னத்தால் எதனை நன்கு சாதிப்பேன்? இயல்பாக நிற்பதான சுத்த சித்தாகிய எனக்கு என்ன கற்பனையுளது? பெறாததனை விரும்பேன். பெற்றதனை நீக்கேன். சுவஸ்தனாய் ஆத்மாவில் நிற்கின்றேன். யாது எனக்கு உள்ளதோ அஃது எனக்கிருக்குக. என்று நன்றாய்ச் சிந்தித்து, இச்சனகர் வினைவசத்தால் வாய்த்த கிரியையில் பற்றில்லாதவராய்ச் செய்ய எழுந்தார் தினத்தினைத் தினபதியான சூரியன் விளக்க எழுந்தாற்போல. இவர் வருவதனைச் சிந்தியார்; சென்றதனையும் சிந்தியார்; நிகழ்கின்ற நிமிஷத்தினையும் சிரித்துக்கொண்டே அநுசரிப்பார்." என்று படிக்கப்பட்டுளது.

ஆதலால் இவ்வாறு சொல்லியபடியான வாசனாக்ஷயத்தினால் ஜீவன்முக்தி யுண்டாகின்றது என்பது நன்றாய் நிலைத்தது.

इति श्रीमद्विद्यारण्यप्रणीते जीवन्मुक्तिविवेके

द्वितीयं वासनाक्षयप्रकरणम् ॥ २ ॥

வாசனாக்ஷய நிருபணமென்னும்

இரண்டாவது பிரகரணம் முடிந்தது.

---

உ

ஸ்ரீ கணேசாயநம:

—: மூன்றாவது :—

# மனோநாசப் பிரகரணம்.

இனி ஜீவன்முக்தி சாதனமாகிய மனோநாசத்தினை நிரூபிப்பாம். எல்லா வாசனைகளும் ஒழிந்தபோது பொருளால் மனது நசிக்கவே செய்கின்றது. என்றாலும் சுவாதந்திரியமாக மனோநாசம் செவ்வையாய் அப்பியசிக்கப்பட்டபோது வாசனாக்ஷயம் இரக்ஷிக்கப்பட்டதாகின்றது. அஜிஹ்வத்துவம் ஷண்டத்துவமுதலியவற்றின் அப்பியாசத்தினாலேயே அதன் இரக்ஷை பெறப்பட்டதாம் என்று சங்கிக்கலாகாது; மனது நஷ்டமாயின் அஜிஹ்வத்துவமுதலியன அர்த்தத்தினால் சித்தித்தனவாகுதலால், அவற்றினை அப்பியசிக்கும் வருத்தமிராதாகலின். சங்கை—மனோநாசாப்பியாசம் அதிலும் இருக்கின்றதேயெனின், (சமாதானம்:—) இருக்குக; அதற்கு ஆவசியகத்துவமிருத்தலின். மனோநாசமின்றி அஜிஹ்வத்துவாதிகள் அப்பியசிக்கப்பட்டனவாயினும் ஸ்திரமுடையனவாகா. இதனாற்றான் மனது நசிக்கவேண்டுமென்பதனை ஜநகர்,

"सहस्राङ्कुरशाखात्मफलपल्लवशालिनः ।
अस्य संसारवृक्षस्य मनो मूलमिति स्थितम् ॥
संकल्पमेव तन्मन्ये मनोमूलमिति स्थितम् ।
संकल्पमेव तन्मन्ये संकल्पोपशमे न तत् ॥
शोषयामि यथा शोषमेति संसारपादपः ।
प्रबुद्धोऽस्मि प्रबुद्धोऽस्मि दुष्टश्चोरो मयात्मनः ॥
मनो नाम निहन्म्येनं मनसास्मि चिरं हतः ॥

ஆயிரம் முளைகள் சாகைகள் கொம்புகள் பழங்கள் தளிர்கள் என்பவற்றை யுடையதான இச்சம்சார விருக்ஷத்திற்கு மனது வேர் என்று நிலைத்தது. மனது வேர் என்று நிலைத்த அதனைச் சங்கற்ப

மென்றே மதிக்கின்றேன். சங்கற்ப மொழிந்தபோது அஃது இல்லை. சம்சாரவிருக்ஷம் உலர்ச்சியை யடையும்படியாக உலர்த்துகின்றேன். விழித்தவனானேன். விழித்தவனானேன். எனது ஆத்மாவின் திருடனை காணப்பட்டான். மனம் என்பவன் இவன். இவனைக்கொல்லுகிறேன். நெடுங்காலம் மனதினால் அதஞ்செய்யப்பட்டவனாயிருக்கிறேன்" என்று கூறுகின்றார். வசிஷ்டரும்,

"अस्य संसारवृक्षस्य सर्वोपद्रवदायिनः ।
उपाय एक एवास्ति मनसः स्वस्य निग्रहः ॥
मनसोऽभ्युदयो नाशो मनोनाशो महोदयः ।
ज्ञमनो नाशमभ्येति मनोऽज्ञस्य हि शृङ्खला ॥
तावन्निशीथवेताला वल्गन्ति हृदि वासनाः ।
एकतत्त्वदृढाभ्यासाद्यावन्न विजितं मनः ॥
प्रक्षीणचित्तदर्पस्य निगृहीतेन्द्रियद्विषः ।
पद्मिन्य इव हेमन्ते क्षीयन्ते भोगवासनाः ॥
हस्तं हस्तेन संपीड्य दन्तैर्दन्तान्विचूर्ण्य च ।
अङ्गान्यङ्गैः समाक्रम्य जयेदादौ स्वकं मनः ॥
एतावति धरणितले सुभगास्ते साधुचेतसः पुरुषाः ।
पुरुषकथासु च गण्या न जिता ये चेतसा स्वेन ॥
हृदयबिले कृतकुण्डल उल्बणकलनाविषो मनोभुजगः ।
यस्योपशान्तिमगमच्चन्द्रवदुदितं तमव्ययं वन्दे ॥

சர்வோபத்திரவங்களையுந் தருவதான இச்சம்சாரவிருக்ஷமாகிய இதற்கு உபாயம் ஒன்றே உளது. அது தனது மனதின் நிக்கிரகமாம். மனதின் உதயம் (இவனுக்கு) நாசமாம்; மனதின் நாசம் மகோதயமாம். ஞானியின் மனது நாசத்தை யடைகின்றது. அஞ்ஞானியின் மனது நிச்சயமாகத் தளையாம் எதுவரையில் ஏக (பிரஹ்மாத்ம) தத்துவாப்பியாசத்தினால் மனது விசேஷமாய் ஜயிக்கப்படவில்லையோ, அதுவரையில் வாசனைகளான இரவிற்சரிப்பனவாகிய வேதாளங்கள் சுழிக்கின்றன. சித்தத்தின் கர்வமொழிந்த

வனும் இந்திரியங்களான சத்துருக்களை யடக்கினவனுமான புருஷனது போகவாசனைகள் பனிக்காலத்தில் தாமரைகளைப்போல நசிக்கின்றன. கையினுற கையைப்பிசைந்தும், பற்களால் பற்களைப் பொடித்தும், அங்கங்களால் அங்கங்களைச் செவ்வையாய்த் தாக்கியும் முதலில் தனது மனதை ஜயிக்கவேண்டும். எவர்கள் தனது சித்தத்தினுல் ஜயிக்கப்படாதவர்களோ, அப்புருஷர்கள் இத்தரணிதலத்தில் நற்பாக்கிய முடையோர்; சாது சித்தமுள்ளபுருஷர்கள்; புருஷவார்த்தையில் கணிக்கத்தக்கவ ராவார். இருதயமாகிய புற்றில் மண்டலமிட்டிருக்கும் மிக்க கற்பனுவிஷமுடைய மனப்பாம்பு எவனுக்கு நாசமடைந்ததோ, அந்தச் சந்திரனைப்போன்று விளங்கும் அவ்வயனை வணங்குகின்றேன்." என்றும்,

"चित्तं नाभिः किलास्येदं मायाचक्रस्य सर्वतः ।
स्थीयते चत्तदाक्रम्य तन्न किंचित्प्रबाधते ॥

மாயாசக்கிரத்திற்குச் சூழவும் இம்மனமானது நிச்சயமாக நாபியாம். அது அசைவற்று நிற்குமாயின், அதனை ஆக்கிரமித்து அச்சக்கரம் சிறிதும் பாதிக்காது." என்று கூறுகின்றனர். கௌடபாதாசாரியர்களாலும்,

"मनसो निग्रहायत्तमभयं सर्वयोगिनाम् ।
दुःखक्षयः प्रबोधश्चाप्यक्षया शान्तिरेव च ॥

மனதினது நிக்கிரகத்தின் வசத்தனவாம் சர்வயோகிகட்கும் ஞானம் துக்கக்ஷயம் அழியாத சாந்தி அபயம் என்பன." என்று சொல்லப்பட்டுளது. அர்ஜுனனால்,

"चञ्चलं हि मनः कृष्ण प्रमाथि बलवद्दृढम् ।
तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम् ॥

கிருஷ்ண! மனது சஞ்சலமுள்ளதும் கலக்குமியல்பினதும் வலியுடையதும் திடமானதுமாம். அதன் நிக்கிரகத்தினை யான் வாயுவின் நிக்கிரகம்போல மிகவும் செய்தற்கரிதென மதிக்கின்றேன்." என்று சொல்லப்பட்டது எதுவோ, அவ்வசனம் ஹட(பிடிவாத) யோகவிஷயத்தினதாம். இதனுற்றான் வசிஷ்டர்,

“उपविश्योपविश्यैव क्वचित्केन मुहुर्मुहुः ।
न शक्यते मनो जेतुं विना युक्तिमनिन्दिताम् ॥
अङ्कुशेन विना मत्तो यथा दुष्टमतङ्गजः ।
विजेतुं शक्यते नैव तथा युक्त्या विना मनः ॥
मनोविलयहेतूनां युक्तीनां सम्यगीरणम् ।
वसिष्ठेन कृतं तावत्तन्निष्ठस्य वशे मनः ॥
हठतो युक्तितश्चापि द्विविधो निग्रहो मतः ।
निग्रहो धीक्रियाक्षाणां हठो गोलकनिग्रहात् ॥
कदाचिज्जायते कश्चिन्मनस्तेन विलीयते ।
अध्यात्मविद्याधिगमः साधुसंगम एव च ॥
वासनासंपरित्यागः प्राणस्पन्दनिरोधनम् ।
एतास्ता युक्तयः पुष्टाः सन्ति चित्तजये किल ॥
सतीषु युक्तिष्वेतासु हठान्नियमयन्ति ये ।
चेतस्ते दीपमुत्सृज्य विनिघ्नन्ति तमोऽञ्जनैः ॥
विमूढाः कर्तुमुद्युक्ता ये हठाच्चेतसो जयम् ।
ते निबध्नन्ति नागेन्द्रमुन्मत्तं बिसतन्तुभिः ॥

ஓரிடத்தில் உட்கார்ந்து உட்கார்ந்து ஒருவனால் அடிக்கடி வசப்படுத்தினும் நிந்திக்கப்படாத (சமத்தன்மையாகிய) யுக்தியினை விட்டு மனது ஜயிக்கக்கூடியதன்று. மதங்கொண்ட துஷ்டயானை எப்படி அங்குசமின்றி விசேஷமாய் ஜயிக்கக்கூடியதாகாதோ, அதுபோல மனது யுக்தியின்றி ஜயிக்கக்கூடியதே யாகாது. மனோவிலயத்திற்கு ஏதுக்களான யுக்திகள் * வசிஷ்டராற் செவ்வையாய்ச் சொல்லப்பட்டுள. அவ்வளவில் அதில் நிற்பவனுக்கு மனது வசத்தில் வரும். மனதின் நிக்கிரகம் ஹடத்தினாலும் யுக்தியினாலும் இரண்டு விதமாகக் கருதப்பட்டுளது. ஞானகர் மேந்திரியங்களின் கோள

* வசிஷ்டரால் என்பதனால் இது வால்மீகர் வாக்கியமெனத் தெரிகிறது, பாடம் பிறழ்ந்திருக்கலாம்.

கங்களைத் தடுத்தலால் செய்யும் நிக்கிரகம் ஹடமாம். ஒருகால் யாதே னும் ஒன்று பலிக்குமாயின், அதனால் மனது ஒடுங்கும். அத்தி யாத்ம வித்தையினை யடைதல், சாதுசங்கம், வாசனைகளை முற்றும் செவ்வையாய் விடுதல், பிராணவாயுவின் அசைவதைத் தடுத்தல் என்னும் இவை சித்த ஜயத்தில் புஷ்டியுள்ளனவாகிய அந்த யுக்திக ளாம். இந்த யுக்திகளிருக்கும்போது ஹடத்தினால் எவர்கள் சித் தத்தினை யடக்குகிறார்களோ, அவர்கள் தீபத்தினை விட்டு மைகளால் இருளைக்கெடுக்கின்றனர். ஹடத்தினால் சித்தத்தின் ஜயத்தினைச் செய்ய முயன்றவர்களான விசேஷ மூடர்கள் எவர்களோ, அவர்கள் தாமரைத் தண்டின் நூலால் மதங்கொண்ட கஜேந்திரனைக் கட்டுகின் றார்கள்.'' என்று கூறுகின்றார். ஹடநிக்கிரகம் கிரமநிக்கிரக மென்று நிக்கிரகம் இரண்டு விதமாம். அவற்றுள், சக்ஷு சுரோத்தி ராதி ஞானேந்திரியங்களும் வாக்குபாணிமுதலிய கர்மேந்திரியங்க ளும் அதனதன்கோளகத்தினைத் தடுத்தல் மாத்திரத்தால் ஹடத் தினால் நிக்கிரகிக்கப்படுகின்றன. அவ்வுவமையால் மனதையும் அவ் வாறு நிக்கிரகஞ்செய்வேன் என்று மூடனுக்குப் பிராந்தியுண்டா கின்றது. ஆனால் அது நிக்கிரகிக்கப்படமாட்டாது; அதன் கோள கமாகிய இருதயகமலம் நிரோதிக்கக்கூடிய தாகாமையினால். ஆத லால் கிரம நிக்கிரகமே தகுதியுள்ளதாம். கிரம நிக்கிரகத்திலும் அத்யாத்ம வித்தையினடைவு முதலியன உபாயங்களாம். அந்த வித்தையும் திருசியமித்தியாத்துவத்தையும், திருக்குவஸ்துவின் சுவப்பிரகாசத்தன்மையையும் போதிக்கின்றது. அவ்வாறாகவே இம் மனம் தனது கோசரங்களான திருசியங்களில் பிரயோஜனமின்மை யும் பிரயோஜனமுடையதான திருக்குவஸ்துவில் கோசரமாகாத் தன்மையையும் அறிந்து விறகின்றிய நெருப்புபோலத் தானாகவே நாசமாகின்றது. அவ்வாறே சுருதியில்,

"यथा निरिन्धनो वह्निः स्वयोनावुपशाम्यति ।
तथा वृत्तिक्षयाच्चित्तं स्वयोनावुपशाम्यति ॥

எப்படி விறகின்றிய நெருப்புத் தனது காரணத்தில் ஒடுங்குகிறதோ, அப்படி விருத்திகெடுதலால் சித்தம் தனது காரணத்தில் (ஆத்மா

வில்) ஒடுங்குகின்றது." என்று கேட்கப்பட்டுளது. ஆனால் எவன் போதிக்கப்பட்டதாயினும் தத்துவத்தினை நன்றாய் அறிகிறதில்லையோ, எவன் மறக்கின்றானோ, அவ்விருவருக்கும் சாதுசங்கமமே உபாயமாம். ஏனெனின், சாதுக்கள் மறுபடியும் மறுபடியும் போதிக்கின்றனர் நினைப்பூட்டுகின்றனர். எவன் வித்தியாமத முதலிய துர்வாசனையால் பீடிக்கப்பட்டவனாய் சாதுக்களை யநுசரித்து நடக்க முயலானோ, அவனுக்கு விவேகத்தினால் வாசனைகளை விடுதல் உபாயமாம். பிராணனது அசைவு வாசனை யென்னு மிரண்டும் சித்தத்தின் பிரேரகங்களாயிருத்தலின், அவ்விரண்டும் நிரோதமாகச் சித்தசாந்தி உண்டாகின்றது. அவற்றின் பிரேரகத் தன்மையினை வசிஷ்டர்,

"द्वे बीजे चित्तवृक्षस्य वृत्तिव्रततिधारिणः ।
एकं प्राणपरिस्पन्दो द्वितीयं दृढवासना ॥
सती सर्वगता संवित्प्राणस्पन्देन बोध्यते ।
संवेदनादनन्तानि ततो दुःखानि चेतसः ॥

விருத்திக்கொடிகளைத் தரித்துள்ள சித்தமாகிய விருக்ஷத்திற்கு இரண்டுவிதைகளுள. ஒன்று பிராணனது அசைவு, இரண்டாவது திடவாசனை. சம்வித் (அறிவு) எங்குமுள்ளதா யிருக்கினும் பிராணனது அசைவால் விழிப்பிக்கப்படுகின்றது. அந்தச் சம்வேதன (ஆதிசங்கற்ப) த்தினால் சித்தத்திற்கு அநந்த துக்கங்களாம்." என்று கூறுகின்றார். எப்படிச் சாம்பலினால் மூடப்பட்டுள்ள அக்கினியைக் கொல்லர்கள் துருத்திகொண்டு ஊதுகிறார்களோ, அங்குத் துருத்தியினின்றுண்டாகும் வாயுவால் அவ்வக்கினி ஜ்வலிக்கின்றதோ, அப்படிச் சித்தத்தின் உபாதானமாகிய காஷ்டஸ்தானத்ததான அஞ்ஞானத்தினால் மறைக்கப்பட்டுள்ள சம்வித்தானது பிராணஸ்பந்தத்தினால் விழிப்பிக்கப்படுவதாய்ச் சித்தவிருத்தி வடிவமாகப் பிரஜ்வலிக்கின்றது. அந்தச் சித்தவிருத்தி யென்னும் பெயருடைய சம்வித்தின் ஜ்வாலை (சுடர்) வடிவ சம்வேதன (சங்கற்ப) த்தால் துக்கங்கள் உற்பத்தியாகின்றன. அத்தன்மைய இது பிராணனது அசைவால் பிரேரிக்கப்பட்டதான சித்தோற்பத்தியாம். மற்ற (வாசனையால் பிரேரிக்கப்பட்டுண்டாவ) தலையும் அவரே,

"भावसंवित्प्रकटितामनुभूतां च राघव ।
चित्तस्योत्पत्तिमपरां वासनाजनितां शृणु ॥
दृढाभ्यस्तपदार्थैकभावनादतिचञ्चलम् ।
चित्तं संजायते जन्मजरामरणकारणम् ॥

இராகவ! பாவத்தை விஷயஞ்செய்வதான சம்வித்தினால் (சித்தவிருத்தியாகிய ஞப்தியினால்) வெளிப்பட்டதும் அநுபவி (சாக்ஷியால் பிரத்தியக்ஷமா) க்கப்பட்டதும் வாசனையாற் பிறந்ததுமான சித்தத்தின் உற்பத்தியாகிய மற்றதனைக்கேள். திடமாக அப்பியசிக்கப்பட்ட பதார்த்தத்தின் ஏகபாவனையால் ஜன்ம ஜராமரணங்கட்குக் காரணமான அதிசஞ்சலமான சித்தம் செவ்வே பிறக்கின்றது." என்று கூறுகின்றார். பிராணவாசனைகளிரண்டிற்கும் சித்தத்தின் பிரேரகத்தன்மை மாத்திரமன்று. மற்றோ, ஒன்றனை யொன்று பிரேரிக்குந் தன்மையுமுண்டு. அதனை வசிஷ்டர்,

"वासनावशतः प्राणस्पन्दस्तेन च वासना ।
क्रियते चित्तबीजस्य तेन बीजाङ्कुरक्रमः ॥

வாசனையின் வசத்தால் பிராணனது அசைவும் அதனால் வாசனையுமாம். அதனால் சித்தபீஜத்தின் பீஜாங்குரக்கிரமம் (வித்தினின்று மரம் மரத்தினின்று வித்து என்னும் முறை) செய்யப்படுகின்றது." என்று கூறுகின்றார். இதனாற்றான் இரண்டிலொன்றன் நாசத்தால் இரண்டன் நாசத்தையும்,

"द्वे बीजे चित्तवृक्षस्य प्राणस्पन्दनवासने ।
एकस्मिंश्च तयोः क्षीणे क्षिप्रं द्वे अपि नश्यतः ॥

சித்தவிருக்ஷத்திற்கு பிராணனது அசைவு வாசனை என்று இரண்டு பீஜங்கள் உள. அவ்விரண்டில் ஒன்று நசிக்கின், இரண்டும் விரைவில் கெடும்." என்று கூறுகின்றார். அவ்விரண்டின் நாசோபாயத்தினையும் நாசபயனையும்,

"प्राणायामदृढाभ्यासैर्युक्त्या च गुरुदत्तया ।
आसनाशनयोगेन प्राणस्पन्दो निरुध्यते ॥

असङ्गव्यवहारित्वाद्भवभावनवर्जनात् ।
शरीरनाशदर्शित्वाद्वासना न प्रवर्तते ॥
वासनासंपरित्यागाच्चित्तं गच्छत्यचित्तताम् ।
प्राणस्पन्दनिरोधाच्च यथेच्छसि तथा कुरु ॥
एतावन्मात्रकं मन्ये रूपं चित्तस्य राघव ।
यद्भावनं वस्तुनोऽन्तर्वस्तुत्वेन रसेन च ॥
यदा न भाव्यते किंचिद्धेयोपादेयरूपि यत् ।
स्थीयते सकलं त्यक्त्वा तदा चित्तं न जायते ॥
अवासनत्वात्सततं यदा न मनुते मनः ।
अमनस्ता तदोदेति परमोपशमप्रदा ॥

பிராணாயாம திடாப்பியாசங்களாலும் குருவினாலும் பதேசிக்கப்பட்ட யுக்தியினாலும் ஆசனம் உணவு என்பவற்றின் யோகத்தினாலும் பிராணசலனம் நிறுத்தப்படுகிறது. பற்றின்றிய வியவகாரமுடைமையால் அல்லது சம்சாரபாவனையை நீக்குதலால் அல்லது சரீரநாசத்தினைக்காட்டுந் தன்மையால் வாசனை பிரவர்த்தியாது. வாசனையைச் செவ்வையாய் விடுதலாலும் பிராணசலனத்தைத் தடுத்தலாலும் சித்தமானது அசித்தத்தன்மையை யடைகிறது. எப்படி விரும்புகிறாயோ அப்படிச்செய். இராகவ! உள்ளே வஸ்துத்தன்மையா (வாஸ்தவமா) கவும் இரசத்தோடும் வஸ்துக்களைப் பாவித்தல் எதுவோ அந்த இவ்வளவு மாத்திரத்தினதாகச் சித்தத்தின் ரூபத்தினை மதிக்கின்றேன். எப்போது தள்ளத்தக்க கொள்ளத்தக்க வடிவினதாகிய யாதேனும் ஒன்று பாவிக்கப்படுகிறதில்லையோ, எல்லாவற்றினையும் விட்டு நிலைக்கின்றதோ, அப்போது சித்தம் பிறக்கிறதில்லை. எப்போதும் வாசனையின்றிய தன்மையால் எப்போது மனது நினைக்கிறதில்லையோ, அப்போது பரம உபசமத்தினைத் தருவதான அமனத்தன்மை (மனதின்றிய தன்மை) உதிக்கின்றது. அமனத்தன்மை உதயமாகாதபோது சாந்தியின்மையை,

"चित्तयक्षदृढाक्रान्तं न मित्राणि न बान्धवाः ।
शक्नुवन्ति परित्रातुं गुरवो न च मानवाः ॥

சிந்தமாகிய இயக்கனால் திடமாக ஆக்கிரமிக்கப் பட்டவனை இரக்ஷிப்பதற்கு மித்திரர்களும் குருக்களும் சக்தராகார். பந்துக்களுமாகார். மானவர்களும் குருக்களும் சக்தராகார்." கூறுகின்றார். "ஆசனமுணவு என்பவற்றின் சம்பந்தத்தால்" என்று எது சொல்லப்பட்டதோ, அதில் ஆசனத்தின் லக்ஷணம் உபாயம் பயன் என்பவற்றை மூன்று சூத்திரங்களால் பதஞ்சலிபகவான் "स्थिरसुखमासनम्। ஸ்திரமும் சுகமுமுண்டாகும்படி இருத்தல் ஆசனமாம்" "प्रयत्नशैथिल्यानन्तसमापत्तिभ्याम्। (மற்றைய முயற்சிகளின் தளர்ச்சி அநந்த (ஆதிசேஷ) னது பாவனை இரண்டினாலும் (ஆசனம் நிலைக்கும்)" "ततो द्वन्द्वानभिघातः அதனால் (ஆசனத்தால்) துவந்துவங்களின் தாக்குதலின்மை யுண்டாகும்" என்று சூத்திரித்திருக்கின்றனர். * பத்மம் ஸ்வஸ்திகமுதலிய எத்தன்மைய தேகத்தினை நிறுத்துதல் வடிவ (ஆசன) த்தால் எவனுக்கு அவயவங்களின் வருத்தமுண்டாகாமை லக்ஷணமான சுகமும், தேகசலனமின்றிய தன்மை லக்ஷணமான ஸ்திரத்தன்மையும் பொருந்துமோ, அவனுக்கு அதுவே முக்கியமான ஆசனமாம். முயற்சிகளின் தளர்ச்சியானது இலௌகிக உபாயமாம் கடை கிருஷிகிருத்தியம் தீர்த்தயாத்திரை ஸ்நாநம் யாகம் ஹோமம் முதலியவற்றின் விஷயமான பிரயத்தனம் (மானச உற்சாகம்) எதுவோ அதன் தளர்ச்சியை செய்ய வேண்டும். இல்லையாயின், அவ்வுற்சாகம் வலிந்து தேகத்தினை எழுப்பி எங்கேனும் செலுத்தும். அலௌகிக உபாயமாவது ஆயிர முடிகளோடு பூமியைத் தாங்கிக்கொண்டு ஸ்திரத்தன்மையாக நிற்கும் இவ்வநந்தன் எவனோ, அவனே யான் என்னும சித்தத்தின் தியானமாகிய அநந்தனது பாவனையாகிய சமாபத்தியாம். அவ்வாறே சொல்லியவிதமான தியானத்தால் ஆசனத்தைச் சம்பாதிக்கும் அதிருஷ்டம் உண்டாகின்றது. ஆசனம் சித்தித்தபோது சீதோஷ்ண சுகதுக்கமானாவமானாதி துவந்துவங்களால் முன்போல் தாக்கப்படான். அவ்விதமான ஆசனத்திற்குத் தக்கதான இடம்

---

* பத்மாசன முதலிய பல ஆசனபேதங்களும் அவற்றின் லக்ஷணங்களும் பிரயோஜனங்களும் ஹடயோகப் பிரதீபிகையின் உரையில் விரிவாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன.

"विविक्तदेशे च सुखासनस्थः शुचिः समग्रीवशिरःशरीरः ।

தனித்தவிடத்தில் சுகாசனத்திலிருப்பவனுய்ச் சமமான கழுத்துச் சிரசு சரீரமென்பவற்றை யுடையவனுய்." என்றும்,

"समे शुचौ शर्करावह्निवालुकाविवर्जिते शब्दजलाशयादिभिः ।
मनोनुकूले न तु चक्षुपीडने गुहानिवाताश्रयणे प्रयोजयेत् ॥

சமமும் சுசியும் பருக்கைக்கற்கள் நெருப்பு மணல் முதலியவைகளில்லாததும் (சமீபத்தில்) சப்தம் ஜலாசயமுதலியவையில்லாததும், மனேநுகூலமும் கண்களுக்கு வருத்தமுண்டுபண்ணுததுமான குகை காற்றில்லாத இடம் என்பவற்றில் பிரயோகிக்கவேண்டும்." என்று சுருதியில் கேட்கப்படுகின்றது. இது ஆசனயோகமாம். அசன (உணவின்) யோகமோ மிதாகாரத் தன்மையாம்;

"अत्याहारमनाहारं नित्यं योगी विवर्जयेत् ।

அதிகமான ஆகாரத்தையும் ஆகாரமின்மையையும் நித்தியம் யோகி விலக்கவேண்டும்" என்னும் சுருதியினுல் பகவானுலும்,

"नात्यश्नतस्तु योगोऽस्ति न चैकान्तमनश्नतः ।
न चातिस्वप्नशीलस्य जाग्रतो नैव चार्जुन ॥
युक्ताहारविहारस्य युक्तचेष्टस्य कर्मसु ।
युक्तस्वप्नावबोधस्य योगो भवति दुःखहा ॥

அதிகமாயுண்பவனுக்கும் யோகமில்லை. அத்தியந்தமும் உண்ணின்றியவனுக்கும் யோகமில்லை; அதிகமாய் உறங்குபவனுக்குமில்லை அர்ஜுனு! அத்தியந்த விழிப்புள்ளவனுக்குமில்லை. பொருத்தமான ஆகார விகாரமுள்ளவனும், கர்மங்களில் பொருத்தமான சேஷ்டையுள்ளவனும், பொருத்தமான நித்திரையும் விழிப்புமுள்ளவனுமான அப்பியாசிக்குத் துக்கத்தையொழிப்பதான யோகமுண்டாகின்றது" என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆசன ஜயமுள்ளவனுக்குப் பிராணுயாமத்தினுல் மனேநாசம் சுவேதாசுவதரர்களால்,

"त्रिरुन्नतं स्थाप्य समं शरीरं हृदीन्द्रियाणि मनसा संनिवेश्य ।
ब्रह्मोडुपेन प्रतरेत विद्वान्स्रोतांसि सर्वाणि भयावहानि ॥
प्राणान्प्रपीड्येह स युक्तचेष्टः क्षीणे प्राणे नासिकयोः श्वसीत ।
दुष्टाश्वयुक्तमिव वाहमेनं विद्वान्मनो धारयेताप्रमत्तः ॥

உடல் கழுத்துச் சிரசென்னும் மூன்றும் நிமிர்ந்துள்ள சரீரத்தினைச் சமமாக நிறுத்தி, மனத்தோடு இந்திரியங்களை இருதயத்தில் நன்றாய்ப் பிரவேசிக்கச்செய்து, வித்துவான் பயத்தைத் தருவனவாகிய எல்லா ஆறுகளையும் பிரஹ்மமாகிய தெப்பத்தினால் கடக்கக்கடவன். பொருத்தமான சேஷ்டையுடையவனான அவன் இங்குப் பிராணன்களைச் செவ்வையாய்ப் பீடித்து, பிராணன் க்ஷீணமானபோது நாசிகைகளுக்குள் சுவாசிக்குக. துஷ்டக்குதிரைகளோடு கூடிய வாகனத்தைப்போல இம்மனதை வித்துவான் சோர்வின்றியவனாய்த் தரிக்கக்கடவன். என்று சுருதியிற் கூறப்பட்டுளது. யோகி வித்தியாமத முதலிய ஆசுரீ சம்பத்தில்லாதவன், அதனோடு கூடியவன் என்று இருவகையினனாவன். அவ்விருவருள், முதலாமவனுக்குப் பிரஹ்மத்தினால் மனது நிரோதிக்கப்பட்டபோது அதனிடை யீடின்றிய தன்மையால் பிராணன் நிரோதிக்கப்படுகின்றது. அவனைக்குறித்து "त्रिरुन्नतं = உடலாதி மூன்றும் நிமிர்ந்துள்ள" என்னும் மந்திரம் படிக்கப்பட்டது. இரண்டாமவனுக்கு அப்பியாசத்தினால் பிராணன் நிரோதிக்கப்பட்டபோது அதனிடை யீடின்றிய தன்மையாக மனது நிரோதிக்கப்படுகின்றது. அவனைக்குறித்து "प्राणान्प्रपीड्य = பிராணன்களைச் செவ்வையாய்ப் பீடித்து" என்னும் மந்திரம் பிரவிருத்தித்தது. பிராணனை பீடிக்கும் கிரமம் சொல்லப்படும். அந்தப் பீடித்தலினால் பொருத்தமான சேஷ்டையுள்ளவனாகின்றான். மனச்சேட்டைகளான வித்தியாமத முதலியன நிரோதிக்கப்படுகின்றன. பிராண நிரோதத்தினால் சித்ததோஷம் நிரோதமாதலில் திருஷ்டாந்தம் வேறிடத்தில்,

"यथा पर्वतधातूनां दह्यन्ते दहनान्मलाः ।
तथेन्द्रियकृता दोषा दह्यन्ते प्राणनिग्रहात् ॥

எப்படி பர்வத தாதுக்களின் அழுக்குகள் (புடம்போட்டு) எரித்தலால் எரிக்கப்படுகின்றனவோ, அப்படி இந்திரியங்களாகிய தோஷங்கள் பிராணநிக்கிரகத்தினால் தகிக்கப்படுகின்றன." என்று கேட்கப்படுகின்றது. இதில் உபபத்தி (பொருத்தம்) வசிஷ்டரால்,

"यः प्राणपवनस्पन्दश्चित्तस्पन्दः स एव हि ।
प्राणस्पन्दक्षये यत्नः कर्तव्यो धीमतोच्चकैः ॥

பிராணவாயுவின் அசைவு எதுவோ அதுவே சித்தத்தின் அசைவாம். ஆதலால் புத்தியுள்ள உயர்ந்தவர்களால் பிராணனது அசைவு கெடுதலின்கண் முயற்சி செய்யத் தக்கதாம்." என்று காட்டப்பட்டுளது. மனது வாக்கு சக்ஷுமுதலிய இந்திரியங்களின் தேவதைகள் தத்தம் வியாபாரத்தை நிரந்தரம் செய்வோமென்னும் விரதத்தைக்கொண்டு சிரமவடிவமான மிருத்தியுவினால் விழுங்கப்பட்டனர். அந்த மிருத்தியு பிராணனைச் சார்வதில்லை. அதனால் நிரந்தரம் உச்வாச நிச்வாசங்களைச் செய்யும் பிராணன் களைக்கிறதில்லை. அப்போது விசாரித்துத் தேவதைகள் பிராணவடிவத்தில் புகுந்தனர். அத்தன்மைய இவ்வர்த்தம் வாஜஸனேயிகளால்,

"अयं वै नः श्रेष्ठः संचरंश्चासंचरंश्च न व्यथते अथो न रिष्यति हन्तास्यैव सर्वे रूपमसामेति । एतस्यैव सर्वे रूपमभवंस्तस्मादेत एतेनाऽऽख्यायन्ते प्राणाः ।

இதுவே (பிராணனே) நமக்குச் சிரேஷ்டமானது. எது சஞ்சரித்தும் சஞ்சரியாதிருந்தும் துன்புறுகிறதில்லை. நசிக்கிறதுமில்லை. இப்போது இதன் ரூபத்தினையே எல்லோரும் அடைவோமென்று அவர்கள் எல்லோரும் இதன் ரூபமேயானார்கள். ஆதலால் இப்பிராணன் (வாகாதி) கள் இதனால் (பிராணன் என்னும் பெயரால்) சொல்லப்படுகின்றன" என்று சுருதியினால் கூறுவர். ஆதலால் இந்திரியங்கட்குப் பிராண ரூபத்துவம் என்பது பிராணாதீனமான சேஷ்டையுடைமையாம். அதுவும் அந்தர்யாமிப் பிராஹ்மணத்தில் சூத்திராத்மப் பிரஸ்தாவத்தில்,

"वायुर्वै गौतम तत्सूत्रं वायुना वै गौतम सूत्रेणायं च लोकः परश्च लोकः सर्वाणि च भूतानि संदृब्धानि भवन्ति । तस्माद्वै गौतम पुरुषं प्रेतमाहुर्व्यस्रंसिषतास्याङ्गानीति । वायुना हि गौतम सूत्रेण संदृब्धानि भवन्ति ।

கௌதம! அச்சூத்திரம் வாயுவாம். கௌதம! வாயுவாகிய சூத்திரத்தால் இந்தலோகமும் பரலோகமும் சர்வபூதங்களும் செவ்வையாய்க் கோக்கப்பட்டன வாகின்றன. ஆதலால் கௌதம! புருஷனை இவனுடைய அங்கங்கள் வீழ்ந்தனவென்று பிரேதம் என்கிறார்கள். வாயுவாகிய சூத்திரத்தினாலேயே செவ்வையாய்க் கோக்கப்பட்டன வாகின்றன." என்று கேட்கப்படுகின்றது. பிராணமன அசைவுகளிரண்டற்கும் உடனிருத்தற்றன்மை யிருத்தலால் பிராண நிக்கிரகத்தில் மனது நிக்கிரகிக்கப்படுகின்றது. சங்கை:—உடன்அசைவு பொருத்தமானதன்று; சுழுத்தியில் பிராணன் சேஷ்டிப்பதாயினும் மனதிற்குச் சேஷ்டையின்மையால் எனின், (சமாதானம்:)—அன்று; விசேஷமாக ஒடுங்கிய தன்மையால் அப்போது மனதே யில்லாதிருத்தலின். சங்கை:—பிராணன் நசித்தபோது நாசிகையினால் சுவாசிக்கக்கடவன் என்பதுமூரண் பட்டதாகின்றது; ஏனெனின், பிராணன் நசித்தவனை மரித்தவனுக்குச் சுவாசத்தினை எங்குங் காணேம். சுவாசித்து ஜீவித்திருப்பவனுக்குப் பிராணக்ஷயமிருப்பதில்லை என்று கூறின் இவ்வாறு கூடாது; மிகுதியின்மையே இங்கு க்ஷயத்தன்மையாகச் சொல்லக் கருதியதாகலின். எப்படித் தோண்டுதல் வெட்டுதல் முதலியவற்றில் பிரவிருத்தித்தவனுக்கு அல்லது மலையில் ஏறுகிறவனுக்கு அல்லது விரைவாய் ஓடுகிறவனுக்கு எவ்வளவு சுவாசவேக முண்டாகிறதோ, அவ்வளவு நிற்பவனுக்கு அல்லது இருப்பவனுக்கு உண்டாகிறதில்லை. அவ்வாறு பிராணாயாமத் தேர்ச்சியுடைய அவனுக்கு அற்பசுவாசமுண்டாகிறது. இவ்வபிப்பிராயங்கொண்டே வேதத்தில்,

"भूत्वा तत्रायतप्राणः शनैरेव समुच्छ्वसेत् ।

அங்கு அடக்கப்பட்ட பிராணனுடையவனாய் மெல்லவே நன்றாய் உசுவசிப்பான்" என்று கேட்கப்படுகின்றது. [* எப்படித் துஷ்டக்

*[ ] இக்குறிக்குட்பட்ட வாக்கியங்கள் சில பிரதிகளிலிருக்கினும் மூலாபிப்பிராய விரோத மாதலால் உபேக்ஷிக்கத்தக்கனவாமென்பர்.

குதிரைகளோடு கூடிய இரதம் வழியை விட்டு எங்கேனும் கொண்டு போகப்படுகிறதோ, அது மறுபடியும் சாரதியினால் குதிரையைக் கயிற்றினால் திடமாய் இழுத்து வழிகளில் வைக்கப்படுகின்றதோ, அப்படி இந்திரியங்களால் வாசனை முதலியவற்றால் இங்குமங்கு மாகக் கொண்டுபோகப்படும் மனது பிராணனாகிய கயிற்றில் திடமாய்த் தரிக்கப்பட்டது தரிக்கப்படுகின்றது. "பிராணன்களைச் செவ்வையாய்ப் பிடித்து" என்று சொல்லப்பட்டதோ அங்கும் பிராணனைப் பிடிக்குமுறை வேறிடத்தில்,

"सव्याहृतिं सप्राणवां गायत्रीं शिरसा सह ।
त्रिः पठेदायतप्राणः प्राणायामः स उच्यते ॥
प्राणायामास्त्रयः प्रोक्ता रेचकपूरककुम्भकाः ।
उत्क्षिप्य वायुमाकाशं शून्यं कृत्वा निरात्मकम् ॥
शून्यभावेन युञ्जीत रेचकस्येति लक्षणम् ।
वक्त्रेणोत्पलनालेन तोयमाकर्षयेन्नरः ॥
एवं वायुर्ग्रहीतव्यः पूरकस्येति लक्षणम् ।
नोच्छ्वसन्निःश्वसेन्नैव न च गात्राणि चालयेत् ॥
एवं तावन्नियुञ्जीत कुम्भकस्येति लक्षणम् ॥

வியாகிருதியோடு கூடியதும் பிரணவத்தோடு கூடியதுமான காயத்திரியினைச் சிரசோடுகூடப் பிராணனை யடக்கியவனாய் மூன்றுமுறை படிக்கவேண்டும். அது பிராணாயாம மெனப்படும். பிராணாயாமங்கள் ரேசக பூரக கும்பகங்களென்று மூன்றாகச்சொல்லப்படுகின்றன. (சரீரத்தினுள்ளிருக்கும்)வாயுவை (வெளிப்படுத்துவதற்காக) எழுப்பி, சரீரத்தையும் ஆகாயத்தை வாயுவின்றியதாய்ச் சூநியமாக்கி, (சிறிதும் வாயுவைப் பிரவேசியாமல்) சூநியத்தன்மையாக அடக்க வேண்டும். இவ்வாறு ரேசகத்தின் லக்ஷணமாம். தாமரைத்தண்டினால் வாயினால் புருஷன் ஜலத்தினை இழுப்பதுபோல வாயுவை உட்கொள்ளவேண்டும். இவ்வாறு பூரகத்தின் லக்ஷணமாம். உச்வாசஞ் செய்யலாகாது. நிசுவாசஞ் செய்யலாகாது. அங்கங்களை

அசைக்கலாகாது. இப்படி அதுவரையில் அடக்குக. இவ்வாறு கும்பகத்தின் லக்ஷணமாம்.'' என்று கேட்கப்படுகின்றது.] கும்பகம் ஆந்தரம் பாகியமென்று இருவகையினதாம். அவ்விரண்டனையும் வசிஷ்டர்,

"अपानेऽस्तं गते प्राणो यावन्नाभ्युदितो हृदि ।
तावत्सा कुम्भकावस्था योगिभिर्यानुभूयते ॥
बहिरस्तं गते प्राणे यावन्नापान उद्गतः ।
तावत्पूर्णां समावस्था बहिष्ठं कुम्भकं विदुः ॥

அபானன் ஒடுங்கிப் பிராணன் எதுவரையில் இருதயத்தில் உதிக்கவில்லையோ, அதுவரையில் அக்கும்பகாவஸ்தை யோகிகளால் அநுபவிக்கப்படுகின்றது. வெளியில் பிராணன் ஒடுங்கி எதுவரையில் அபானன் உதயமாகவில்லையோ அதுவரையிலுள்ள பூர்ணமான சமாவஸ்தை எதுவோ, அதனை வெளிக்கும்பக மென்று அறிவர். அங்கு உச்சுவாசம் (சுவாசம்கொள்ளுதல்) உட்கும்பக விரோதியாம். நிச்சுவாசம் (சுவாசம்விடுதல்) வெளிக்கும்பக விரோதியாம். அங்கனை யசைத்தல் இரண்டன் விரோதியாம்; அஃதுள்ளபோது நிச்சுவாசம் உச்சுவாசமென்னு மிரண்டனுள் ஒன்று அவசியம் இருக்குமாகலின். பதஞ்சலிமுனிவரும், ஆசனத்தின்பின் ஆவதான பிராணாயாமத்தினை,

"तस्मिन्सति निःश्वासोच्छ्वासयोर्गतिविच्छेदः प्राणायामः ।

அஃதுளதாக நிச்சுவாசம் உச்சுவாசமிரண்டன் கதியைக்கெடுத்தல் பிராணாயாமமாம்'' என்று சூத்திரஞ் செய்திருக்கின்றனர். அப்படியனால் கும்பகத்தில் அவற்றின் கதியில்லையாயினும் ரேசக பூரகங்களில் உச்சுவாச நிச்சுவாசகதிகள் இருக்குமே யெனின் இரா; அதிக மாத்திரையப்பியாசத்தினால் சுபாவமாய்ச் சித்தித்துள்ளதான சமப்பிராணகதி கெடுதலால். அதே அப்பியாசத்தினை,

"बाह्याभ्यन्तरस्तम्भवृत्तिर्देशकालसंख्याभिः परिदृष्टो दीर्घः सूक्ष्मः ।

வெளிவிருத்தியாகிய ரேசகம், உள்விருத்தியாகிய பூரகம், ஸ்தம்பவிருத்தியாகிய கும்பகம் என்பவை தேசகால சங்கியைகளால் செவ்

வையாய்க் காணப்பட்டனவாய்த் தீர்க்கமும் சூக்ஷ்மமுமாம்." என்று சூத்திரிக்கின்றார். அவற்றுள், ஒவ்வொன்றும் தேசமுதலியவற்றால் பரீக்ஷிக்கவேண்டியதாம். அது வருமாறு:—சுபாவமாகச் சித்தித்துள்ள ரேசகத்தில் சுவாசம் இருதயத்தினின்று வெளிப்பட்டு நாசிநுனிக்கெதிரில் பன்னிரண்டங்குலபரியந்தத்தில் முடிகின்றது; அப்பியாசத்தினாலோ கிரமமாக நாபியினின்று அல்லது ஆதாரத்தினின்றும் வாயு வெளிப்படுகின்றது. இருபத்து நான்கங்குலபரியந்தத்தில் அல்லது முப்பத்திரண்டங்குல பரியந்தத்தில் முடிகின்றது. இங்கு ரேசகத்தில் பிரயத்தனம் மிகுதியாயுள்ளபோது நாபிமுதலிய இடங்களின் க்ஷோபத்தால் உள்ளே நிச்சயிக்கக்கூடும். வெளியிலோ சூக்ஷ்மமான பஞ்சினைப்பிடித்து அதனசைவால் நிச்சயிக்கவேண்டும். இது தேசபரீக்ஷையாம். ரேசககாலத்தில் பிரணவத்தின் ஆவிருத்திகள் பத்து இருபது முப்பது என்றல் முதலியன காலபரீக்ஷை. இந்தமாசத்தில் நாளொன்றற்குப் பத்து ரேசகங்கள், வருகிறமாசத்தில் இருபது, அதற்கடுத்த மாசத்தில் முப்பது என்றல் முதலியவற்றால் சங்கியா பரீக்ஷையாம். கூறியபடியான தேசகாலவிசிஷ்டங்களாகிய பிராணாயாமங்களால் ஒருதினத்தில் பத்து இருபது முப்பது என்றல் முதலியவற்றால் சங்கியா பரீக்ஷையாம். (சங்கியா=எண்) பூரகத்திலும் இவ்வாறு பொருத்திக்கொள்ளவேண்டும். கும்பகத்தில் தேசவியாப்தி விசேஷம் அறியப்படுகிறதில்லை; என்றாலும் காலசங்கியைகளின் வியாப்தி அறியவே படுகின்றன. எப்படி நெருக்கமுள்ளதான பஞ்சுத்திரள் விரிக்கப்படுவதாய்த் தீர்கமும், தனித்த (பிரிபட்ட) தன்மையால் சூக்ஷ்மமுமாகின்றதோ, அதுபோலப் பிராணனும் தேசகால சங்கியாதிக்கியத்தால் அப்பியசிக்கப்படுவதாய்த் தீர்க்கமும் இலக்ஷியிக்கக்கூடாமையால் சூக்ஷ்மமும் ஆகின்றது. ரேசகாதிமூன்றினும் வேறுவிதமானதனை,

"बाह्याभ्यन्तरविषयाक्षेपी चतुर्थः ।

வெளியுள் ரேசக பூரகங்களை அபேக்ஷியாததான கும்பகம் நாலாவதாம்." என்று சூத்திரிக்கின்றனர். சக்தியளவு எல்லாவாயுவினையும் நன்றாய் ரேசித்து, பின் செய்யப்படுவது வெளிக் கும்பக

மாம் சக்தியளவு வாயுவைப் பூரித்துப் பின் செய்யப்படுவதும் உட்கும்பகமாம். இவ்வாறு ரேசக பூரகங்களை ஆதரியாது கும்பக மாத்திரம் அப்பியசிக்கப்படுவது முந்திய மூன்றன் அபேக்ஷையால் நாலாவது ஆகின்றது. நித்திரை தந்திரைமுதலிய பிரபல தோஷத்தோடு கூடியவர்கட்கு ரேசகாதி மூன்றுமாம்; தோஷமின்றியவர்கட்கு நான்காவதாம் என்பது விவேகம். பிராணயாமத்தின் பயனை,

"ततः क्षीयते प्रकाशावरणम् ।

அதனால் சத்துவமாகிய பிரகாசத்தின் ஆவரணம் அதாவது நித்திரை சோம்பல் முதலியவற்றிற்கு ஏதுவான தமசு கெடுகின்றது." என்று சூத்திரிக்கின்றனர். வேறுபயனை,

"धारणासु योग्यता मनसः ।

மனதுக்குத் தாரணைகளில் யோக்கியதையுண்டாம்." என்று சூத்திரிக்கின்றனர்.

"देशबन्धश्चित्तस्य धारणा ।

சித்தத்தின் தேசபந்தம் தாரணையாம்" என்று சூத்திரித்தலால் மூலாதாரம், நாபிசக்கரம், இருதயம், புருவநடு, பிரஹ்மரந்திரம் முதலிய தேசவிசேஷங்களில் சித்தத்தினை நிறுத்துதல் தாரணையாம்,

"मनः संकल्पकं ध्यात्वा संक्षिप्याऽऽत्मनि बुद्धिमान् ।
धारयित्वा तथात्मानं धारणा परिकीर्तिता ॥

புத்திமான் சங்கற்பஞ்செய்வதான மனதை ஆத்மாவில் தியானித்துச் சுருக்கி, அவ்வாறே ஆத்மாவினைத் தரிக்கச்செய்யின் தாரணையென்று சொல்லப்படுகின்றது." என்று சுருதியுமுளது. பிராணயாமத்தினல் இராஜோகுணத்தினலாக்கப் படுவதான சஞ்சலத்தன்மையினின்றும், தமோகுணத்தினலாக்கப்படும் சோம்பல் முதலியவற்றினின்றும் விலக்கப்பட்ட மனது அந்தத்தாரணையில் தகுதியுள்ளதாகின்றது.

"प्राणायामदृढाभ्यासैर्युक्त्या च गुरुदत्तया ।

பிராணயாம திடாப்பியாசங்களாலும் குருவினல் உபதேசிக்கப்பட்ட யுக்தியினலும்" என்றவிடத்துள்ள யுக்தி சப்தத்தினல் யோகிகளிடத்திற் பிரசித்தமான சிரோரூப மேருவை யசைத்தல், நாடினியால்

உண்ணாக்கினை யழுத்தல், நாபிசக்கரத்தில், இருதயத்தில் ஜோதியை தியானித்தல், மறதியுண்டுபண்ணும் ஔஷதத்தினைச் சேவித்தல் என்னும் இவைபோல்வன கொள்ளப்படும்.

இவ்வாறு அத்தியாத்மவித்தை, சாது சங்கமம், வாசனாக்ஷயம், பிராண நிரோதம் என்னும் சித்தநாசோபாயங்கள் காட்டப்பட்டன.

இனி அதன் உபாயவடிவ சமாதியினைக் கூறுவாம்:—ஐந்து பூமியோடு கூடிய சித்தத்திற்குப் பூமி மூன்றனை விடுதலால் எஞ்சிய பூமி யிரண்டும் சமாதியாம். பூமிகள் யோகபாஷ்ய கர்த்தாவால்,

"क्षिप्तं मूढं विक्षिप्तमेकाग्रं निरुद्धमिति चित्तभूमयः ।

க்ஷிப்தம், மூடம், விக்ஷிப்தம், ஏகாக்கிரம், நிருத்தம் என்பன சித்த பூமிகள். ஆசுர சம்பத்தான லோகசாஸ்திர தேகவாசனைகளில் இருப்பதான சித்தம் க்ஷிப்தமாம். நித்திரை தந்திரை முதலியவற்றால் விழுங்கப்பட்டது மூடமாம். எப்போதாவது தியானத்தோடு கூடியதாய் க்ஷிப்தத்தினும் விசேஷமுடையது விக்ஷிப்தமாம். அவற்றுள், க்ஷிப்தம் மூடமிரண்டற்கும் சமாதி சங்கையேயில்லை. விக்ஷிப்தமாகிய சித்தத்திலோ விக்ஷேப முக்கிய வடிவ சமாதி யோகபக்ஷத்திலில்லை; விக்ஷேபத்தினுட்பட்ட தன்மையால் நெருப்பினுட்பட்ட விதைபோல் உடனே விநாசமாகின்றது. ஏது ஏகாக்கிரசித்தத்தில் உண்டான அர்த்தத்தினை விளக்குகின்றதோ, கர்மபந்தங்களான கிலேசங்களைக் கொடுக்கின்றதோ, நிரோதத்தினை அபிமுகமாக்குகின்றதோ, அது சம்பிரஞ்ஞாத யோகமென்று சொல்லப்படுகின்றது. சர்வவிருத்திகளும் நிரோதமாயின் அசம்பிரஞ்ஞாத சமாதியாம். அந்த சம்பிரஞ்ஞாதசமாதி பூமியான ஏகாக்கிரத் தன்மையினை,

"शान्तोदितौ तुल्यप्रत्ययौ चित्तस्यैकाग्रतापरिणामः ।

சென்றதான சாந்தமும் நிகழ்வதான உதிதமுமாகிய சமானப் பிரத்தியயங்கள் சித்தத்தின் ஏகாக்கிரதா பரிணாமமாம். அதாவது அதீதப் பிரத்தியயம் (சித்தவிருத்தி) எப்பொருளைக் கிரகிக்கின்றதோ அதனையே உதிதமும் கிரகிக்கவேண்டும். அது சமானப் பிரத்தியயங்களாம். அத்தன்மைய சித்தத்தின் பரிணாமம் ஏகாக்கிரதத் தன்மை யெனப்படுகின்றது." என்று சூத்திரிக்கின்றார். ஏகாக்கிரத் தன்மையின் அபிவிருத்தி லக்ஷணமான சமாதியினை,

"सर्वार्थतैकाग्रतयोः क्षयोदयौ चित्तस्य समाधिपरिणामः ।

சர்வார்த்தத்தன்மை ஏகாக்கிரத் தன்மைகளிரண்டின் க்ஷயமும் உதயமும் சித்தத்தின் சமாதியாகிய பரிணாமமாம்." என்று சூத்திரிக்கின்றார். இரஜோகுணத்தினால் அசைக்கப்படுகின்ற சித்தம் கிரமமாகச் சர்வபதார்த்தங்களையும் கிரகிக்கின்றது அந்த இரஜோகுணத்தினது நிரோதத்தின்பொருட்டுச் செய்யப்படுகின்ற யோகியின் பிரயத்தன விசேஷத்தினால் நாளுக்குநாள் சர்வார்த்தத்தன்மை குறைகின்றது; ஏகாக்கிரத்தன்மையும் உதிக்கின்றது. அத்தன்மையை சித்தத்தின் பரிணாமம் சமாதி என்று சொல்லப்படுகின்றது. அச்சமாதியின் எட்டங்கங்களில் இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் என்பவை பகிரங்க (புறவங்க) ங்களாம். அவற்றுள், * இயமங்களை,

"अहिंसासत्यास्तेयब्रह्मचर्यापरिग्रहा यमाः ।

அஹிம்ஸை, சத்தியம், அஸ்தேயம் (திருடாமை), பிரமசரியம், அபரிக்கிரகம் (சரீரநிர்வாகத்திற் கதிகமானபொருளைக் கொள்ளாமை) என்பன இயமங்கள்." என்று சூத்திரிக்கின்றனர். ஹிம்சை முதலிய நிஷித்தகர்மங்களினின்றும் யோகியினை அடக்(விலக்)குகின்றன என்பதனால் இயமங்கள் எனப்படும்,

"शौचसंतोषतपः स्वाध्यायेश्वरप्रणिधानानि नियमाः ।

சௌசம், சந்தோஷம், தபசு, ஸ்வாத்தியாயம் (வேதத்தின் தனது சாகையை ஓதுதல்), ஈசுவரப் பிரணிதானம் (சர்வகர்மங்களையும் ஈசுவரார்ப்பணஞ் செய்தல்) என்பவை நியமங்கள்." என்று நியமங்களைச் சூத்திரித்திருக்கின்றனர். பிறப்பிற்குக் காரணமான காமியதர்மங்களினின்றும் விலக்கி, மோக்ஷகாரணமான நிஷ்காமதர்மத்தில் நியமி(பிரேரி)க்கின்றன என்பதனால் நியமங்களெனப்படும். இயமநியமமிரண்டன் அநுஷ்டான விலக்ஷணத்தன் (வேற்று)மை,

---

* இயம நியமங்களின் லக்ஷண முதலியவற்றை விரிவாய் அறியவிரும்புவோர். ஹடயோகதீபிகையின் டிப்பணியிலும் அஷ்டாங்கயோக சூத்திரவுரையிலும் காண்க.

"यमान्कुर्वीत सततं न नित्यं नियमान्बुधः ।
यमान्पतत्यकुर्वाणो नियमान्केवलान्भजन् ॥
पतति नियमवान्यमेष्वसक्तो न तु यमवान्नियमालसोऽवसीदेत् ।
इति यमनियमौ समीक्ष्य बुद्ध्या यमबहुलेष्वनुसंदधीत बुद्धिम् ॥

அறிஞன் நித்தியம் இடைவிடாது இயமங்களை யநுஷ்டிக்கவேண்டும் (அவற்றை யநுஷ்டியாது) நியமங்களை யநுஷ்டிக்கலாகாது. (ஏனெனின்,) இயமங்களைச் செய்யாதவனைப் நியமங்களை மாத்திரம் அநுஷ்டித்து விழுகின்றான். நியமமுடையவன் இயமங்களில் பற்றுடைவனும் விழுகின்றான். இயமமுடையவன் நியமத்திற் சோம்பலுடையவனுக் கெடான். இவ்வாறு புத்தியினால் இயம நியமங்களை நன்றாய் ஆய்ந்து, இயம மிகுதியின் கண்ணே புத்தியை அநுசந்திக்க வேண்டும்." என்று ஸ்மிருதியில் கூறப்பட்டுளது. இயம நியமங்களின் பயன்களை,

"तत्सन्निधौ वैरत्यागः ॥ क्रियाफलाश्रयित्वं ॥ सर्वरत्नोपस्थानम् ॥ वीर्यलाभः ॥ जन्मकथंतासंबोधः ॥ जननादिभयाभावः शौचात्स्वाङ्गजुगुप्सा परैरसंसर्गः सत्त्वशुद्धिसौमनस्यैकाग्र्येन्द्रियजयात्मदर्शनयोग्यत्वानि च भवन्ति ॥ संतोषादनुत्तमः सुखलाभः ॥ कायेन्द्रियबुद्धिशुद्धिरशुद्धिक्षयस्तपसः ॥ स्वाध्यायादिष्टदेवतासंप्रयोगः ॥ समाधिसिद्धिरीश्वरप्रणिधानात् ॥

க. அஹிம்சை நிலைத்தபோது அவன்சந்நிதியில் வைரமுள்ள பிராணிகள் தம் வைரத்தைவிடும். உ. சத்தியம் நிலைத்தபோது கிரியா பலத்தினை அழைக்குந் தன்மை (தன்வாயினாலேயே ஜனங்களுண்டாகச் செய்யுந் தன்மை) யாம். ங. அஸ்தேயம் நிலைத்தபோது சர்வரத்நங்களும் சமீபத்திலிருப்பனவாம். ச. பிரஹ்மசரியத்தால் வீரியலாபமாம். ரு. அபரிக்கிரகத்தால் பூர்வஜன்மம் எத்தன்மையது என்னும் உணர்ச்சியுண்டாம்; ஜனனமுதலியவற்றின் பயமின்மையுமாம். க. சௌசத்தினால் தனது அங்கங்களில் அருவருப்பும், பிறரோடு சம்பந்தமில்லாமையு முண்டாம். அந்தக்கரண சுத்தி, நன்மனமுடைமை, ஏகாக்கிரத்துவம், இந்திரியஜயம் ஆத்ம தரிசனம் என்பவற்றிற்குத் தகுதியுடைமை வாய்க்கும். உ. சந்தோ

ஷத்தினால் இணையற்ற சுகலாபமாம். ௩. தபசினால் காயேந்திரிய புத்திகளின் சுத்தி பாவக்ஷய மென்பவை யுண்டாம். ௪, சுவாத்தியாயத்தினால் இஷ்டதேவதையின் (தரிசனாதி) சம்பிரயோகமுண்டாம். ௫. ஈசுவரப் பிரணிதானத்தால் சமாதி சித்தியாம்.'' என்று சூத்திரிக்கின்றார். ஆசனப் பிராணாயாமங்கள் விரித்துரைக்கப்பட்டன.

"स्वविषयासंप्रयोगे चित्तस्य स्वरूपानुकार इवेन्द्रियाणां प्रत्याहारः ॥

(சப்தாதி) தத்தம் விஷயங்களிற் செலுத்தப்படாதபோது (சுரோத்திராதி) இந்திரியங்கள் சித்தத்தின் ஸ்வரூபத்தினைத் தழுவியது போன்றிருத்தல் பிரதிகாரமாம்'' என்று பிரத்தியாகாரத்தினைச் சூத்திரிக்கின்றார்.

"शब्दादिविषयान्पञ्च मनश्चैवातिचञ्चलम् ।
चिन्तयेदात्मनो रश्मीन्प्रत्याहारः स उच्यते ॥

சப்தாதி விஷயங்களுடையனவாகிய சுரோத்திராதி இந்திரியங்கள் ஐந்தும் மனதும் மிகச் சஞ்சலமுள்ளனவாம். இவ்வாறையும் (அதாத்மவடிவ சப்தாதிகளினின்றும் திருப்புதலாகிய) ஆத்மாவின் கிரணங்களாகச் சிந்தித்தல் பிரத்தியாகாரமாம்'' என்று சுருதியுமுளது. பிரத்தியாகாரத்தின் பயன்,

"ततः परमा वश्यतेन्द्रियाणाम् ।

அதனால் இந்திரியங்களின் மேலான வசியத்துவமுண்டாம்'' என்று சூத்திரிக்கின்றார். தாரணாதியானசமாதிகளை மூன்று சூத்திரங்களால்,

"देशबन्धश्चित्तस्य धारणा ॥ तत्र प्रत्यैकतानता ध्यानम् ॥ तदेवार्थशून्यमिव समाधिः ॥

சித்தத்தின் தேசபந்தனம் தாரணை. அதில் பிரத்தியயத்தின் ஒரே தொடர்ச்சியான தன்மை தியானம். அதுவே அர்த்தமாத்திரத்தை விளக்குவதாய் ஸ்வரூப சூனியம் போன்றிருப்பது சமாதி.'' என்று சூத்திரிக்கின்றனர். (இம்மூன்றும் முன்னுரைக்கப்பட்டுள்ளன.) ஆதாராதி தேசங்கள் முன்சொல்லப்பட்டுள. வேறு தேசம் சுருதியில்,

"मनः संकल्पकं ध्यात्वा संक्षिप्यात्मनि बुद्धिमान् ।
धारयित्वा तथात्मानं धारणा परिकीर्तिता ॥

எல்லாவஸ்துக்களையும் சங்கற்பிப்பதான மனதைத் தியானித்து; ஆத்மாவில் சம்க்ஷேபித்து (அது ஆத்மாவினையே சங்கற்பிக்குக; பிறிதொன்றனைச் சங்கற்பியாதிருக்குக என்னும் இத்தன்மைய பிரயத்தனத்தைச் செய்து) அவ்வாறே ஆத்மாவினைத் தரித்தலால் தாரணை என்று சொல்லப்படுகின்றது" என்று கேட்கப்படுகின்றது; பிரத்தியயத்தின் ஓரே தொடர்ச்சியான தன்மையாவது தத்துவமொன்றன் விஷயமான பிரவாகமாம். அதுவும் விட்டு விட்டு உண்டாவது, விடாது தொடர்ந்திருப்பது என்று இரண்டுவிதமாம். அவ்விரண்டும் கிரமமாகத் தியானமும் சமாதியுமாம். அவ்விரண்டும் சர்வாநுபவ யோகியால்,

"चित्तैकाग्र्याद्यतो ज्ञानमुक्तं समुपजायते ।
तत्साधनमतो ध्यानं यथावदुपदिश्यते ॥
विलाप्य विकृतिं कृत्स्नां संभवव्यत्ययक्रमात् ।
परिशिष्टं च सन्मात्रं चिदानन्दं विचिन्तयेत् ॥

எந்தச் சித்த ஏகாக்கிரத் தன்மையால் கூறிய ஞானம் செவ்வையாய் உண்டாகுமோ, அதன் சாதனமாகிய தியானம் இனி உள்ளவாறு உபதேசிக்கப்படுகின்றது:—விகிருதியினை (பிரபஞ்சத்தினை) முழுவதும் உற்பத்தி லயக்கிரமமாக ஒடுக்கி, எஞ்சிய சன்மாத்திரமாகிய சிதாநந்தத்தினை விசேஷமாய்ச் சிந்திக்கவேண்டும்." என்றும்,

"ब्रह्माकारमनोवृत्तिप्रवाहोऽहंकृतिं विना ।
संप्रज्ञातसमाधिः स्याद्ध्यानाभ्यासप्रकर्षतः ॥

தியானப்பியாச மிகுதியால் அகங்காரமின்றி யுண்டாம் பிரமாகார மனோவிருத்திப் பிரவாகம் சம்பிரஞ்ஞாத சமாதியாம்" என்றும் காட்டப்பட்டுளது. அதனைப் பகவத்பாதர்கள் (ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள்)



"दृशिस्वरूपं गगनोपमं परं सकृद्विभातं त्वजमेकमक्षरम् ।
अलेपकं सर्वगतं यदद्वयं तदेव चाहं सततं विमुक्त ओम् ॥

दृशिस्तु शुद्धोऽहमविक्रियात्मको न मेऽस्ति कश्चिद्विषयः स्वभावतः ।
पुरस्तिरश्चोर्ध्वमधश्च सर्वतः संपूर्णभूमा त्वज आत्मनि स्थितः ॥
अजोऽमरश्चैव तथाऽजरोऽमृतः स्वयंप्रभः सर्वगतोऽहमद्वयः ।
न कारणं कार्यमतीव निर्मलः सदैव तृप्तश्च ततो विमुक्त ओम् ॥

திருக்ஸ்வரூபமும், ஆகாயமொத்ததும், பரமும், ஒருமுறை விளங்கியதும், அஜமும், ஏகமும், அக்ஷரமும, பற்றின்றியதும், எல்லாவற்றினிருப்பதும், அத்வயமும் எதுவோ, அதுவே எப்போதும் விமுக்தனை யான். ஓம். அவிக்கிரிய வடிவினதும் சுத்தமுமான திருக்கு யான். எனக்குச் சுபாவமாக ஓர் விஷயமு மில்லை. முன்னும் குருக்கும் மேலும் கீழும் எப்புறத்துமாகச் சம்பூரணமாக பூமா (பிரஹ்மம்), அஜன், ஆத்மாவில் (தன்னில்) நிலைத்துள்ளவன். அஜன், அமரன், அஜரன், அமிருதன், சுவயம் பிரகாசன், எல்லாவற்றினு மிருப்பவன், அத்வயன் யான். காரணமும் காரியமல்லன்; மிகவுமே நிர்மலன்; எப்போதுமே திருப்தன்; ஆதலால் விமுக்தன். ஓம்." என்று உதாகரித்திருக்கின்றனர். சங்கை:—சம்பிரஞ்ஞாத சமாதி அங்கியாம். அது எப்படித் தியானத்தின் பின் உண்டாவதான சமாதியாகிய எட்டாவது அங்கத்தின் ஸ்தானத்தில் சொல்லப்பட்டுளதெனின், இது தோஷமாகாது; அத்தியந்த பேதமின்மையால். எப்படி வேதத்தினை ஓதுகின்ற மாணவகன் பதத்திற்குப் பதம் வழுவி, மறுபடியும் மறுபடியும் செய்கின்றானே, வேதமோதினவன் சாவதானமாய்த் தவறுகிறதில்லையோ; ஓதுவிப்பவன் கவனமின்றித் தூக்கமயக்கத்தோடு சொல்லினும் தவறுகிறதில்லையோ, அதுபோல விஷய மொன்றாயிருக்கினும் பரிபாக தாரதம்மியத்தினால் தியானம் சமாதி சம்பிரஞ்ஞாதம் என்பவற்றின் அவாந்தர பேதம் அறியத்தக்கதாம். தாரணைதி மூன்றும் மனோவிஷயமாதலின் சம்பிரஞ்ஞாதத்தில் அந்தரங்கம்; இயமமுதலிய ஐந்தும் பகிரங்கமாம். இதனைப் பதஞ்சலியார் "त्रयमन्तरङ्गं पूर्वेभ्यः । மூன்றும் முந்தியவைகளைவிட அந்தரங்கமாம்." என்று சூத்திரிக்கின்றார். ஆதலால் யாதேனுமோர் புண்ணியத்தினால் அந்தரங்கம் முதலில் கிடைத்ததாயின், பகிரங்கத்தினைப் பெறுவதற்காக மிகப்பிரயாசம் செய்யவேண்டியதில்லை. பதஞ்சலியாரால் பௌதிகம், பூதம், தன்

மாத்திரை, இந்திரியம், அகங்காரமுதலிய விஷயமான சம்பிரஞ்ஞாத சவிகற்ப சமாதிகள் வெகுவிதமாக விரிக்கப்பட்டுள வெனினும், அவை அந்தர்தானம் (பிறர் காணாது மறைதல்) முதலிய சித்திகட் கேதுவாந் தன்மையால முக்ககமேதுவான சமாதியின் விரோதிகளாதலால் அவை எம்மால் ஆதரம் செய்யப்படுகிறதில்லை. அவ்வாறே அவர்,

"ते समाधावुपसर्गा व्युत्थाने सिद्धयः ॥

அவைகள் சமாதியில் விக்கினங்களாம். விழிப்பில் சித்திகளாம்." என்றும்,

"स्थान्युपमंत्रणे सङ्गस्मयाकरणं पुनरनिष्टप्रसंगात् ॥

தேவர்கள் அழைக்குங்காலத்தில் பற்றும் வியத்தலும் செய்யலாகாது; மறுபடியும் அநிஷ்டம் நேருமாகலின்." என்றும் சூத்திரிக்கின்றனர். உத்தாலகர் தேவர்களால் அழைக்கப் பட்டவராயினும், தேவர்களை அலக்ஷியஞ்செய்து நிர்விகற்ப சமாதியினையே செய்தார் என்று சொல்லப்படுகின்றது. பிரசிநோத்தரங்களாலும் இவ்வாறே அறியப்படுகின்றது:—

श्रीरामः "जीवन्मुक्तशरीराणां कथमात्मविदां वर । शक्तयो नेह दृश्यन्ते आकाशगमनादिकाः ॥" वासिष्ठ ॥ "अनात्मविदमुक्तोऽपि नभोविहरणादिकम् । अणिमाद्यष्टसिद्धीनां सिद्धिजालानि वाञ्छति ॥"

ஸ்ரீ ராமர்:—"ஆத்மஞானிகளுள் சிரேஷ்டரே! ஜீவன்முக்த சரீரிகட்கு ஆகாசகமன முதலிய சக்திகள் இங்கு ஏன் காணப்படுகிறதில்லை." வசிஷ்டர்:—"அநாத்மாவை யுணராத அமுக்தன்றான் ஆகாயத்திற் செல்லுதல் முதலியவற்றையும் அணிமாதி அஷ்டசித்திகளின் சித்திக்கூட்டங்களையும் விரும்புவான்."

"द्रव्यमन्त्रक्रियाकालशक्त्याऽऽप्नोत्येव राघव ।
नात्मज्ञस्यैष विषय आत्मज्ञो ह्यात्ममात्रदृक् ॥
आत्मनात्मनि संतृप्तो नाविद्यामनुधावति ।
ये केचन जगद्भावास्तानविद्यामयान्विदुः ॥

कथं तेषु किलात्मज्ञस्त्यक्ताविद्यो निमज्जति ।
द्रव्यमन्त्रक्रियाकालशक्तयः साधुसिद्धिदाः ॥
परमात्मपदप्राप्तौ नोपकुर्वन्ति काश्चन ।
सर्वेच्छाजालसंशान्तावात्मलाभोदयो हि यः ॥
स कथं सिद्धिवाञ्छायां मग्नचित्तेन लभ्यते ॥

இராகவ! திரவியம் மந்திரம் கிரியை காலமென்பவற்றின் சக்தியினால் அடைபவே செய்கின்றான். ஆத்மஞானிக்கு இதுவிஷயமன்று. ஆத்மஞானி ஆத்மாவை மாத்திரம் காண்பவனாவன். ஆத்மாவினால் ஆத்மாவில் நன்றாய்த் திருப்தியடைந்தவன. அவித்தையினைப் பின்பற்றி ஓடான். எந்தெந்த ஜகத்பதார்த்தங்களுளவோ அவற்றை அவித்தியாமயங்களென்று அறிவர். அவற்றில் எப்படி அவித்தையினை யொழித்த ஆத்மஞானி அழுந்துவான்? திரவியமந்திரக்கிரியா காலசக்திகள் நல்ல சித்திகளைத் தருவனவாம். அவை பரமாத்மப் பிராப்தியில் உபகரிக்கமாட்டா. சர்வ இச்சைக் கூட்டங்களும் செவ்வையா யொடுங்கிய விடத்தில் உண்டாகும் ஆத்மலாபோதயம் எதுவோ, அது எப்படிச் சித்திவிருப்பத்தில் மூழ்கிய சித்தத்தினால் அடையப்படும்" என்பதும்,

"न केचन जगद्भावास्तत्त्वज्ञं रञ्जयन्त्यमी ।
नागरं नगरीकान्तं कुग्रामललना इव ॥

நகரவாசி ஸ்திரீயின் காந்தனாகிய நகரத்தானைக் குக்கிராமஸ்திரீ இரஞ்சிக்கச் செய்யாததுபோல, தத்துவ முணர்ந்தவனை இச்சகத் பதார்த்தங்கள் எவையும் இரஞ்சிக்கச் செய்யா." என்பது,

"अपिशीतरुचावर्के सुतीक्ष्णे चन्दुमण्डले ।
अप्यधः प्रसरत्यग्नौ जीवन्मुक्तो न विस्मयी ॥
चिदात्मन इमा इत्थं प्रस्फुरन्तीह शक्तयः ।
इत्यस्याऽऽश्चर्यजालेषु नाभ्युदेति कुतूहलम् ॥

சூரியன் சீதகிரண முடையதாயினும், சந்திரமண்டலம் நல்ல தீக்ஷண்யமுடையதாயினும், அக்கினி கீழ்நோக்கி எரிவதாயினும், ஜீவன்

முக்தன் ஆச்சரிய முடையவனுகான். சிதாத்மாவின் சக்திகள் இங்கு இவ்வாறு ஸ்புரிக்கின்றன என்று இவனுக்கு ஆச்சரிய கூட்டங்களில் குதூகலம் உண்டாகிறதில்லை."

"यस्तु वा भावितात्माऽपि सिद्धिजालानि वाञ्छति ।
स सिद्धिसाधकैर्द्रव्यैस्तानि साधयति क्रमात् ॥

ஆத்மபாவனை யுடையவனுயினும் எவன் சித்தி ஜாலங்களை விரும்புகிருனே, அவன் சித்தியைச் சாதிக்கும் திரவியங்களால் கிரமமாக அவற்றைச் சாதிக்கின்ருன்." என்பதுமாம். ஆத்மவிஷயமான சம்பிரஞ்ஞாத சமாதியோ வாசனுக்ஷயத்திற்கும் நிரோதசக்திக்கும் ஏதுவாம். ஆகலால் இதில் எம்மால் ஆதரம்செய்யப்பட்டது. இனிப் பஞ்சபூமிவடிவ நிரோத சமாதி நிரூபிக்கப்படுகின்றது. அந் நிரோதத்தினை "எழுதற் சம்ஸ்காரத்தின் அடக்கமும் நிரோதசம்ஸ்காரத்தின் ஆவிர்ப்பாவமுமான நிரோதலக்ஷண சித்தசம்பந்தமுள்ளது நிரோதபரிணாமமாம்." என்று சூத்திரிக்கின்றனர். எழுதற் சம்ஸ்காரங்கள் சமாதிவிரோதிகளாம். அவை உத்தாலகாது சமாதியில் உதாகரிக்கப்பட்டுள:—

"कदाहं त्यक्तमनने पदे परमपावने ।
चिरं विश्रान्तिमेष्यामि मेरुशृङ्ग इवाम्बुदः ॥
इति चिन्तापरवशो बलादुद्दालको द्विजः ।
पुनः पुनस्तूपविश्य ध्यानाभ्यासं चकार ह ॥
विषयैर्नीयमाने तु चित्ते मर्कटचञ्चले ।
न स लेभे समाधानप्रतिष्ठां प्रीतिदायिनीम् ॥
कदाचिद् बाह्यसंस्पर्शपरित्यागादनन्तरम् ।
तस्यागच्छच्चित्तकपिरान्तरस्पर्शसंचयान् ॥
कदाचिदान्तरस्पर्शाद्बाह्यं विषयमाददे ।
तस्योड्डीय मनो याति कदाचित्त्रस्तपक्षिवत् ॥

कदाचिदुदितार्काभं तेजः पश्यति विस्तृतम् ।
कदाचित्केवलं व्योम कदाचिन्निबिडं तमः ॥
आगच्छतो यथाकामं प्रतिभासान्पुनः पुनः ।
अच्छिनन्मनस शूरः खड्गेनेव रणे रिपून् ॥
विकल्पौघे समालीने सोऽपश्यद्धृदयाम्बरे ।
तमश्छन्नविवेकार्कं लोलकज्जलमेचकम् ॥
तमप्युत्सादयामास सम्यग्ज्ञानविवस्वता ।
तमस्युपरते स्वान्ते तेजःपुञ्जं ददर्श सः ॥
तल्लुलाव स्थलाब्जानां वनं बाल इव द्विपः ।
तेजस्युपरते तस्य घूर्णमानं मनो मुनेः ॥
निशाब्जवदगान्निद्रां तामप्याशु लुलाव सः ।
निद्राव्यपगमे तस्य व्योमसंवित्समुद्ययौ ॥
व्योमसंविदि नष्टायां मूढं तस्याभवन्मनः ।
मोहमप्येष मनसस्तं ममार्ज महाशयः ॥
ततस्तेजस्तमोनिद्रामोहादिपरिवर्जिताम् ।
कामप्यवस्थामासाद्य विशश्राम मनः क्षणम् ॥

மனனம் ஒழிந்த பரம் பாவனமாகிய பதத்தில் மேருவின் சிகரத்தில் மேகம்போல எப்போது நீண்டகாலம் விசிராந்தியை அடைவேன் என்னும் சிந்தையின் பரவசராய் உத்தாலகரான பிராஹ்மணர் மறுபடியும் மறுபடியும் உட்கார்ந்து தியானப்பியாசம் செய்தனர். குரங்குபோல் சஞ்சலமான மனது விஷயங்களால் கொண்டுபோகப் பட்டபோது, அவர் பிரீதியைத் தருவதான சமாதானத்தின் நிலைப்பை அடையார். ஒருகால் வெளிவிஷயங்களை விட்டுப் பின் அவரது சித்தமாகிய குரங்கு உள் விஷயங்களில் வரும். ஒருகால் உள்விஷயத்தினின்றும் வெளிவிஷயத்தினைக் கொள்ளும். ஒருகால் அவர் மனம் பயமடைந்த பக்ஷிபோல் பறந்துசெல்லும். ஒருகால் உதயமான சூரியனைப்போன்ற விஸ்தாரமான தேஜஸைப் பார்க்கும்

ஒருகால் கேவலம் ஆகாயத்தையும், ஒருகால் நெருங்கிய இருளையும், மறுபடியும் மறுபடியும் இச்சையின்படிவருகின்ற தோற்றங்களையும் பார்க்கும். அவற்றைச் சூரன் யுத்தத்தில் சத்துருக்களை வாளாற் சேதிப்பதுபோல் மனதினால் சேதித்தார். விகற்பக்கூட்டங்கள் செவ்வையாக்கெடவே அவர் இருதயாகாசத்தில் அசைகின்றமை போன்ற கருமையானதாய் விவேக சூரியனை மறைத்துள்ள இருளினைக் கண்டார். அதனையும் நல்லஞானமாகிய சூரியனாற்கெடுத்தார். தமசு நீங்கிய உள்ளத்தில் தேஜஸின் கூட்டத்தினைக் கண்டார் அதனையும் நீலத்தாமரையின் வனத்தை யானைக்கன்றுபோல் சிதைத்தார். தேஜசு ஒடுங்கியபோது அம்முனியின் சுழல்கின்ற மனது இரவில் தாமரைபோல் நித்திரையை யடைந்தது. அதனையும் அவர் விரைவில் கெடுத்தார். நித்திரை நீங்க அவருக்கு ஆகாய சம்வித்து (ஞானம்) உதித்தது. ஆகாய சம்வித்து நஷ்டமாக அவர் மனது மூடமாயிற்று. இப்பெருமன முடையவர் மனதின் அந்த மோகத்தினையுந் துடைத்தார். அதன்பின் ஒளி இருள் நித்திரை மோகம் முதலியவை நீங்கியதான நிலையை யடைந்து மனது கணப்போது விசிராந்தியடைந்தது.” என்பதாம். இங்க எழுதற் சம்ஸ்காரங்கள் நிரோதஹேதுவான யோகியின் பிரயத்தனத்தால் நாடோறும் கணந்தோறும் அடங்குகின்றன. அவற்றின் விரோதிகளான நிரோதசம்ஸ்காரங்கள் வெளிப்படுகின்றன. அவ்வாறாகவே ஒவ்வொருகணத்திலும் சித்தம் நிரோதத்தினைப் பின்பற்றுகின்றது. இத்தன்மைய இது சித்தத்தின் நிரோதபரிணாம மாகின்றது. சங்கை:—

“प्रतिक्षणपरिणामिनो हि भावा ऋते चितिशक्तेः ।

சிற்சக்தியொழிந்த பதார்த்தங்கள் கணந்தோறும் பரிணாமமுடையனவேயாம்.” என்னும் நியாயத்தால் சித்தத்திற்கு எப்போதும் பரிணாமப் பிரவாகம் சொல்லவேண்டுமெனின், (சமாதானம்:—) சரிதான். அங்கு எழுந்த சித்தத்தின் விருத்திப்பிரவாகம் வெளிப்படையாம். நிரோதிக்கப்பட்ட சித்தத்திற்கோ எவ்வாறு மென்றாசங்கித்து, உத்தரத்தினை,

“ततः प्रशान्तवाहिता संस्कारात् ।

அதன்பின் மிகவொடுங்கிய விருத்திப் பிரவாகத்தன்மை சம்ஸ்காரத்தினாலாம்.” என்று சூத்திரிக்கின்றார். எப்படிச் சமித்து நெய் என்னும் ஆகுதியைப் போடுங்கால், அக்கினி மேல் மேல் வளர்ந்து பிரஜ்வலிக் (எரி) கின்றதோ, சமித்து முதலியன குறைந்தபோது முதல்க்ஷணம் சிறிது ஒடுங்குகின்றதோ, பிந்திய பிந்திய கணங்களில் சாந்தி (ஒடுக்கம்) அதிகரிக்கின்றதோ, அப்படி நிரோதிக்கப்பட்ட சித்தத்திற்கு மேலும்மேலும் அதிகமான ஒடுக்கம் பிரவகிக்(தொடர்) கிறது. அங்கு முந்திய முந்திய ஒடுக்கத்தினாலுண்டான சம்ஸ்காரமே பிந்திய பிந்திய ஒடுக்கத்திற்குக் காரணமாம். இப்படிப் பிரவாகித்தன்மையைப் பகவான்,

“यदा विनियतं चित्तमात्मन्येवावतिष्ठते ।
निःस्पृहः सर्वकामेभ्यो युक्त इत्युच्यते तदा ॥
यथा दीपो निवातस्थो नेङ्गते सोपमा स्मृता ।
योगिनो यतचित्तस्य युञ्जतो योगमात्मनः ॥
यत्रोपरमते चित्तं निरुद्धं योगसेवया ।
यत्र चैवात्मनात्मानं पश्यन्नात्मनि तुष्यति ॥
सुखमात्यन्तिकं यत्तद्बुद्धिग्राह्यमतीन्द्रियम् ।
वेत्ति यत्र न चैवायं स्थितश्चलति तत्त्वतः ॥
यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।
यस्मिन्स्थितो न दुःखेन गुरुणाऽपि विचाल्यते ॥
तं विद्याद्दुःखसंयोगवियोगं योगसंज्ञितम् ।
स निश्चयेन योक्तव्यो योगोऽनिर्विण्णचेतसा ॥

எப்போது விசேஷமாய் அடக்கிய சித்தம் ஆத்மாவிலேயே நிற்கின்றதோ, அப்போது சர்வ காமங்களினின்றும் ஆசையொழிந்தவனை யோகமடைந்தவன் என்று சொல்லப்படுகின்றான். எப்படிக் காற்றில்லாத விடத்திலுள்ள தீபமானது அசைகிறதில்லையோ, அது ஆத்மாவின் யோகத்தினைப் பழகுகின்ற அடங்கிய சித்தமுள்ள

யோகிக்கு உவமையாகக் கருதப்பட்டுள்ளது. எதில் யோகசேவையினால் சித்தம் நிரோதிக்கப்பட்டதாய் ஒடுங்குகின்றதோ, ஆத்மாவினால் ஆத்மாவைக் கண்டு ஆத்மாவில் சந்தோஷிக்கின்றானோ, இந்திரியங்கட்கெட்டாததும் புத்தியினால் கிரகிக்கத்தக்கதும் எதுவோ அந்த ஆத்தியந்திகமான சுகத்தினை எதில் அறிகின்றானோ, எதில் இவன் நின்று தத்துவத்தினின்று சலிக்கவேமாட்டானோ, எதனையடைந்து, அதனின் மேலானதாக வேறுலாபத்தினைக் கருதானோ, எதில் நிலைத்தவனைப் பெருத்த துக்கத்தினாலும் சலிக்கப்படானோ அதனைத் துக்கசையோகத்தின் வியோகவடிவ யோகப் பெயரினதாக அறிக. அந்த யோகம் வியாகுலமின்றிய சித்தமுடையவனால் நிச்சயமாக அப்பியசிக்க வேண்டியதாம்.'' என்று மிக வெளிப்படையாக உதாகரித்திருக்கின்றனர். நிரோத சமாதியின் சாதனத்தினை,

"विरामप्रत्ययाभ्यासपूर्वकः संस्कारशेषोऽन्यः ॥

விராமப் பிரத்தியயாப் பியாசபூர்வகமான சம்ஸ்காரசேஷம் மற்றையதாம்'' என்று சூத்திரித்திருக்கின்றார். விராமமாவது விருத்தியின் ஒடுக்கம்; அதன் பிரத்தியயமாவது காரணம்; அதாவது விருத்தி, யொடுக்கத்தின் பொருட்டதான புருஷமுயற்சி; அதன் அப்பியாசமாவது மறுபடியும் மறுபடியுமாகச் சம்பாதித்தல்; அதன் பூர்வகமான அதாவது அதனாலுண்டாகியதான சம்ஸ்காரசேஷம் (இடையின்றிய சென்றசூத்திரத்தில் சம்பிரஞ்ஞாத சமாதி சொல்லப்பட்டமையால் அதனின் வேறானதான அசம்பிரஞ்ஞாத சமாதி) மற்றையதாம். அங்கு விருத்தியின்றியதான சித்தஸ்வரூபம் இலக்ஷியித்தற்கரியதாகலின் சித்தம் சம்ஸ்காரவடிவமாக மிஞ்சுகின்றது. விராமப் பிரத்தியபத்தினாலுண்டாகுந் தன்மையினைப் பகவான்,

''संकल्पप्रभवान्कामांस्त्यक्त्वा सर्वानशेषतः ।
मनसैवेन्द्रियग्रामं विनियम्य समन्ततः ॥
शनैः शनैरुपरमेद्बुद्ध्या धृतिगृहीतया ।
आत्मसंस्थं मनः कृत्वा न किंचिदपि चिन्तयेत् ॥
यतो यतो निश्चरति मनश्चञ्चलमस्थिरम् ।
ततस्ततो नियम्यैतदात्मन्येव वशं नयेत् ॥

சங்கற்பத்தாற் பிறப்பனவாகிய காமங்களெல்லாவற்றையும் அடியோடுவிட்டு, இந்திரியசமூகத்தினை மனதினாலேயே எப்புறத்துமாக நன்றாயடக்கி, தைரியத்தினைக் கொண்டமனதைப் புத்தியினால், மெல்ல மெல்ல ஒடுக்கவேண்டும். மனதை ஆத்மாவில் செவ்வையாய் நிலைத்ததாக்கி, எதனையும் சிந்திக்கலாகாது. எதெதனால் மனது சஞ்சலமுடையதாய் ஸ்திரமின்றிச் செல்லுகின்றதோ, அதனதனினின்றும் அடக்கி, அதனை ஆத்மாவினிடத்திலேயே வசமுடையதாகச் செலுத்தவேண்டும்.'' என்று வெளிப்படையாகக் கூறுகின்றார். காமிக்க (விரும்ப) ப்படுவனவாகிய மாலை சந்தனம் ஸ்திரீ புத்திரன் மித்திரன் வீடு நிலம் முதலான, மோக்ஷசாஸ்திரத் தேர்ச்சியுள்ள விவேகிகளிடத்தில் பிரசித்தமாயுள்ள வெகுதோஷங்களோடு கூடியனவாயினும், அநாதியவித்தையின் வசத்தால் அத்தோஷங்களை மறைத்து, அவ்விஷயங்களில் நன்மையைக் கற்பிக்கின்றன. அந்தச் சங்கற்பத்தினால் 'இஃது எனக்குண்டாகுக' என்னும் இத்தன்மைய வடிவினவாகிய காமங்கள் உண்டாகின்றன. அவ்வாறே ஸ்மிருதியும்,

"संकल्पमूलः कामो वै यज्ञाः संकल्पसंभवाः ।
काम जानामि ते मूलं संकल्पात्किल जायसे ।
न त्वां संकल्पयिष्यामि समूलस्त्वं विनङ्क्ष्यसि ।

சங்கற்பத்தினை மூலமாகவுடையது காமம். யஞ்ஞங்கள் சங்கற்ப சம்பவங்களாம். காம! உனது மூலத்தையறிவேன். சங்கற்பத்தினின்றன்றோ உண்டாகிறாய்; உன்னைச் சங்கற்பியேன்; மூலத்தோடு நீ கெடுவாய்'' என்று கூறுகின்றது, அங்கு விவேகத்தினால் விஷயதோஷங்கள் சாக்ஷாத்கரிக்கப்பட்டபோது நாயினால் வாந்திசெய்யப்பட்ட பாயசத்திற்போலக் காமங்கள் விடப்படுகின்றன. மாலை சந்தனமுதலியவற்றிற்போலப் பிரஹ்மலோகங்களிலும் அணிமாதி அஷ்டைசுவரியங்களிலும் காமங்கள் விடத்தக்கனவாம் ; என்னும் அபிப்பிராயத்தால் "காமங்கள் எல்லாவற்றையும்'' என்று சொல்லப்பட்டது. மாசோபவாச விரதமுடையவனால் அந்தமாசத்தில் அந்நம்விடப்பட்டதாயினும் காமம் மறுபடியும் மறுபடியும் உதிக்கின்றது. அதுபோல உண்டாகலாகாதென்று "அடியோடு'' என்று சொல்லப்பட்டது. காமத்தை விட்டபோது மனப்பூர்வகமான பிர

விருத்தியில்லாவிடினும் சக்ஷுமுதலியவற்றிற்கு ரூபமுதலியவற்றில் இயல்பாய்ப் பெறப்பட்ட பிரவிருத்தி எதுவோ, அதுவும் பிரயத்தனத்தோடு கூடியமனதினாலேயே அடக்கவேண்டியதாம். தேவநாதரிசனமுதலியவற்றிலும் அநுசரியாதிருத்தற்பொருட்டு "எப்புறத்துமாக" என்று சொல்லப்பட்டது. பூமிகைகளின் ஜயக்கிரமமாக உபரமம் (ஒடுக்கம்) சொல்லக்கருதிய தன்மையால் "மெல்ல மெல்ல" என்று சொல்லப்பட்டது. அந்தப்பூமிகைகள் நான்கும் கடவல்லி சுருதிகளில்,

"यच्छेद्वाङ्मनसी प्राज्ञस्तद्यच्छेज्ज्ञान आत्मनि ।
ज्ञानमात्मनि महति नियच्छेत्तद्यच्छेच्छान्त आत्मनि ॥

அறிஞன் மனதில் வாக்கினைச் செலுத்துக. அதனை ஞானாத்மாவிற் செலுத்துக. ஞானத்தினை மகத்தாகிய ஆத்மாவிற் செலுத்துக. அதனைச் சாந்தமாகிய ஆத்மாவிற் செலுத்துக." என்று கேட்கப்படுகின்றது. வாக்குவிபாபாரம் இலௌகிகம் வைதிகமென்று இருவகையினதாம். பேசுதல் முதலியன இலௌகிகமாம், ஜபாதிவடிவினது வைதிகமாம், அவற்றுள் இலௌகிகம் வெகு விக்ஷேபமுண்டுபண்ணுவதாதலால் சமாதியினின்று விழித்தகாலத்திலும் யோகி அதனை விலக்கவேண்டும். இதனைற்றான் ஸ்மிருதியில்,

"मौनं योगासनं योगस्तितिक्षैकान्तशीलता ।
निःस्पृहत्वं समत्वं च सप्तैतान्येकदण्डिनः ॥

மௌனம், யோகாசனம், யோகம், திதிக்ஷை, ஏகாந்தத்திருக்குந்தன்மை, ஆசையின்மை, சமத்துவம் இவ்வேழும் ஏகதண்டிகளுக்காம்." என்று கூறப்பட்டுளது. ஜபாதிகளை நிரோத சமாதியில் விடவேண்டும். இந்த வாக்குப் பூமி முதலாவதாம், அந்தப்பூமியைமுழுப்பிரயத்தனத்தால் சில தினங்களாலாவது மாசங்களாலாவது வருஷங்களாவது திடமாக நன்றாய் ஜயித்து, பின் இரண்டாவதான மனோபூமியில் முயலவேண்டும். அவ்வாறில்லாயின், வெகு பூமிகைகளின் பிரயாசத்தினால் (மறுபடியும்) முதற்பூமியில் விழுதலினாலேயே மேற்பட்ட யோகபூமிகள்கெடும். சக்ஷுமுதலியன நிரோதிக்கத்தக்கனவேயாயினும், அவை வாக்கிலாவது மனதிலாவது அடங்குவனவாகக் காண்க. சங்கை:—வாக்கினை மனதில் ஒடுக்குக என்றது

பொருந்தாது; ஒரு இந்திரியத்திற்கு மற்றோரிந்திரியத்தில் பிரவேசமில்லாமையாலெனின், (சமாதானம்:—) இவ்வாறன்று; பிரவேசம் சொல்லக்கருதிய தன்றாகலின். நாநாவிக்ஷேபங்களைச் செய்வனவாகிய வாக்கு மனது என்னுமிரண்டனுள், முதலாவதான வாக்கு வியாபாரத்தினை யடக்குதலால் மனோவியாபாரமாத்திரம் மிச்சமாமென்பது இங்கு சொல்லக்கருதியதாம். ஆ எருமை குதிரை முதலியவற்றைப்போல வாக்கின் நியமம் சுவாபாவிகமாகப் பெற்றபோது, அதன்பின் மனதை ஞானாத்மாவில் செலுத்தவேண்டும். ஆத்மா ஞானாத்மா, மகாத்மா, சாந்தாத்மா என்று மூன்று விதமாம். இங்கு நிற்பதாய் ஆத்மா அறிகிறது என்பதனால் ஞாதிருத்துவத்தின் (அறிவதன்றன்மையின்) உபாதியாகிய அகங்காரம் இங்கு ஞானசப்தத்தால் சொல்லக் கருதியதாம்; காரணமாகிய மனது அடக்கப்படுந் தன்மையால் வேறாகக் கொள்ளப் பட்டமையின். அகங்காரம் விசேஷவடிவினது சாமானியவடிவினது என்று இருவகையினதாம். இந்த நான் இன்னுடைய புத்திரன் என்றிப்படி வெளிப்படையாக அபிமானிப்பது விசேஷவடிவினதாம். இருக்கிறேன் என்றிவ்வளவுமாத்திரமாக அபிமானிப்பது சாமானியவடிவினதாம். அது எல்லாவியக்திகளிலும் வியாபித்திருத்தலால் மகான் என்று சொல்லப்படுகின்றது. அவ்விரண்டு அகங்காரங்களை உபாதியாக வுடையன இரண்டு ஆத்மாக்களாம். உபாதியின்றியது சாந்தாத்மாவாம். இவையாவும் உள்வெளித் தன்மையாக இருக்கின்றது. சாந்தாத்மா எல்லாவற்றினுள்ளாய் சித் (ஞான) ஏகரஸமாயுள்ளது. அதில் ஆசிரயித்திருப்பதாம் ஜடசக்திவடிவ அவ்யக்தமாகிய மூலப்பிரகிருதி. அது முதலில் சாமானியாகங்கார வடிவமாய் மகத்தத்துவமென்னும் பெயரைத்தரித்து வெளிப்படுகின்றது. அதனின்வெளியில் விசேஷாகங்கார வடிவமாகவும், அதைவிட வெளியில் மனது வடிவமாகவும், அதற்கு வெளியில் வாக்குமுதலிய இந்திரியவடிவமாகவும் வெளிப்படுகின்றது. இவ்வபிப்பிராயங்கொண்டு பிந்திய பிந்திய ஆந்தரத்துவத்தினைச் சுருதி,

इन्द्रियेभ्यः परा ह्यर्था अर्थेभ्यश्च परं मनः
मनसस्तु परा बुद्धिर्बुद्धेरात्मा महान्परः ॥

महतः परमव्यक्तमव्यक्तात्पुरुषः परः ।
पुरुषान्न परं किंचित्सा काष्ठा सा परा गतिः ॥

இந்திரியங்களைவிட அர்த்தங்கள் மேலானவை. அர்த்தங்களைவிட மனதுமேலானது. மனதைவிட புத்தி மேலானது. புத்தியைவிட மகானுகிய ஆத்மாமேலானது, மகத்தைவிட அவ்யக்தம் மேலானது, அவ்யக்தத்தினும் புருஷன் மேலானவன். புருஷனைவிட மேலானது ஒன்றுமில்லை, அது காஷ்டை (அவதி) அது மேலான கதியாம்." என்று விளக்குகின்றது. இவ்வாறுகவே, இங்கு நாநாவித சங்கற்ப விகற்பசாதனமாகிய கரணவடிவ மனதை அகங்காரத்தில் செலுத்த வேண்டும். அதாவது மனோவியாபாரங்களை விட்டு, அகங்காரமாத்திரமாக மிஞ்சவைத்தல் வேண்டும். இது முடியாததாமென்று கூறலாகாது,

"तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम् ।

அதன் நிக்கிரகத்தினை யான் வாயுவின் நிக்கிரகம்போல மிகவும் செய்தற்கரியதென மதிக்கின்றேன்" என்று கூறும் அர்ஜுனனை நோக்கி பகவான்,

"असंशयं महाबाहो मनो दुर्निग्रहं चलम् ।
अभ्यासेन तु कौन्तेय वैराग्येण च गृह्यते ॥
असंयतात्मना योगो दुष्प्राप इति मे मतिः ।
वश्यात्मना तु यतता शक्योऽवाप्तुमुपायतः ॥

சம்சயமில்லை. மகாபாகுவே! மனது சஞ்சலமும் அடக்கமுடியாததுமாம். ஆனுல் கௌந்தேய! அப்பியாசத்தினுலும் வைராக்கியத்தினுலும் நிரகிக்கப்படும். மனவடக்க மின்றியவனுக்கு யோகம் அடைதற்கரிது என்பது என் அபிப்பிராயம். முயற்சி செய்யும் வசப்பட்ட மனதுடையவனுல் உபாயத்தினுல் அடையக்கூடியதாம்." என்று உத்தரஞ்சொல்லுதலால். அப்பியாசம் வைராக்கியமிரண்டும் பதஞ்சலி சூத்திர உதாரணத்தால் வியாக்கியானஞ் செய்யப்படும். முந்திய முந்திய பூமிகளின் திடத்தன்மை யில்லாதவன் மனவடக்கமின்றியவன். அதனோடுகூடியவன் வசப்பட்ட மனதுடையவன். உபாயத்தினுல் அடைதலை கௌடபாதாசாரியர்கள் திருஷ்டாந்தத்தோடு,

"उत्सेक उदधेर्यद्वत्कुशाग्रेणैकबिन्दुना ।
मनसो निग्रहस्तद्वद्भवेदपरिखेदतः ॥

बहुभिर्न विरोद्धव्यमेकेनापि बलीयसा ।
स पराभवमाप्नोति समुद्र इव टिट्टिभात् ॥

தருப்பை நுனியால் ஒவ்வொரு துளியாகச் சமுத்திரத்தை இறைப்பது எப்படியோ அதுபோல வருத்தமின்றியே மனதின் நிக்கிரகமுண்டாம். பலமுடையவனாயினும் ஒருவனால் வெகுபேர்களுடன் விரோதஞ்செய்பலாகாது. அவன் சமுத்திரம் சிட்டு (அடைக்கலாங்)குருவினாற்போல் தோல்வியடைவான்." என்று கூறியிருக்கின்றனர். இதில் சம்பிரதாயமுணர்ந்தோர், "முன்னொருகால் கரையிலிருந்த பக்ஷியின் முட்டைகளை சமுத்திரம் தன் அலையினால் அபகரித்தது. அச்சமுத்திரத்தினை வற்றச்செய்கிறேன் என்று பிரவர்த்தித்து அப்பக்ஷி தனது வாய்நுனியால் ஒவ்வொன்றாக நீர்த்துளியினை வெளியில் போட்டுக்கொண்டிருந்தது. அப்போது தன் பந்துவர்க்கங்களான பக்ஷிகளால் விலக்கப்பட்டும் விலகாது, மாறாக அவைகளையும் (தனக்கு) துணையாக வரித்துக்கொண்டது. பறத்தலும் உட்காருதலுமாக வெகுவிதமாகக் கிலேசப்படுகின்ற அவைகளெல்லாவற்றையும் கிருபையுடையவரான நாரதர் பார்த்து, கருடனை அனுப்பினார். அதன்பின் கருடனது சிறகின் காற்றால் வற்றிச் சமுத்திரம் பயமடைந்து, அந்த முட்டைகளைப் பக்ஷிக்குக் கொடுத்தது" என்று ஒருகதை சொல்லுவர். இவ்வாறு வருத்தமின்றி மனோநிரோதமான பரமகர்மத்தில் பிரவர்த்திக்கின்ற யோகிக்கு ஈசுவரன் அநுக்கிரகஞ்செய்வர். வருத்தமின்மை என்பது இடையிடையில் அதற்கநுகூலமான வியாபாரங்களைக் கலத்தலால் பெறப்படுகின்றது அந்நமுண்பவன் அதன் கவளங்களுக்கிடையில் சுவைக்கப்படுவது நக்கப்படுவது முதலியவற்றைச் சுவைத்துக்கொள்ளுகிறானே அதுபோலவாம். இவ்வபிப்பிராயங்கொண்டே வசிஷ்டர்,

"चित्तस्य भोगैर्द्वौ भागौ शास्त्रेणैकं प्रपूरयेत् ।
गुरुशुश्रूषया भागमव्युत्पन्नस्य संक्रमः ॥

किंचिद्व्युत्पत्तियुक्तस्य भागं भोगैः प्रपूरयेत् ।
गुरुशुश्रूषया भागौ भागं शास्त्रार्थचिन्तया ॥
व्युत्पत्तिमनुयातस्य पूरयेच्चेतसोऽन्वहम् ।
द्वौ भागौ शास्त्रवैराग्यैर्द्वौ ध्यानगुरुपूजया ॥

சித்தத்திற்குப் போகங்களால் (நாலின்) இரண்டுபாகமும், சாஸ்திரத்தினால் ஒருபாகமும், குருபணிவிடையால் ஒருபாகமும், நிரப்பவேண்டும். இது விற்பன்னனல்லாதவனது நற்கிரமமாம். சிறிது விற்பத்தியுடையவனுக்குப் போகங்களால் ஒருபாகமும் குருசுச்ரூஷையால் இரண்டுபாகமும் சாஸ்திரார்த்த சிந்தனத்தால் ஒருபாகமும் நிரப்பவேண்டும். விற்பத்தியடைந்தவனது சித்தத்திற்குத் தினந்தோறும் சாஸ்திரவைராக்கியங்களால் இரண்டுபாகங்களும் தியான குருபூஜையினால் இரண்டுபாகங்களும் நிரப்பவேண்டும்." என்று கூறுகின்றனர். யோகசங்கத்தினால் இங்கு ஜீவன்முக்தனாவான் பிக்ஷைக்குப் போகுதல் முதலிய வியாபாரமும் வர்ணாச்ரமோசிதமான வியாபாரமும் சொல்லப்படும். நாழிகையளவு அல்லது முகூர்த்தவளவு சக்திக்கியன்றபடி யோகத்தினை யப்பியசித்து, அதன்பின் முகூர்த்தம் சாஸ்திரசிரவணத்தினாலாவது பரிசரியை (பணிவிடை) யினாலாவது, குருவினை அணுகி, முகூர்த்தம் தன் தேகத்தையநுசரித்து, முகூர்த்தம் யோகசாஸ்திரத்தினைப் பரியாலோசித்து, மறுபடியும் முகூர்த்தம் யோகத்தினை அப்பியசிக்க வேண்டும். இவ்வாறு யோகப்பிரதானியமாக மற்றைய வியாபாரங்களையும் சேர்த்துக்கொண்டு அவற்றை சுருக்கமாயப்பியசித்து, சயனகாலத்தில் அன்றைய தினம் நிகழ்ந்த யோகமுகூர்த்தங்களைக் கணக்கிடவேண்டும். அதன்பின் மறுநாளில் அல்லது மறுபக்ஷத்தில் அல்லது மறுமாசத்தில் யோகமுகூர்த்தங்களை விருத்திசெய்யவேண்டும். அவ்வாறு ஒவ்வொரு முகூர்த்தத்தில் ஒவ்வொரு க்ஷணத்தில் செய்வதனால் வருஷமாத்திரத்தால் பெரும்பாலும் யோகமாகின்றது. இப்படி யோகமொன்றற்கே அடைக்கலமாயின், மற்றைய வியாபாரங்கள் கெடுமேயென்று சங்கிக்கலாகாது; எல்லாவியாபாரமுமொழிந்தவனுக்கே யோகத்தில் அதிகாரமாகலின். இதனால்தான் வித்துவச்சந்நியாசம் அபேக்ஷிக்கப்படுகின்றது. ஆதலால் அஃதொன்

றிலேயே நிற்பவனான புருஷன் அத்தியயனஞ்செய்பவன் வணிகன் முதலியோரைப்போலக் கிரமமாக யோகாரூடனாகின்றான். அத்தியயனஞ்செய்யும் மாணவகன் பாதாம்சம் (அரைக்கால்), கால், அரை ருக்கு, இரண்டுருக்கு, வர்கம் என்னும் கிரமமாகப் படித்து பத்துப் பன்னிரண்டு வருஷங்களில் அத்தியாபகனாகின்றானே, வாணிபஞ் செய்பவன் ஒருபொன் இரண்டுபொன் முதலிய கிரமத்தால் இலக்ஷப்தி கோடீசுவரனாகின்றானே, அதுபோல மாணவகன் வணிகன் என்னும் இருவரோடு கூடவே தொடங்கி மற்சரத்தினால் விழுங்கப் பட்டவனைப்போல யோகஞ்செய்பவன் அவ்வளவுகாலத்தால் ஏன் யோகத்தில் ஏறான்? ஆதலால் மறுபடியும் மறுபடியும் அடையப் படுபவைகளான சங்கற்ப விகற்பங்களை உத்தாலகரைப்போல் புருஷ முயற்சியால் விட்டு, அசங்காரியான ஞானத்மாவில் மனதைச் செலுத்தவேண்டும். அத்தன்மையாகிய இவ்விரண்டாம் பூமியினை ஜயித்து, பாலன் ஊமை முதலியோர்போல நிர்மனத்தன்மை இயல்பாயுளதாக, அதன்பின் விசேஷாகங்காரவடிவ மிக ஸ்பஷ்டமான ஞானத்மாவினை ஸ்பஷ்டமல்லாத சாமானியாகங்காரமான மகத்தத்துவத்தில் செலுத்துக. எப்படி சொற்பதந்திரியினை யடைந்தவனுக்கு விசேஷாகங்காரம் இயல்பாகவே சுருங்குகிறதோ, அதுபோல விஸ்மரணத்தில் பிரயத்தனஞ் செய்பவனுக்குத் தந்திரையின்றியே அகங்காரம் சுருங்குகின்றது. இது லோகப்பிரசித்தமான தந்திரையோடும் தார்க்கிகர்கொள்ளும் நிர்விகற்ப ஞானத்தினோடும் ஒத்ததான மகத்தத்துவ மாத்திரமாக மிஞ்சுமவஸ்தையாகிய மூன்றாவது பூமியாம். அப்பியாசத் தேர்ச்சியால் இது வசீகரிக்கப்பட்டபோது, சாமானியாகங்காரவடிவ இந்தமகானாகிய ஆத்மாவை உபாதியின்றிய தன்மையால் சிதேக ரஸசுபாவமான சாந்தத்தில் செலுத்தவேண்டும்.

"महत्तत्त्वं तिरस्कृत्य चिन्मात्रं परिशेषयेत् ॥

மகத்தத்துவத்தினை விலக்கிச் சின்மாத்திரத்தினை எஞ்சுவித்தல் வேண்டும். இங்கு முற்கூறிய விஸ்மிருதிப் பிரயத்தனமே அதனினும் மிருதியான உபாயத்தன்மையை யடைவிக்கின்றது. எப்படிச் சாஸ்திராப்பியாசப் பிரவிருத்தனுக்கு விற்பத்திக்கு முன் ஒவ்வொரு கிரந்தத்திற்கும் வியாக்கியானபேக்ஷை யிருக்கினும், விற்பன்னனுக்குத்

தானாகவே மேற்கிரந்தத்தின் அர்த்தம் விளங்குகிறதோ, அதுபோல செவ்வையாயப்பியசிக்கப்பட்ட முற்பூமியுடைய யோகிக்குப் பிந்திய பூமியின் உபாயம் தானே விளங்கும். அதனை யோகபாஷியகாரர்,

"योगेन योगो ज्ञातव्यो योगो योगात्प्रवर्तते ।
योऽप्रमत्तस्तु योगेन स योगी रमते चिरम् ॥

யோகத்தினால் யோகம் (பிந்தியபூமி) அறியத்தக்கதாம். யோகம் யோகத்தினாற் பிரவர்த்திக்கின்றது. பூர்வ பூமிகை உத்தர பூமிகை யாகிய யோகத்தினால் பிரமாதமின்றியவன் எவனோ, அந்தயோகி நெடுங்காலம் இரமிக்கின்றான். சங்கை:—மகத்தத்துவ சாந்தாத்மாக்களின் மத்தியில் மகத்தததுவத்தின் உபாதானமான அவ்யக்தம் என்னும் தத்துவம் சுருதியினால் உதாகரிக்கப்பட்டுளது. அதில் ஒடுக்குதல் ஏன் சொல்லப்படவில்லையெனின், (சமாதானம்:—); இல்லை இலயப்பிரசங்கத்தினால் (நித்திரை நேருமாதலால்) என்று கூறுவாம்:-— எப்படிக் கடம் உபாதானமல்லாத ஜலத்தில் நிரோதிக்கப்படுவதாய் ஒடுங்குகிறதில்லையோ உபாதானவடிவ மண்ணில் ஒடுங்குகின்றதோ, அதுபோல மகத்தத்துவம் ஆத்மாவில் ஒடுங்குகிறதில்லை. ஆனால் அவ்வியக்தத்தில் ஒடுங்குகிறது. ஸ்வரூபலயம் புருஷார்த்தமன்று; ஆத்மதரிசனத்திற்குபயோகமின்மையின்,

"दृश्यते त्वग्र्यया बुद्ध्या सूक्ष्मया सूक्ष्मदर्शिभिः ॥

சூக்ஷ்மதரிசிகளால் சூக்ஷ்மமான ஏகாக்கிரபுத்தியினால் காணப்படுகின்றது." என்று முந்தியவாக்கியத்தில் ஆத்மதரிசனத்தைக்கூறி, சூக்ஷ்மத்தன்மை சித்தித்தற்பொருட்டு நிரோதத்தினைக் கூறுதலானும், இலயம் சுரடோறும் சுழுத்தியில் இயல்பாகவே சித்தித்தலால் முயற்சி வியர்த்தமாகுதலானும் என்க. சங்கை:—காரணத்தியான சமாதிகளால் சாதிக்கப்படும் சம்பிரஞ்ஞாதத்திற்கு ஏகாக்கிரத்தன்மை விருத்திரூபத்தன்மையால் தரிசனத்தில் ஏதுவாந்தன்மையிருக்கினும், சாந்தாத்மாவில் ஒடுக்கப்பட்டதான சம்பிரஞ்ஞாதசமாதியினையடைந்தசித்தத்திற்குச் சுழுத்திபோல் தரிசனத்திற்கேதுவாகுந்தன்மை இல்லையேயெனின், அன்று; தாஞ்கச் சித்தித்த தரிசனம் விலக்கக்கூடியதாகாமையின். இதனாற்றான் சிரேயோமார்க்கநூலில்

"आत्मानात्माकारं स्वभावतोऽवस्थितं सदा चित्तम् ।
आत्मैकाकारतया तिरस्कृतानात्मदृष्टि विदधीत ॥

சித்தம் எப்போதும் சுபாவமாக ஆத்மாகாரமும் அநாத்மாகாரமுமாக நிற்கின்றது. ஆதலால் ஆத்மா வொன்றன் வடிவாந்தன்மையால் அநாத்மதிருஷ்டி விலக்கப்பட்டதாகச் செய்யவேண்டும்." என்று சொல்லப்பட்டுளது. எப்படி உற்பத்தியாகின்ற கடம் இயல்பாக ஆகாயம் நிரம்பியதாகவே உற்பத்தி யாகிறதோ, நீர் அரிசிமுதலியவற்றை நிரப்புதல் உற்பத்தியான கடத்தில் பின்னர்ப்புருஷப் பிரயத்தனத்தாலுண்டாகின்றதோ, அந்த ஜலமுதலியவை கொட்டப்படினும் ஆகாயம் நீக்கக்கூடியதாகாதோ, (குடத்தின்) வாயை மூடினாலும் உள்ளே ஆகாயம் இருக்கவே செய்கின்றதோ, அதுபோல உற்பத்தியாகின்ற சித்தம் ஆத்மசைதன்னியம் நிரம்பியதாகவே உற்பத்தியாகின்றது. உற்பத்தியான சித்தத்தில் பின்னர் கருவில் வார்க்கப்பட்ட உருக்கிய தாமிரம்போல் கடம் படம் ரூபம் ரசம் சுகம் துக்கம் முதலிய விருத்திவடிவத் தன்மையானது போகவேதுவான தர்மாதர்மாதிகளின் வசத்தால் உண்டாகிறது. அங்கு ரூபம் ரசம்முதலிய அநாத்மாகாரம் நீக்கப்படினும், நிர்நிமித்தமான சிதாகாரம் நீக்கக் கூடியதாகாது. அதனால் நிரோதசமாதியினால் விருத்தியின்றியதும், சம்ஸ்காரமாத்திரமாக மிஞ்சப்படுந்தன்மையால் சூக்ஷ்மத்தன்மையாகச் சிதாத்மமாத்திரத்தின் எதிர்முகமாதற் றன்மையினால் ஏகாக்கிரமுமான சித்தத்தினால் விக்கினமின்றி ஆத்மா அநுபவிக்கப்படுகின்றது. இவ்வபிப்பிராயமாகவே வார்த்திககாரரும் சர்வாநுபவயோகியும்,

"सुखदुःखादिरूपत्वं धियो धर्मादिहेतुतः ।
निर्हेतुत्वात्मसंबोधरूपत्वं वस्तुवृत्ततः ॥
प्रशान्तवृत्तिकं चित्तं परमानन्ददीपकम् ।
असंप्रज्ञातनामाऽयं समाधिर्योगिनां प्रियः ॥

புத்திக்குச் சுகதுக்காதிரூபமுடைமை தர்மாதிஹேதுவினாலாம், ஆத்மஞானரூபத்துவம் வஸ்துவினால் வியாபிக்கப்பட்டிருத்தலின், ஹேதுவினால் வின்றியதாம். மிக வொடுங்கிய விருத்தியினையுடைய

சித்தம் பரமாநந்தவிளக்காம். அசம்பிரஞ்ஞாத மென்றும் பெயருடைய இச்சமாதி யோகிகட்குப் பிரியமானதாம்.'' என்று கூறுகின்றனர். ஆத்மதரிசனம் தானே சித்திப்பதாயினும் அநாத்மதரிசனத்தினை நீக்குதற்பொருட்டு நிரோதாப்பியாசமாம். இதனாற்றன்,

"आत्मसंस्थं मनः कृत्वा न किंचिदपि चिन्तयेत् ।

மனதினை ஆத்மாவில் நன்றாய் நிலைத்ததாக்கி எதனையும் சிந்திக்கலாகாது." என்று சொல்லப்பட்டது. யோகசாஸ்திரம் சித்தத்தினைச் சிகிச்சிக்கும் சமாதிமாத்திரத்தில் பிரவிருத்தித்ததாகலின் நிரோதசமாதியில் ஆத்மதரிசனம் நேராகச் சொல்லப்படவில்லை. ஆனால் மற்றோர்வகையால் அங்கீகரிக்கப்படுகின்றது,

"योगश्चित्तवृत्तिनिरोधः ।

யோகம் சித்தவிருத்தியின் நிரோதமாம்." என்று சூத்திரித்து,

"तदा द्रष्टुः स्वरूपेणावस्थानम् ।

அப்போது திரஷ்டாவுக்கு தன்வடிவமாக நிலைத்தலாம் " என்று சூத்திரித்தலால். நிர்விகாரனன திரஷ்டா எப்போதும் தன் வடிவத்திலே நிற்கின்றானெனினும், விருத்திகள் உண்டாகும்போது, அங்கு சிற்சாயை பிரதிபிம்பித்ததாக அதன் அவிவேகத்தினால் திரஷ்டா தன்னிலையிலில்லாதவன் போலாகின்றான். " அதுவும் பிந்திய சூத்திரத்தால்,

"वृत्तिसारूप्यमितरत्र ॥

பிறவிடத்து (சித்தநிரோதமில்லாதபோது) விருத்தியின் சமானரூபத்தினையடைகின்றான்." என்று சொல்லப்பட்டுளது, பிறவிடத்தும்,

"सत्त्वपुरुषयोरत्यन्तासंकीर्णयोः प्रत्ययाविशेषो भोगः परार्थत्वात् ॥

அத்தியந்தம் கலப்பில்லாதனவாகிய சத்துவம் புருஷனென்னுமிரண்டன் பிரத்தியய விசேஷமின்மை போகமாம்; பிறன் பொருட்டாந்தன்மையிருத்தலின்" என்றும்,

"चितेरप्रतिसंक्रमायास्तदाकारापत्तौ स्वबुद्धिसंवेदनम् ॥

எதிர்த்துச் செல்லாததான சித்தத்திற்கு அவ்வாகாரவண்டவில் தனது புத்திசம்வேதனமாம்." என்றும் சூத்திரித்திக்கின்றனர். நிரோத சமாதியினல் சோதிக்கப்பட்ட துவம்பதார்த்தம் சாக்ஷாத்கரிக்கப் பட்டதாயினும், அதன் பிரஹ்மத் தன்மையைக் கோசரித்தற்கு மகாவாக்கியத்தினல் பிரஹ்மவித்தை யென்னும் பெயருடைய வேறுவிருத்தி உறபத்தி யாகின்றது. சுத்த துவம்பதார்த்த சாக்ஷாத்காரத்தில் நிரோதசமாதியொன்றே உபாயமன்று; மற்ருே சிற் சடவிவேகத்தினலும் வேறுப்படுத்தப்பட்டபோது அதன் சாக்ஷாத்காரம் சம்பவிக்கின்றது. இதனுற்ருன் வசிஷ்டர்,

"द्वौ क्रमौ चित्तनाशस्य योगो ज्ञानं च राघव ।
योगस्तद्वृत्तिनिरोधो हि ज्ञान सम्यगवेक्षणम् ॥

இராகவ! சித்த நாசத்திற்கு யோகம் ஞானம் என்று இரண்டு கிரமங்களுள. யோகம் அச்சித்தவிருத்தியின் நிரோதம். ஞானம் (ஆத்மாவை) செவ்வையாகக் காண்டல்." என்றும்,

"असाध्यः कस्यचिद्योगः कस्यचिज्ज्ञाननिश्चयः ।
प्रकारौ द्वौ ततो देवो जगाद परमेश्वरः ॥

ஒருவனுக்கு யோகம் அசாத்தியம். ஒருவனுக்கு ஞானம் அசாத்தியம். அதனுல் தேவனுகிய பரமேசுவரன் இரண்டு பிரகாரங்களைச் சொல்லி யருளினர்." என்றும் கூறுகின்ருர். சங்கை:—விவேகம் யோகத்தில் முடிவுபெறுகின்றது; தரிசனவேளையில் ஆத்மா மாத்திரத்தினைக் கோசரிப்பதான ஏகாக்கிரவிருத்திக்கு க்ஷணிக சம்பிரஞ்ஞாத வடிவமிருத்தலாலெனின், சரிதான். என்ருலும், சம்பிரஞ்ஞாதம் அசம்பிரஞ்ஞாத மிரண்டற்கும் ஸ்வரூபத்தினுலும் சாதனத்தினுலும் பெருத்த வேற்றுமை உள்ளதேயாம். விருத்தி விருத்தியின்மைகளால் ஸ்வரூபபேதம் வெளிப்படையாம். சாதனமோ சம்பிரஞ்ஞாதத்திற்கு சஜாதீயமாயிருத்தலால் தாரணுதி மூன்றும் அந்தரங்கமாம்; விருத்தியில்லாததான அசம்பிரஞ்ஞாதத்திற்கு விஜாதீயமாயிருத்தலின் பகிரங்கமாம். அவ்வாறே,

"तदपि बहिरङ्गं निर्बीजस्य ।

அதுவும் நிர்பீஜமாகிய அசம்பிரஞ்ஞாதத்திற்குப் பகிரங்கமாம்," என்பது சூத்திரம். விஜாதீயத்துவமிருக்கினும் வெகுவிதமான அநாத்மவிருத்திகளை நீக்குதலால் உபகாரியாவதனால் பகிரங்கத்துவம் விரோதமின்றியதாம். அவ்வுபகாரியாந் தன்மையினையே தெளிவாக்குதற்பொருட்டு,

"श्रद्धा वीर्यस्मृतिसमाधिप्रज्ञापूर्वकमितरेषाम् ।

(தேவர்முதலியோரல்லாத) மற்றவர்கட்குச் சிரத்தை வீரியம் ஸ்மிருதி சமாதி பிரஞ்ஞைகளை முன்னிட்டதாம்." என்று சூத்திரிக்கின்றனர். தேவாதியர் சிலருக்குப் பிறப்பினாலேயே சமாதியினை மூந்திய சூத்திரத்திற்கூறி மனிதர்களைக்குறித்து இது சொல்லப்பட்டது. எனக்கு இந்த யோகமே பரமபுருஷார்த்த சாதனமாமென்னும் உணர்ச்சி சிரத்தையாம். அதுவும் உயர்ச்சியைக்கேட்பதனால் பிறக்கின்றது. அவ்வுயர்ச்சியும்,

"तपस्विभ्योऽधिको योगी ज्ञानिभ्योऽपिमतोऽधिकः ।
कर्मिभ्यश्चाधिको योगी तस्माद्योगी भवार्जुन ॥

தபசிகளினும் யோகி அதிகன். ஞானிகளினும் அதிகனாக மதிக்கப்பட்டுளன். கர்மிகளினும் அதிகன் யோகி. ஆதலால் அர்ஜுனா! யோகி ஆவாய்." என்று ஸ்மிருதியில் கூறப்பட்டுளது. உத்தமலோகசாதனமாயிருத்தலின் கிருச்சிர சாந்திராயணாதி தபசுகட்கும் ஜோதிஷ்டோமாதி கர்மங்கட்கும் யோகம் அதிகமானதாம். ஞானத்தினைக்குறித்து அந்தரங்கமாயிருத்தலின் சித்த விசிராந்திக்கேதுவாகுந்தன்மையால் ஞானத்தினும் அதிகமாகுந்தன்மையுளது. இவ்வாறு ஞானத்தைவிட யோகத்தில் சிரத்தை பிறக்கிறது. அந்தச் சிரத்தாவாசனை யேறவே வீரியமாகிய உற்சாகம் எல்லாவிதத்தாலும் யோகத்தினைச் சம்பாதிப்பேன் என்று உண்டாகின்றது. இத்தன்மைய உற்சாகத்தினால் அப்போது அதன் அநுஷ்டேயங்களான யோகாங்கங்கள் ஸ்மரிக்கப்படுகின்றன. அந்தஸ்மிருதியினால் செவ்வையா யநுஷ்டிக்கப்பட்ட சமாதியினால் அத்தியாத்மப்பிரசாத முண்டாக, ருதம்பரையாகிய பிரஞ்ஞை உதிக்கின்றது. அந்தப்பிரஞ்ஞையைமுன்னிட்ட (அந்தப்பிரஞ்ஞையைக் காரணமாகவுடைய)

அசம்பிரஞ்ஞாதசமாதி மற்றையவர் (தேவாதியரைவிட பிந்தியவர்களான மனிதர்)கட்குச் சித்திக்கின்றது. அந்தப்பிரஞ்ஞையினை,

"ऋतंभरा तत्र प्रज्ञा ।

அங்கு, ருதம்பரை யென்னும் பிரஞ்ஞையுண்டாகிறது." என்று சூத்திரிக்கின்றார். ருதம் சத்தியம் (வஸ்து யதார்த்தத்தன்மை) அதனை பரிக்கின்றது (விளக்குகின்றது) என்பதனால் ருதம்பரை எனப்படும். அது அங்கு அதாவது சமாதியின் மிகுதிப்பாட்டாற் றோன்றிய அத்தியாத்மப் பிரசாதமுண்டாகுங்கால் உண்டாகிறது. என்பது பொருள். அதற்கு ருதம்பரத்துவம் பொருந்துதலை,

"श्रुतानुमानप्रज्ञाभ्यामन्यविषया विशेषार्थत्वात् ।

சாஸ்திரஜந்திய அநுமானஜந்திய ஞானங்களைவிட அந்நியவிஷயமுடையதாம்; விசேஷார்த்தமுடைமையால்" என்று சூத்திரிக்கின்றார். சூக்ஷ்மமும், மறைபட்டனவும், தூரத்துள்ளனவுமாகிய வஸ்துக்களில் யோகியின் பிரத்தியக்ஷம் பிரவர்த்தியாது, ஆகமம் அநுமானமிரண்டினாலும் அவ்வஸ்துக்கள் அயோகிகளால் அறியப்படுகின்றன. சாஸ்திராநுமான ஜந்தியமான அவ்விரண்டு பிரஞ்ஞைகளும் வஸ்துசாமானியத்தினையே கோசரிக்கின்றன. யோகிப் பிரத்தியக்ஷமாகிய இதுவே விசேஷவஸ்துவினைக் கோசரித்தலால் ரிதம்பரையாம், அந்தயோகிப் பிரத்தியக்ஷத்திற்கு அசம்பிரஞ்ஞாத சமாதியில் பகிரங்கத்துவம் சித்தித்தற்பொருட்டு உபகாரியாகுந் தன்மையை,

"तज्जः संस्कारोऽन्यसंस्कारप्रतिबन्धी ।

அதனாற்றோன்றிய சம்ஸ்காரம் அந்நியசம்ஸ்காரங்களின் பிரதிபந்தியாம்." என்று சூத்திரிக்கின்றார். அசம்பிரஞ்ஞாத சமாதியின் பகிரங்க சாதனத்தன்மையைக்கூறி, அதன் நிரோதப்பிரயத்தனத்திற்கு அந்தரங்கசாதனத்தன்மையை,

"तस्यापि निरोधे सर्वनिरोधान्निर्बीजसमाधिः ।

அதனையும் நிரோதித்தபோது எல்லாவற்றின் நிரோதமுண்டாகுதலால் நிர்பீஜசமாதியாம்." என்று சூத்திரிக்கின்றார், இச்சமாதி

சுழுத்தியையொத்ததாம்; சாதுநிசைதன்னியத்திலுல் அநுபவிக்கக் கூடியதாம், அப்போது இது எல்லாவிருத்திகளுமின்றிய தன்மையால் சுழுத்தியே யாமென்று சங்கிக்கத்தக்கதன்று; மனதினது சொரூபத்தின் இருப்பு இன்மை யிரண்டினுலும் விசேஷமிருத்தலின். அது கௌடபாதாசாரியர்களால்,

"निगृहीतस्य मनसो निर्विकल्पस्य धीमतः ।
प्रचारः स तु विज्ञेयः सुषुप्तेऽन्यो न तत्समः ॥
लीयते हि सुषुप्तौ तन्निगृहीतं न लीयते ।
तदेव निर्भयं ब्रह्म ज्ञानालोकं समन्ततः ॥

புத்திமானுடைய நிக்கிரகிக்கப்பட்ட நிர்விகற்பமான மனதின் நிலை விசேஷமாயறியத்தக்கதாம் சுழுத்தியினிடத்தில்வேறானதாம்; அதற்குச்சமமானதன்று. ஏனெனின், சுழுத்தியில் மனது ஒடுங்குகிறது. அதுவே எப்புறத்தாலும் ஞானவொளியாகிய நிர்ப்பயமான பிரமமாம்." என்னும்,

"द्वैतस्याग्रहणं तुल्यमुभयोः प्राज्ञतुर्ययोः ।
बीजनिद्रायुतः प्राज्ञः सा च तुर्ये न विद्यते ॥
स्वप्ननिद्रायुतावाद्यौ प्राज्ञस्त्वस्वप्ननिद्रया ।
न निद्रां नैव च स्वप्नं तुर्ये पश्यन्ति निश्चिताः ॥
अन्यथा गृह्णतः स्वप्नो निद्रा तत्त्वमजानतः ।
विपर्यासे तयोः क्षीणे तुरीयं पदमश्नुते ॥

பிராஞ்ஞதுரியர் இருவருக்கும் துவைதத்தினைக் கிரகியாமை சமானமாம். பீஜ (சம்ஸ்கார) நித்திரையோடு கூடியவன் பிராஞ்ஞன். துரியத்தில் அஃதில்லை. (விசுவதைஜஸர்களான) முதலிருவரும் ஸ்வப்ன நித்திரையோடு கூடியவர். பிராஞ்ஞனே ஸ்வப்னமின்றிய நித்திரையோடு கூடியவன். துரியத்தில் நிச்சயமுடையோர் நித்திரையினையும் காண்கிலர், சொப்பனத்தினையும் காண்கிலர் (அத்வைதவஸ்துவை) வேறுவகையாகக் கிரகித்தலினுல் (துவைதரூபமாக அறிதலால் அது விசுவதைஜஸர்களுக்கு) ஸ்வப்னமாம். தத்துவத்

தினை யறியாததினால் நித்திரையாம் (அது விசுவதைஜஸ பிராஞ்ஞர் களிடத்திலிருக்கின்றது.) அவ்விரண்டன் (ஸ்வரூபவடிவ சொப் பன நித்திரைகளின்) விபரியாசம் (மித்தியாஞானம்) வித்தையினால் நசித்தபோது துரியமான பதத்தை (அத்வைதமாகிய வஸ்துவை) அநுபவிக்கின்றான்." என்றும் சொல்லப்பட்டுளது. சங்கை:— அசம்பிரஞ்ஞாத சமாதிக்கும் சுழுத்திக்கும் இவ்வாறு பெருத்த பேதம் இருக்குக. அங்குத் தத்துவத்தைக் காணும் விருப்புடைய வனுக்குத் தரிசன சாதனமாகுந் தன்மையால் சமாதியபேக்ஷை யிருக்கினும், தத்துவத்தைத் தரிசித்தவனுக்கு ஜீவன்முக்தியின் பொருட்டு அதனபேக்ஷையில்லை; இராகாதிக்கிலேசபந்தம் சுழுத்தி யினாலும் நீங்குதலாலெனின், (சமாதானம்:— அவ்வாறன்று; பந்தத்தினை நிவர்த்திப்பது தினந்தோறும் இயல்பாய்ப் பெறப்பட் டதான ஓர் காலத்ததாகிய சுழுத்தியா? அல்லது அப்பியாசத்தினால் நிரந்தரமிருப்பதான சுழுத்தியா? முதலாவதிலும் சுழுத்திகாலத் ததான கிலேசபந்தத்தின் நிவிருத்தியா? அல்லது காலாந்தரத்தி லிருப்பதான கிலேசபந்தத்தின் நிவிருத்தியா? முதலாவதன்று; நிகழாமையின்; மூடர்களுக்கும் சுழுத்தியில் கிலேசபந்த மின்மை யால்; அவ்வாறில்லையாயின் ஆயாசம் நிகழவேண்டும். இரண் டாவது மன்று; சம்பவியாமையின்; அந்நியகாலத்ததான சுழுத்தி யினால் காலாந்திரத்திலிருப்பதான கிலேசத்தின் நாசம் சம்பவியாது. அவ்வாறில்லையாயின் மூடர்களுக்கும் ஜாகரணசொப்பனங்களில் கிலேசத்தின் நாசம் நிகழவேண்டும். சுழுத்தியில் நிரந்தரத்தன் மையாக அப்பியசிக்கவும் முடியாது; அதற்குக் கர்மக்ஷயம் நிமித் தமாதலின். ஆதலால் தத்துவஞானிக்கும் கிலேசக்ஷயத்தின் பொருட்டு அசம்பிரஞ்ஞாத சமாதியின் அபேக்ஷையுளதேயாம். அச்சமாதிக்குப் பசுமுதலியவற்றிற்போல வாக்கு நிரோதம் முத லாவது பூமியாம். பாலன் மூடன் முதலியோரிடத்திற்போல மன தின்றியதன்மை இரண்டாவதாம். தந்திரையிற்போல அகங்கார மின்றிய தன்மை மூன்றாவதாம். சுழுத்தியிற்போல மகத்தத்துவ மின்றியதன்மை நான்காவதாம். இந்த நான்கு பூமியினையும் கரு தியே மெல்ல மெல்ல ஒடுக்கவேண்டுமென்று கூறியதாம். இங்கும் ஒடுக்கத்தில் தைரியத்தினைக்கொண்ட புத்தி சாதனம். இயல்

பாகவே தீவிரவேகத்தால் வெளியில் பிரவகிப்பனவாகிய மகதகங் காரமனோவாகாதிகளை கரைபுரண்டுசெல்லும் ஆறுகளைப்போலத் தடுத்தலில் பொருத்த தைரியம் வேண்டியதேயாம். புத்தியாவது விவேகம். அது முந்திய பூமி ஜயிக்கப்பட்டதா இல்லையா வென்று பரீக்ஷித்து, ஜயிக்கப்பட்டபின் பிந்திய பூமியைத் தொடங்கவேண்டும். ஜயிக்கப்படாதபோது அதுவே மறுபடியும் அப்பியசிக்கத் தக்கதாமென்று அப்போதைக்கப்போது விவேகிக்கவேண்டும். ஆத்மாவிலிருப்பதாகச் செய்து" என்றல் முதலிய கீதையின் ஒன்றரைச் சுலோகத்தினால் நான்காவது பூமியின் அப்பியாசமும் ஸூசிக்கப்பட்டுளது. கௌடபாதாசாரியர்கள்

"उपायेन निगृह्णीयाद्विक्षिप्तं कामभोगयोः ।
सुप्रसन्नं लये चैव यथा कामो लयस्तथा ॥
दुःखं सर्वमनुस्मृत्य कामभोगान्निवर्तयेत् ।
अजं सर्वमनुस्मृत्य जातं नैव तु पश्यति ॥
लय संबोधयेच्चित्तं विक्षिप्तं शमयेत्पुनः ।
सकषायं विजानीयात्समप्राप्तं न चालयेत् ॥
नास्वादयेद्रसं तत्र निःसङ्गः प्रज्ञया भवेत् ।
निश्चलं निश्चरच्चित्तमेकीकुर्यात्प्रयत्नतः ॥
यदा न लीयते चित्तं न च विक्षिप्यते पुनः ।
अनिङ्गनमनाभासं निष्पन्नं ब्रह्मतत्तदा ॥

காம போக மிரண்டில் விக்ஷேபமடைந்ததனை உபாயத்தினால் நிக்கிரகிக்கவேண்டும். இலய (உறக்க)த்தில் மிகப் பிரசன்னமுடையதாம், காமம் எப்படியோ அப்படி இலயமுமாம். யாவும் துக்கமென்று சிந்தித்துக் காமபோகங்களினின்று விலக்கவேண்டும். எல்லாவற்றையும் பிறப்பின்றிய ஆத்மாவாகச் சிந்தித்துப் பிறந்ததனை (துவைதக்கூட்டத்தினை)ப் பார்க்கவேமாட்டான். இலயத்தில் சித்தத்தினைச் செவ்வையாய் விழிப்பிக்கவேண்டும். விக்ஷேபமடைந்ததனை மறுபடியும் அடக்கவேண்டும். கஷாயத்தோடு கூடியதனை அறியவேண்டும். சமமடைந்ததனை அசைப்பிக்கலா

கர்து. அங்குண்டாம் சுகத்தை உருசிக்கலாகாது. பிரஞ்ஞையினால் சங்கமின்றியவனாக வேண்டும். நிச்சலமானது சரிக்குமாயின், அந்தச்சித்தத்தினை முயற்சியினால் ஒருமைப்படுத்தவேண்டும். எப்போது சித்தம் இலயமடைகிறதில்லையோ, மறுபடியும் விக்ஷேபப்படுகிறதில்லையோ, அப்போது அது சலிப்பின்றியதும் சவிதத் தோற்றமின்றியதுமான பிரஹ்மமாம்." என்று கூறுகின்றனர். இலயம் விக்ஷேபம் கஷாயம் சம(பிரஹ்ம)பிராப்தி என்று சித்தத்தின் அவஸ்தைகள் ஐந்தாம். அங்கு நிரோதிக்கப்படுகின்ற சித்தம் விஷயங்களினின்றும் விலக்கப்பட்டபோது முந்திய பழக்கவசத்தால் இலயமாகிய சுழுத்திக்கு எதிர்முகமாகும். அப்போது எழுப்பும் முயற்சியினாலாவது லயத்திற்குக் காரணமானவற்றை விலக்குதலாலாவது சித்தத்தினைச் செவ்வையாய் விழிப்பிக்கவேண்டும். இலயஹேதுக்கள் நித்திராசேஷம். அஜீர்ணம், அதிகவுணவு, சிரமம் என்பனவாம். இதனானே,

"समापय्य निद्रां सुजीर्णाल्पभोजी श्रमत्याग्यबाधे विविक्ते प्रदेशे ।
सदाऽऽसीत निस्तृष्ण एव प्रयत्नोऽथवा प्राणरोधो निजभ्यासमार्गात् ॥

நித்திரையினை முடித்து, நல்லஜீர்ணமுள்ளவனும் அற்பாகாரமுடையவனும் சிரமநீக்கியவனுமாய், உபத்திரவமின்றிய தனித்த இடத்தில் ஆசையில்லாதவனாய் எப்போதும் இருக்கவேண்டும். இது முயற்சியாம். அல்லது தனது வழியின்படி பிராண நிரோதமுடையவனாய் இருக்கவேண்டும்." என்று கூறுவர். இலயத்தினின்று விழிப்பித்த சித்தம் நாடோறும் நிகழும் விழிப்பின் அப்பியாசவசத்தால் காமபோகங்கள் விக்ஷேபப்படு(சலிக்கு)மாயின், அப்போது விவேகிகளிடத்துப் பிரசித்தமான போக்கிய வஸ்துக்களிலுள்ள சர்வதுக்கங்களின் அநுஸ்மரணத்தினாலும், சாஸ்திரப்பிரசித்தமான ஜன்மாதிகளின்றிய அத்விதீயப் பிரஹ்மதத்துவாநுஸ்மரணபூர்வகமான (தத்துவசிந்தனையை முன்னிட்டதான) போக்கியவஸ்துவைக் காண்பதினாலும் மறுபடியும் மறுபடியும் விக்ஷேபத்தினின்றும் சித்தத்தினை அடக்கவேண்டும். கஷாயமாவது தீவிரசித்ததோஷம் அதாவது தீவிர ராகத்துவேஷாதிவாசனை. அதனால் விழுங்கப்பட்ட சித்தம் ஒருகால் சமாதியடைந்ததுபோல இலயவிக்ஷேபமின்றியதாய் துக்கத்தில் ஏகாக்கிரமாய் நிற்கும். அப்படிப்பட்டதாக அந்தச்

சித்தத்தினை அறியவேண்டும். அதாவது சமாதி யடைந்ததினும் வேறானது (சமாதி யடையாதது) இது என்று விவேகத்தினாலறிந்து, இலய விக்ஷேபங்களுக்குப்போல கஷாயத்திற்கும் பிரதீகாரம் செய்யவேண்டும்.

"समं सर्वेषु भूतेषु तिष्ठन्तं परमेश्वरम् ।

எல்லாப் பூதங்களினும் சமமாகநிற்கின்ற பரமேசுவரனை" என்றும் ஸ்மிருதியினால் சமம் என்னும் சொல்லால் பிரஹ்மம் சொல்லப்படுகின்றது. இலய விக்ஷேபகஷாயங்கள் நீக்கப்பட்டபோது பரிசேஷத்தால் சமமாகிய பிரஹ்மம் சித்தத்தினாலடையப்படுகின்றது. அந்த ஸமபிராப்தமான சித்தத்தினை கஷாயம் இலயம் என்னும் மயக்கத்தினால் சலிப்பிக்கலாகாது. சூக்ஷ்மமான புத்தியினால் இலய கஷாயப்பிராப்திகளை விவேகித்து, அந்த ஸமப்பிராப்தியில் மிகுந்த முயற்சியினால் நெடுநேரம் நிறுத்தவேண்டும். அதில் நிறுத்தப்பட்டபோது பிரஹ்மசொரூப வடிவ பரமாநந்தம் செவ்வையாய் வெளிப்படுகின்றது. அவ்வாறே,

"सुखमात्यन्तिकं यत्तद्बुद्धिग्राह्यमतीन्द्रियम् ।

எந்த ஆத்யந்திக (முற்றுமான) சுகம் புத்தியினால் கிரகிக்கத்தக்கதும் அதீந்திரியமுமாமோ அதனை" என்று உதாகரிக்கப்பட்டுள்ளது,

"समाधिनिर्धूतमलस्य चेतसो निवेशितस्यात्मनि यत्सुखं भवेत् ।
न शक्यते वर्णयितुं गिरा तदा स्वयं तदन्तःकरणेन गृह्यते ॥

சமாதியினால் மலம் நீங்கியதும் ஆத்மாவில் செலுத்தப்பட்டதுமான சித்தத்திற்கு எந்தச் சுகம் உண்டாகிறதோ, அது வாக்கினால் வர்ணிக்கமுடியாது. அப்போது தானே அவ்வந்தக்கரணத்தினால் கிரகிக்கப்படுகின்றது. சங்கை:—சமாதியில் வெளிப்பட்ட பிரஹ்மாநந்தத்திற்குப் புத்தியினால் கிரகிக்கப்படுந் தன்மை சுருதி ஸ்மிருதிகளால் சொல்லப்பட்டுளது. ஆசாரியர்களாலோ,

"नास्वादयेत्सुखं तत्र ।

அங்கு சுகத்தினை, உருசிக்கலாகாது'' என்று புத்தியினால் கிரகிக்கப்படும் தன்மை விலக்கப்படுகின்றது எனின் (சமாதானம்:—) இது தோஷமாகாது; நிரோதசுகம் புத்திக்கிராகிய மென்பது அங்கு நிஷேதிக்கப்படவில்லை; மற்றோ சமாதி விரோதியான எழுதல் வடிவ பராமரிசமே விலக்கப்படுகின்றதாகலின். எப்படிக் கோடைநாளில் மத்தியானத்தில் கங்கை மடுவில் மூழ்கியவனால் குளிர்ச்சியின் சுகம் அநுபவிக்கப் படுவதாயினும், அப்போது சொல்லமுடியாதோ, பின் வெளிப்பட்டவனால் சொல்லப்படுகின்றதோ, அல்லது எப்படிச் சுழுத்தியில் அதிசூக்ஷ்மமான அவித்தியா விருத்திகளால் ஸ்வரூப சுகம் அநுபவிக்கப்படுவதாயினும், சவிகற்பகமான அந்தக்கரண விருத்திஞானத்தினால் கிரகிக்கமுடியாதோ, விழித்தபோது ஸ்மிருதியினால் மிக வெளிப்படையாக ஆராயப்படுகின்றதோ, அதுபோலச் சமாதியில் விருத்தியின்றிய அல்லது சம்ஸ்காரமாத்திரமாய் மிஞ்சுந் தன்மையால் சூக்ஷ்மமான சித்தத்தினால் சுகாநுபவம் சுருதி ஸ்மிருதிகளில் சொல்லக் கருதியதாம். இப்பெருத்த சமாதி சுகத்தினை அநுபவிக்கிறேன் என்னும் இத்தன்மையதான சமாதியினின்று விழித்தவனது சவிகற்பகமான பராமரிசம் இங்கு உருசித்தலாம். அது (கௌடபாத) ஆசார்யர்களால் விலக்கப்பட்டதாம். அந்தத் தனது அபிப்பிராயத்தினை வெளிப்படுத்துதற்காக ''பிரஞ்ஞையினால் சங்கமில்லாதவனாகவேண்டும்'' என்று கூறியதாம். பிர=மிகுதியான, சவிகற்பகமான ஞானம் பிரஞ்ஞையாம். அதனோடு சங்கத்தை விடவேண்டும் அல்லது அவ்வடிவ சாதனத்தினால் சுகத்தினை உருசித்தல் அதனை வர்ணித்தல்முதலிய வடிவ ஆசக்தியை விலக்கவேண்டுமென்பதாம். சமாதியில் பிரஹ்மாநந்தத்தில் மூழ்கிய சித்தம் ஒருகால் சுகத்தினை உருசித்தற் பொருட்டாவது சீதம் வாதம் கொசு முதலியவற்றின் உபத்திரவத்தினாலாவது வெளிப்படுமாயின், அப்போது வெளிப்படும் சித்தத்தினை மறுபடியும் மறுபடியும் எப்படி நிச்சலமாகுமோ, அப்படிப் பரப்பிரஹ்மத்தோடு கூட ஒருமைப் படுத்தவேண்டும். அங்கு நிரோத முயற்சியே சாதனம். ஒருமையே ''எப்போது சித்தம் ஒடுங்கவில்லையோ'' என்பதனால் ஸ்பஷ்டமாக்கப்படுகின்றது. அசைவின்றியதும் எவ்விதத்தோற்ற

மின்றியதுமான" என்னும் பதங்க ளிரண்டினாலும் கஷாயமும் சுகாஸ்வாதமும் விலக்கப்பட்டனவாம். இலயம் விக்ஷேபம் கஷாயம் சுக(ரஸா)ஸ்வாத மின்றிய சித்தம் பிரஹ்மத்தில் விக்கினமின்றி நிலைத்ததாகின்றது. இவ்வபிப்பிராயங்கொண்டே கடவல்லிகளில்,

"यदा पञ्चावतिष्ठन्ते ज्ञानानि मनसा सह ।
बुद्धिश्च न विचेष्टेत तामाहुः परमां गतिम् ॥
तां योगमिति मन्यन्ते स्थिरामिन्द्रियधारणाम् ।
अप्रमत्तस्तदा भवति योगो हि प्रभवाप्ययौ ॥

எப்போது மனதோடு ஐந்து ஞானங்களும் நிற்கின்றனவோ, புத்தியும் சேஷ்டிக்கிறதில்லையோ, அதனை மேலான கதியென்று கூறுவர். ஸ்திரமான இந்திரிய தாரணையாகிய அதனையே யோகமென்று மதிக்கின்றனர். அப்போது பிரமாதமின்றியவனாகின்றான். யோகமே உற்பத்தி லயங்களாம். உபேக்ஷிக்கப்பட்டயோகம் இந்திரியவிருத்திகளின் உற்பத்தியைச் செய்கின்றது. அநுஷ்டிக்கப்பட்டது அவற்றின் இலயத்திற்கு ஏதுவாம். இதனானே யோகத்தின் ஸ்வரூப லக்ஷணத்தினை,

"योगश्चित्तवृत्तिनिरोधः ।

யோகம் சித்தவிருத்தி நிரோதமாம்" என்று சூத்திரிக்கின்றார். விருத்திகள் அளவிறந்தனவாகலின் நிரோதித்தல் முடியாததாமென்னும் சங்கையை நீக்குதற்கு அவை இவ்வளவின வென்று,

"वृत्तयः पञ्चतय्यः क्लिष्टा अक्लिष्टाः ।

கிலேசவடிவினவும் கிலேசமின்றியனவுமாகிய விருத்திகள் ஐந்தாம்" என்பதனால் கூறுகின்றார். இராகத்துவேஷாதி கிலேசவடிவினவாகிய ஆசுரவிருத்திகள் கிலிஷ்டங்களாம். இராகாதிகளின்றி தைவவிருத்திகள் கிலேசமின்றியனவாம். ஐந்தனுள்ளேயே கிலேசவடிவினவும், கிலேசமின்றியனவும் அடங்குமாயினும், கிலேசவடிவினவே

நிரோதிக்கத்தக்கனவாம் என்னும் மந்தபுத்தியுடையவனை விலக்குதற்காக, அவற்றோடு கூட கிலேசமின்றியனவும் உதாகரிக்கப்பட்டன. பெயரினாலும் இலக்ஷணத்தினாலும் விருத்தியினை விளக்குவதற்காக ஆறு சூத்திரங்களைக் கூறுகின்றார்:—

க. "प्रमाणविपर्ययविकल्पनिद्रास्मृतयः ।
பிரமாணம், விபரியயம், விகற்பம், நித்திரை, ஸ்மிருதி என்பன."

உ. "प्रत्यक्षानुमानागमाः प्रमाणानि ॥
பிரத்தியக்ஷம் அநுமானம் ஆகமம் என்பவை பிரமாணங்களாம்"

ரு. "विपर्ययो मिथ्याज्ञानमतद्रूपप्रतिष्ठम् ।
உண்மையல்லாத வடிவத்தில் நிலைத்ததான மித்தியா ஞானம் விபரியயமாம்."

சு. "शब्दज्ञानानुपाती वस्तुशून्यो विकल्पः ।
சப்த ஞானத்தினைத் தழுவியதாய் வஸ்து சூனியமானது விகற்பமாம் (இராகுவின் சிரசு என்பதுபோல)."

ரு. "अभावप्रत्ययालम्बना वृत्तिर्निद्रा ।
அபாவவுணர்ச்சிக்குப் பற்றுக்கோடான விருத்தி நித்திரையாம்."

சா. "अनुभूतविषयस्यासंप्रमोषः स्मृतिः ।
அநுபவிக்கப்பட்ட விஷயத்தின் மறைவின்மை ஸ்மிருதியாம்" என்பன. மறைப்பதாகிய எந்தத் தமசு உள்ளபோது வஸ்துவின் அபாவம் தோற்றுகிறதோ அந்தத் தமசு அபாவ பிரத்தியயமாம் (இன்மை யுணர்ச்சியாம்). தமோகுணத்தினை விஷயஞ்செய்வதான விருத்தி நித்திரை யெனப்படுகின்றது அநுபவிக்கப்பட்டதின் மறைவின்மையாவது அவ்வநுபவ ஜந்நியமான அநுசந்தானமாம். ஐவகை விருத்திகளின் நிரோத சாதனத்தினை,

"अभ्यासवैराग्याभ्यां तन्निरोधः ।
அப்பியாசம் வைராக்கிய மிரண்டினாலும் (சித்தவிருத்தியாகிய) அதன் நிரோதமாம்" என்று சூத்திரிக்கின்றார். எப்படித் தீவிர வேகத்தோடு கூடிய நதியின் பிரவாகத்தினை அணைகட்டுதலால்

தடுத்து, வாய்க்காலில் கொண்டுபோதலால் வயலுக்கெதிர்முகமாக மற்றோர் சூறக்கான பிரவாகம் (கண்ணிவாய்க்கால்) உண்டுபண்ணப் படுகின்றதோ அதுபோல வைராக்கியத்தினால் சித்த நதியின் விஷயப் பிரவாகத்தினை நீக்கித்தடுத்து, சமாதி யப்பியாசத்தினால் மிகச் சாந்த (அடக்க மான பிரவாகம் சம்பாதிக்கப்படுகின்றது. சங்கை:— மந்திரம் ஜபம் தேவதாத்கியான முதலியவற்றிற்குக் கிரியா ரூபத் தன்மையுளதாக ஆவிருத்தி லக்ஷணமாகிய அப்பியாசம் பொருந்தும்; சர்வ வியாபாரங்களின் ஒடுக்க வடிவினதாகிய சமாதியின் அப்பியாசம் என்ன இருக்கிறதென்னும் சங்கையை நீக்குதற்கு,

"तत्र स्थितौ यत्नोऽभ्यासः ।

அங்கு ஸ்திதியில் நிச்சலத் தன்மையாகிய நிரோதத்தில் எத்தனம் (மானஸ உற்சாகம்) அப்பியாசமாம்." என்று சூத்திரிக்கின்றார். இயல்பாகவே வெளிப்பிரவாக இயல்புடைய சித்தத்தினை நிரோதஞ் செய்வேன். என்னும் இத்தன்மைப் உற்சாகம் ஆவர்த்திக்க (மீண்டும் மீண்டும் திருப்ப)ப்படுவதாய் அப்பியாசமெனப்படுகின்றது. இவ் வப்பியாசம் இப்போது பிரவர்த்தித்ததாய், தான் திடமில்லாததா யிருந்துகொண்டு, அநாதியாகப் பிரவர்த்தித்துள்ள எழுதல் வாசனைகளை எப்படி அடக்கும்?. என்னும் ஆசங்கையை நீக்குதற்கு,

"स तु दीर्घकालनैरन्तर्यसत्कारासेवितो दृढभूमिः ।

அவ்வப்பியாசம் நீண்டகாலம் நிரந்தரம் ஆதரவோடு சேவிக்கப்பட்டதாய்த் திடபூமியினதாகின்றது," என்று சூத்திரிக்கின்றார். உலகத்தினர் மூடனது வசனத்தை "இருக்கின்ற வேதங்கள் நான்கே. அவற்றை யத்யயனஞ் செய்யச் சென்ற மாணவகனுக்கு மூன்று நாட்களாய்விட்டன. இதுவரையிலும் அவன் வரவில்லை" என்று உதாகரிக்கின்றனர். எப்போது நாட்களாலாவது மாசங்களாலாவது யோகசித்தியை விரும்புவானோ, அப்போது இந்த யோகி அந்தன்மையனே யாவன். வருஷங்களாலாவது ஜன்மங்களால்வது நீண்ட காலம் யோகம் சேவிக்கவேண்டியதாம். அவ்வாறே,

"अनेकजन्मसंसिद्धस्ततो याति परां गतिम् ।

அநேக ஜன்மங்களால் ஸம்சித்திபெற்றவன் அதன்பின் மேலானகதியை யடைகின்றான்.'' என்று ஸ்மிருதியிலும் கூறப்பட்டுள்ளது. நீண்டகாலம் சேவிக்கப்படுவதாயினும், விட்டு விட்டுச் சேவிக்கப்படுமாயின், அப்போது உண்டாகிய யோக சம்ஸ்காரங்கள் இடையிடையே உண்டாவனவாகிய விடுபட்ட காலத்தனவாகிய எழுகற் சம்ஸ்காரங்களால் அமிழ்த்தப்பட்டபோது, கண்டனவாசிரியரால் சொல்லப்பட்ட,

"अग्रे धावन्पश्चाल्लीयमानो विस्मरणशीलश्श्रुतवत्किमालम्बेत ।

முன்னே ஓடிப் பின்னொடுங்குகின்றவன் மறக்கு மியல்புடையவன் கேட்டதனைப்போல எதனைப்பற்றுவான்'' என்னும் நியாயம் நேரும். ஆதலால் நிரந்தரம் (இடையின்றி) சேவிக்கவேண்டும். அதுவும் ஆதரமாகிய சற்காரமின்றிச் சேவிக்கப்படின்,

"अकर्तृ कुर्वदप्येतच्चेतश्चेत्क्षीणवासनम् ।
दूरंगतमना जन्तुः कथासंश्रवणे यथा ॥

வாசனை யொழிந்த சித்தம் இதனைச் செய்தும் செய்யாததாம். தூரத்திற்சென்ற மனதுடைய புருஷன் கதைகேட்டலிற் போல.'' என்று வசிஷ்டர் கூறிய நியாயம் நேரும். ஆதரவின்மையாவது இலய விக்ஷேப கஷாய ரஸாஸ்வாதங்களைப் பரிகரியாமையாம். ஆதலால் ஆதரவோடு சேவிக்கவேண்டும். நீண்டகாலமுதலிய மூன்று விதத்தினாலும் சேவிக்கப்பட்ட திடபூமித்துவமாவது விஷய சுகவாசனையினாலாவது துக்க வாசனையினாலாவது அசைக்கமுடியாமையாம். அது பகவானால்,

"यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।
यस्मिन्स्थितो न दुःखेन गुरुणापि विचाल्यते ॥

எதனை யடைந்து, அதனைவிட அதிகமான லாபத்தினை மதியானோ, எதில் நிற்பவனைப் பெருத்த துக்கத்தினாலும் அசைக்கப்படானோ.'' என்று காட்டப்பட்டுளது, மற்றலாபத்திற்கு ஆதிக்கியமின்மையை வசிஷ்டர் கசவிருத்தாந்தத்தினால்,

"कचः कदाचिदुत्थाय समाधेः शान्तमानसः ।
एकान्ते समुवाचेदमेको गद्गदया गिरा ॥
किं करोमि क्व गच्छामि किं गृह्णामि त्यजामि किम् ।
आत्मना पूरितं विश्वं महाकल्पाम्बुना यथा ॥
बाह्याभ्यन्तरं देहे ह्यध ऊर्ध्वं च दिक्षु च ।
इत आत्मा ततो ह्यात्मा नास्त्यनात्ममयं जगत् ॥
न तदस्ति न यत्राहं न तदस्ति न यन्मयि ।
किमन्यदभिवाञ्छामि सर्वं संविन्मयं ततः ॥
स्फारब्रह्मामलाम्भोधिफेनाः सर्वे कुलाचलाः ।
चिदादित्यमहातेजोमृगतृष्णा जगच्छ्रियः ॥

கசன் ஒருகால் சமாதியினின்று எழுந்து சாந்தமனத்தனாய் ஏகாந்தத்தில் ஒருவனாய்த் தழுதழுத்த வாக்கினால் இதனைச் சொல்லலாயினான்:—என்ன செய்வேன்! எங்கு போவேன்! எதனைக் கொள்ளுவேன்! எதனை விடுவேன்! மகாகற்ப வெள்ளத்தினாற்போல எல்லாம் ஆத்மாவினால் பூரிக்கப்பட்டுளது. உள்ளிலும் வெளியிலும் தேகத்திலும் கீழும் மேலும் திக்குகளிலும் நிரம்பப்பட்டுளது. இதனால் ஆத்மத்தன்மையால் இங்கு ஆத்மாவுளது; அநாத்மமயமான ஜகத்தேயில்லை. எங்கு நானிரேனோ அத்தன்மையதொன்றில்லை. என்னிடத்தில் எஃது இராதோ, அத்தன்மையதொன்றில்லை. யாவும் சம்வித்துமயமாம், அதனால் வேறு எதனை விரும்புவேன்? விரிந்த பிரஹ்மமாகிய அமல சமுத்திரத்தின் நுரைகளாம் குலாசலங்கள் யாவும். சிற்சூரியனது பேரொளியாகிய கானலில் ஜலமாம் ஜகதைசுவரியம்." என்றும் உதாகரித்திருக்கின்றனர்.

பெருத்த துக்கத்தினாலும் சலிக்கப்படாமையைச் சிகித்துவஜனது மூன்றுவருஷத்துச் சமாதி விருத்தாந்தத்தினால் உதாகரித்திருக்கின்றனர்,

"निर्विकल्पसमाधिस्थं तत्रापश्यन्महीपतिम् ।
स्वपतं तावदेतस्माद्बोधयामि परात्पदात् ॥

इति संचिन्त्य चूडाला सिंहनादं चकार सा ।
भूयो भूयः प्रभारग्रे वनेचरभयप्रदम् ॥
न चचाल तदा राम यदा नादेन तेन सः ।
भूयो भूयः कृतेनापि तदा सा तं व्यचालयत् ॥
चालितः पातितोऽप्येष तदा नो बुबुधे बुधः ॥

அங்கு நிர்விகற்ப சமாதியிலிருக்கும் அரசனைக் கண்டாள். அப்போது தன் பதியை இப்பரபதத்தினின்று விழிப்பிப்பேன் என்று சிந்தித்து, சூடாலையாகிய அவள் வனசரங்கட்குப் பயத்தைத்தருவதான சிங்கநாதத்தினைக் கணவன்முன் அடிக்கடி செய்தாள். அடிக்கடி செய்யப்பட்ட அந்த நாதத்தினாலும் அவன் எப்போது அசையவில்லையோ, அப்போது அவள் அவனை அசைத்தாள். அப்போது அறிஞனான அவன் அசைக்கப்படினும் வீழ்த்தப்படினும் விழித்திலன்'' என்பதாம். பிரஹ்லாதர் விருத்தாந்தத்திலும் இதனையே

"इति संचिन्तयन्नेव प्रह्लादः परवीरहा ।
निर्विकल्पपरानन्दसमाधिं समुपाययौ ॥
निर्विकल्पसमाधिस्थश्चित्रार्पित इवाबभौ ।
पञ्चवर्षसहस्राणि पीनाङ्गोऽतिष्ठदेकदृक् ॥
महात्मन्संप्रबुध्यस्वेत्येवं विष्णुरुदाहरत् ।
पाञ्चजन्यं प्रदध्मौ च ध्वनयन्ककुभां गणम् ॥
महता तेन शब्देन वैष्णवप्राणजन्मना ।
बभूव संप्रबुद्धात्मा दानवेशः शनैः शनैः ॥

பரவீரர்களைக் கொல்லுபவனான பிரஹ்லாதன் இவ்வாறு சிந்தித்துக் கொண்டே நிர்விகற்ப பரானந்த சமாதியினை யடைந்தான். நிர்விகற்பசமாதியி லிருப்பவனாய்ச் சித்திரத் தமைக்கப்பட்டவன் போலானான். பருத்த அங்கமுள்ளவனாய் ஒரே பார்வையுடையவனாய் ஐயாயிர வருடங்களிருந்தான். விஷ்ணுவானவர் மகாத்மாவே! விழித்திடு என்றிவ்வாறு கூறினார். பின் திக்குகளெல்லாம் கிடுகிடுக்கும்படி பாஞ்சஜந்யத்தினை ஊதினார். விஷ்ணுவின் பிராணனினின்று

பிறந்ததான அப்பெருஞ்சத்தத்தால் தானவேசன் மெல்ல மெல்ல விழிப்புடையவனானன்." என்று கூறியிருக்கின்றார். இவ்வாறே வீதகவ்வியர் முதலியோர்களது சமாதியும் உதாகரிக்கத்தக்கதாம். வைராக்கியம் அபரம் பரம் என்று இருவகையினதாம். அபரம் யதமானம் வியதிரேகம் ஏகேந்திரியம் வசிகாரமென்னும் பேதத்தால் நால்வகையினதாம். அவற்றுள் முதல் மூன்றனையும் அர்த்தத்தினாற் சூத்திரித்து, நான்காவதனை நேரே சூத்திரிக்கின்றனர்,

"दृष्टानुश्रविकविषयवितृष्णस्य वशीकारसंज्ञा वैराग्यम् ।

காணப்படுவ (இகலோகத்த)னவும், கேட்கப்படுவ (பரலோகத்த)னவுமாகிய விஷயங்களில் ஆசையொழிந்தவனதாம் வசீகாரமென்னும் பெயருடைய வைராக்கியம்" என்பதனால். மாலை, சந்தனம், ஸ்திரீ, புத்திரன், மித்திரன், க்ஷேத்திரம், தனம் முதலியன காணப்படுவனவாம். வேதத்திற் சொல்லப்பட்டனவாகிய சுவர்க்காதிகள் கேட்கப்படுவனவாம். அங்கு ஆசை இரண்டிடத்துமுள்ளதாயினும் விவேக தாரதம்மியத்தால் யதமான முதலிய மூன்று வைராக்கியமாகின்றது. ௧. இந்த ஜகத்தில் சாரம் யாது? அசாரம் யாது என்று குருசாஸ்திரங்களால் அறிவேனென்னும் முயற்சி யதமானத்துவமாம். ௨. தனது சித்தத்தில் முன்னரே இருப்பனவாகிய தோஷங்களுள் அப்பியசிக்கப்படுகின்ற விவேகத்தினால் இவ்வளவு பக்குவமாயின. இவ்வளவு மிஞ்சியிருக்கின்றன என்று விவேகித்தல் வியதிரேகமாம். ௩. காணப்படுவனவுங் கேட்கப்படுவனவுமாகிய விஷயப் பிரவிஷயப் பிரவிருத்தியின் துக்க வடிவத்தன்மை ஞானத்தினால் அந்தப் பிரவிருத்தியினை விட்டு, மனதின் விருப்பமாத்திரமாக ஆசையிருத்தல் ஏகேந்திரியத்துவமாம். ௪. ஆசை நீங்கிய தன்மை வசீகாரமாம். இந்த அபரவைராக்கியம் அஷ்டாங்க யோகத்திற் பிரவிருத்திக்கசெய்யுந் தன்மையால் சம்பிரஞ்ஞாதத்திற்கு அந்தரங்கமாம்; அசம்பிரஞ்ஞாதத்திற்குப் பகிரங்கமாம். அதன் அந்தரங்கமான பரவைராக்கியத்தினை,

"तत्परं पुरुषख्यातेर्गुणवैतृण्यम् ।

புருஷ சாக்ஷாத்காரத்தினால் குணவியாபாரங்களில் ஆசையின்மை.". என்று சூத்திரிக்கின்றனர். சம்பிரஞ்ஞாத சமாதியின் தேர்ச்சி

யால் முக்குணவடிவ பிரதானத்தினின்று விவேகிக்கப்பட்ட புருஷனது கியாதியாகிய சாக்ஷாத்காரமுண்டாகிறது. அந்தச் சாக்ஷாத்காரத்தினால் முக்குண வியவகாரமுழுவதினும் ஆசையில்லாமை எதுவோ அது பரவைராக்கியமாம். அதன் தாரதம்மியத்தினால் சமாதியின் சீக்கிரத்துவ தாரதம்மியமாம் என்பதனை,

“तीव्रसंवेगानामासन्नः समाधिलाभः ।

தீவிர வைராக்கியங்கட்குச் சமீபித்த சமாதிலாபமாம்” என்று சூத்திரிக்கின்றனர். அவ்வைராக்கியங்களின் பேதத்தால் யோகிகள் மிருது வைராக்கிய முடையோர், மத்திய வைராக்கிய முடையோர், தீவிர வைராக்கிய முடையோரென மூவகையின ராவர். அவர்கட்கு அற்ப காலத்தினாலே சமாதி சித்திக்கு மென்பது பொருள். தீவிர வைராக்கிய முடையவர்களிற்றானே சமாதி தாரதம்மியத்தினை,

“मृदुमध्यातिमात्रत्वात्ततोऽपि विशेषः ।

மிருது மத்திய அதிமாத்திரத் தன்மையால் அதனினும் விசேஷமாம்” என்று சூத்திரிக்கின்றார். மிருது தீவிரம் மத்திய தீவிரம் அதிமாத்திர தீவிரமென்பவற்றுள் முந்தியதைவிட பிந்தியவற்றிற்குச் சீக்கிரமாகச் சித்தி காணத்தக்கதாம். உத்தமோத்தமர்களான ஜநகர் பிரஹ்லாதர் முதலியோர் அதிமாத்திர தீவிரமுடையோர்; முகூர்த்தமாத்திர விசாரத்தினால் திடசமாதி பெற்றமையால். அதமாதமர்களான உத்தாலகர் முதலியோர் மிருது சம்வேக முடையவராவர், நீண்ட பிரயாசத்தினால் அத்திட சமாதியினைப் பெற்றமையால். இவ்வாறு மற்றையோரும் தக்கபடி பொருத்திக் காணத்தக்கவ ராவர். அந்த அதிமாத்திர தீவிரமுடையவனுக்குத் திடபூமியான அசம்பிரஜ்ஞாத சமாதி கிடைத்தபோது மறுபடியும் எழமுடியாததாய் மனது நசிக்கின்றது. மனோநாசத்தினால் வாசனாக்ஷயம் இரக்ஷிக்கப்பட்டபோது ஜீவன்முக்தி செவ்வையாய் நிலைத்ததாகின்றது. மனோநாசத்தினால் விதேகமுக்தியே யாம்; ஜீவன்முக்தி யன்றென்று சங்கிக்கலாகாது. பிரசினோத்தரங்களால் அதன் நிர்ணய மிருத்தலின்:—

श्रीरामः ॥ “विवेकाभ्युदयाच्चित्तस्वरूपेऽन्तर्हिते मुने ।
मैत्र्यादयो गुणाः कुत्र जायन्ते योगिनां वद ॥

முநிவரே ! விவேகமுதயமாவதால் சித்தஸ்வரூபம் மறைபட்டபோது யோகிகட்கு மைத்திரியாதி குணங்கள் எங்கு பிறக்கின்றன சொல்லி யருள்வீராக."

"वसिष्ठः ॥ द्विविधश्चित्तनाशोऽस्ति सरूपोऽरूप एव च ।
जीवन्मुक्तौ सरूपः स्यादरूपोऽदेहमुक्तितः ॥
प्राकृतं गुणसंभारं समेत्य बहुमन्यते ।
सुखदुःखाद्यवष्टभ्य विद्यमानं मनो विदुः ॥
चेतसः कथिता सत्ता मया रघुकुलोद्वह ।
अस्य नाशमिदानीं त्वं शृणु प्रश्नविदां वर ॥
सुखदुःखदशा धीरं साम्यान्न प्रोद्धरन्ति यम् ।
निःश्वासा इव शैलेन्द्रं तस्य चित्तं मृतं विदुः ॥
आपत्कार्पण्यमुत्साहो मदो मान्द्यं महोत्सवः ।
यं नयन्ति न वैरूप्यं तस्य नष्टं मनो विदुः ॥
चित्तनाशाभिधानं हि यदा नश्यति राघव ।
मैत्र्यादिभिर्गुणैर्युक्तं तदा सत्त्वमुदेत्यलम् ॥
भूयोजन्मविनिर्मुक्तं जीवन्मुक्तस्य तन्मनः ।
सरूपोऽसौ मनोनाशो जीवन्मुक्तस्य विद्यते ॥
अरूपस्तु मनोनाशो यो मयोक्तो रघूद्वह ।
विदेहमुक्तावेवासौ विद्यते निष्कलात्मनः ॥
समग्राग्र्यगुणाधारमपि सत्त्वं प्रलीयते ।
विदेहमुक्तावमले पदे परमपावने ॥

வசிஷ்டர்:—சித்தநாசம் சரூபம் அரூபம் என்று இருவகையினதாம். ஜீவன்முக்தியில் சரூபமும் தேகநீக்கத்தினல் (விதேகமுக்தியில்) இருப்பது அரூபமுமாம். பிரகிருதிகாரியமான குணக்கூட்டங்களைச் செவ்வையா யடைந்து, சுகதுக்காதிகளை வேண்டியவாறு சத்தியமாகத் துணிந்து நினைக்கின்றான். (அந்த அவனது மனனத்தினையே) இருப்பதான மனதென்று அறிவர். இரகுகுலசிரேஷ்டனே ! சித்தத்தின் இருப்பானது என்னால் சொல்லப்பட்டது. வினவுவோர்களில் சிரேஷ்டனே ! இதன் நாசத்தினை இப்போது நீ கேள். சுகதுக்க தசைகள் எந்தத்தீரனை நிசுவாசங்கள் மேருவை யசைக்காததுபோல

சமத்தன்மையி னின்றும் அசைக்கமாட்டாவோ, அவனுடைய சித்தத்தினை மரித்ததென்று அறிவர். ஆபத்து, கிருபணத்தன்மை, உற்சாகம், மதம், மந்தத்தன்மை, மகோற்சவம் என்பவை எவனை விரூபத்தன்மைக்குக் கொண்டுசெல்லா (விகாரப்படுத்தா)வோ, அவனுடைய மனம் நஷ்டமானதென்று அறிவர். இராகவ! எப்போது ஆசையின் வைப்பாகிய சித்தம் நிச்சயமாக நசிக்கின்றதோ, அப்போது மைத்திரியாதி குணங்களோடு கூடியதான சத்துவம் உதயமாகின்றது. ஜீவன்முக்தனது அந்த மனம் மறுபடியும் பிறத்தலி னின்று விடுபட்டதாம். இந்த ஸரூபமான மனோநாசம் ஜீவன்முக்தனுக்குளது. இரகுசிரேஷ்டனே! என்றுச் சொல்லப்பட்ட அரூபமான மனோநாசம் எதுவோ, நிஷ்கலவடிவமான அது விதேகமுக்தியில் நிஷ்களாத்மாவுக்கு உளது. சகல மூதன்மைக் குணங்கட்கு ஆதாரமாயினும் சத்துவம் விதேகமுக்தியில் பரமபாவனமான அமல பதத்தில் ஒடுங்குகிறது,

"संशान्तदुःखमजडात्मकमेकरूपमानन्दमन्थरमपेतरजस्तमो यत् ।
आकाशकोशतनवोऽतनवो महान्तस्तस्मिन्पदे गलितचित्तलवा वसन्ति ॥

துக்கங்களொழிந்ததும், அஜடவடிவினதும், ஏகரூபமும், ஆநந்த நிதியும், இராஜசு, தமசு நீங்கியதும் எதுவோ, அப்பதத்தில் ஆகாய கோச சரீரமுள்ளவர்களும் சரீரமில்லாதவர்களும் மனது அற்பமுமில்லாது கரைந்தவர்களுமான மகான்கள் வசிக்கின்றனர்." என்று,

"जीवन्मुक्ता न मुह्यन्ति सुखदुःखरसस्थितौ ।
प्राकृतेनार्थकारेण किंचित्कुर्वन्ति वा न वा ॥

ஜீவன்முக்தர்கள் சுகதுக்க ரஸஸ்திதியில் மோகியார். பிராகிருதமான பிரயோஜனந் தருவதனால் ஒன்றைச் செய்வார்கள் அல்லது செய்யார்கள்" ஆதலால் சரூபமான மனோநாசம் ஜீவன்முக்தி சாதனமென்பது நிலைத்தது.

इति श्रीमद्विद्यारण्यप्रणीते जीवन्मुक्तिविवेके
तृतीयं मनोनाशप्रकरणम् ॥ ३ ॥

மனோநாச நிரூபணமென்னும்
மூன்றாவது பிரகரணம் முடிந்தது.

---

உ

ஸ்ரீ கணேசாய நம:

—: நான்காவது :—

# ஸ்வரூப சித்திப் பிரகாணம்.

இந்த ஜீவன்முக்தி யாது? அதில் பிரமாணம் யாது? அதன் சித்தி எவ்வாறுண்டாம்? என்னும் இம்மூன்று பிரசினங்கட்கும் உத்தரம் நிரூபிக்கப்பட்டது. அதன் சித்தியால் பிரயோஜனம் யாது? என்னும் இந்நான்காவது பிரசினத்தின் உத்தரம் இப்போது நிரூபிக்கப்படுகின்றது. ஞானரக்ஷை, தபசு, விசம்வாதமின்மை, துக்கநாசம், சுகாவிற்பாவம் என்பன ஐந்து பிரயோஜனங்களாம். க. சங்கை:— பிரமாணத்தி னுண்டானதான தத்துவஞானத்திற்கு இரக்ஷையை யபேக்ஷிக்கும்படியான பாதப்பிரசங்கம் என்பது யாதெனின், சொல்லப்படுகின்றது. சித்தவிசிராந்தி யில்லாதபோது சம்சயவிபரீதங்கள் பொருந்தக்கூடும். அவ்வாறே, தத்துவஞானியாகிய இராகவரது விசிராந்திக்கு முந்தியதான சம்சயத்தினை விசுவாமித்திரர்,

"न राघव तवास्त्यन्यज्ज्ञेयं ज्ञानवतां वर ।
स्वस्यैव सूक्ष्मया बुद्ध्या सर्वं विज्ञातवानसि ॥
भगवद्व्यासपुत्रस्य शुकस्येव मतिस्तव ।
विश्रान्तिमात्रमेवात्र ज्ञातज्ञेयाऽप्यपेक्षते ॥

இராகவ! ஞானமுடையவர்களுள் மேலானவனே! உனக்கு அறிய வேண்டியது வேறில்லை. உனது சூக்ஷ்மமான புத்தியினாலேயே விசேஷமா யறிந்தவனாயிருக்கிறாய். பகவானாகிய வியாசருடைய புத்திரரான சுகருடையதைப் போன்றதாம் உனது புத்தி. அறியத்தக்கதை அறிந்ததா மாயினும் விசிராந்திமாத்திரத்தினையே இங்கு அபேக்ஷிக்கின்றது." என்று கூறியிருக்கின்றனர். சுகரோ தானாகவே ஆதியில் தத்துவத்தை யறிந்து, அதில் சம்சயப்பட்டவராய்ப் பிதாவினைக் கேட்டுப் பிதாவினாலும் அவ்வாறே உபதேசிக்

கப்பட்டார். அப்படியானும் சம்சயமுடையவராய் ஜநகரைச் சரணடைந்து, அவராலும் அவ்வாறே உபதேசிக்கப்பட்டவராய் அவரை நோக்கிச் செல்லலாயினர்." அது,

श्रीशुकः ॥ स्वयमेव मया पूर्वमेतज्ज्ञातं विवेकतः ।
एतदेव च पृष्टेन पित्रा मे समुदाहृतम् ॥
भवताऽप्येष एवार्थः कथितो वाग्विदां वर ।
एष एव च वाक्यार्थः शास्त्रेषु परिदृश्यते ॥
यथाऽयं स्वविकल्पोत्थः स्वविकल्पपरिक्षयात् ।
क्षीयते दग्धसंसारो निःसार इति निश्चयः ॥
तत्किमेतन्महाबाहो सत्यं ब्रूहि ममाचलम् ।
त्वत्तो विश्राममाप्नोमि चेतसा भ्रमितं जगत् ॥

जनकः ॥ नातः परतरः कश्चिन्निश्चयोऽस्त्यपरो मुने ।
स्वयमेव त्वया ज्ञातं गुरुतश्च पुनः श्रुतम् ॥
अव्युच्छिन्नाश्चिदात्मैकः पुमानस्तीह नेतरः ।
स्वसंकल्पवशाद्बद्धो निःसंकल्पस्तु मुच्यते ॥
मुने त्वया स्फुटं ज्ञातं ज्ञेयं स्वस्य महात्मनः ।
भोगेभ्योऽप्यरतिर्जाता दृश्याद्वा सकलादिह ॥
प्राप्तं प्राप्तव्यमखिलं भवता पूर्णचेतसा
न दृश्ये यतसि ब्रह्मन्मुक्तस्त्वं भ्रान्तिमुत्सृज ॥
अनुशिष्टः स इत्येवं जनकेन महात्मना ।
विशश्राम शुकस्तूष्णीं स्वस्थे परमवस्तुनि ॥
वीतशोकभयायासो निरीहश्छिन्नसंशयः ।
जगाम शिखरं मेरोः समाध्यर्थमनिन्दितम् ।
तत्र वर्षसहस्राणि निर्विकल्पसमाधिना ।
दश स्थित्वा शशामासावात्मन्यस्नेहदीपवत् ॥

ஸ்ரீ சுகர்:—முன் இது என்றால் விவேகத்தினால் தானாகவே அறியப் பட்டது. இதுவே என்னாற் கேட்கப்பட்டவரான பிதாவினால் செவ்வையாய்ச் சொல்லப்பட்டது. வாக்குணர்ச்சி யுடையோரிற் சிறந்தவரே! இவ்வர்த்தமே தம்மாலும் சொல்லப்பட்டது. இதுவே சாஸ்திரங்களிலும் வாக்கியார்த்தமாகக் காணப்படுகின்றது. இது தனது விகற்பத்தா லெழுந்ததுபோலத் தனது விகற்பத்திய க்ஷயத் தால் கெடுகின்றது. தகிக்கப்பட்ட சம்சாரம் கெடுகின்றது சார மற்றது என்பது நிச்சயம். மகாபாகுவே! இது என்ன சத்தியமா? தாம் எனக்குச் சலியாதவண்ணம் சொல்லி யருள்வீராக. தம்மிடத் தினின்று விசிராந்தியினை யடைகின்றேன். சித்தத்தினால் பிரமிப் பிக்கப்பட்டதாம் ஜகத்து. ஜநகர்:—முநிவரே! இதனின் மேலான மற்றோர் நிச்சயமில்லை. தானாகவே தம்மால் அறியப்பட்டது. மறு படி குருவினின்றும் கேட்கப்பட்டது. இடையின்றிய சிதாத்மா வாகிய ஒரு புருஷன் இங்கு உளன்; வேறில்லை. தனது சங்கற்ப வசத்தினால் பந்தமுடையவனாகின்றான். சங்கற்பமில்லாதவன் முக்த னாகின்றான். அதனால் மகாத்மாவாகிய தமது ஞேயம் தம்மால் தெளிவாய் அறியப்பட்டுளது. போகங்களினின்றும் அல்லது இங்கு சகல திருசியங்களினின்றும் வைராக்கிய முண்டாயிருக்கிறது. பூர்ணசித்தமுடைய தம்மால் பெறவேண்டியது முழுவதும் பெறப் பட்டது. நீர் திருசியத்தில் முயலுகின்றிலீர். பிராமணரே! நீர் முக்தர்; பிராந்தியைவிட்டு விடும். என்று இவ்வாறு மகாத்மா வாகிய ஜநகரால் உபதேசிக்கப் பட்டவரான அந்தச் சுகர் ஸ்வஸ்த மான (தன்னிலிருப்பதான) பரமவஸ்துவில் சும்மா விசிராந்தியடைந் தார். சோகம் பயம் வருத்தமென்பவை நீங்கியவராய் சேஷ்டை யற்றவராய், ஸம்சயமொழிந்தவராய் நிந்திக்கப்படாததான சமாதி யின் பொருட்டு, மேருவின் சிகரத்திற்குச் சென்றார். அங்குப் பதினாயிரம் வருஷங்கள் நிர்விகற்ப சமாதியோடு இருந்து அவர் ஆத்மாவில் எண்ணெயின்றிய தீபம்போலச் சாந்தியடைந்தார்.'' என்பதாம். ஆதலால் தத்துவ மறியப்படினும் விசிராந்தி யில்லாத வனுக்கு சுகராகவர்களுக்குப்போல சம்சயம் உண்டாகும். அதுவும் அஞ்ஞானத்தினைப்போல மோக்ஷத்திற்குப் பிரதிபந்தகமாம். இத னாற்றான் பகவானால்,

"अज्ञश्चाश्रद्दधानश्च संशयात्मा विनश्यति ।
नायं लोकोऽस्ति न परो न सुखं संशयात्मनः ॥

அஞ்ஞனும் சிரத்தை யில்லாதவனும் சம்சய சித்தமுள்ளவனும் கெடுகின்றான். சம்சய சித்தமுள்ளவனுக்கு இந்த லோகமுமில்லை; பரலோகமுமில்லை; சுகமுமில்லை" என்று சொல்லப்பட்டுளது. சிரத்தை யின்மையாவது விபரியயம். அது மேற்சொல்லப்படும். அஞ்ஞான விபரீதங்கள் மோக்ஷமாத்திர விரோதிகளாம் சம்சயமோ போகம் மோக்ஷ மிரண்டற்கும் விரோதியாம்; அது பரஸ்பர விரோத முடைய பக்ஷமிரண்டனை யவலம்பிப்பதாயிருத்தலின். எப்போது சம்ஸார சுகத்திற்காகப் பிரவிருத்தி யுண்டாகிறதோ, அப்போது மோக்ஷமார்க்கத்திலுண்டாகும் புத்தி அதனைத் தடுக்கின்றது. எப்போது மோக்ஷமார்க்கத்தில் பிரவிருத்தியுண்டாகிறதோ, அப்போது சம்ஸாரபுத்தி அதனைத் தடுக்கின்றது. ஆதலால் சம்சயமுடையவனுக்குச் சிறிதும் சுகமில்லையென்று முமுக்ஷுவால் சம்சயங்கள் முற்றும் சேதிக்கத்தக்கனவாம். இதனுற்றான் சுருதியில்,

"छिद्यन्ते सर्वसंशयाः ।

சர்வ சம்சயங்களும் சேதிக்கப்படுகின்றன" என்று கேட்கப்படுகின்றது. விபரியயத்திற்கும் நிதாகர் உதாரணமாவர்:—ரிபுமுனிவர் பரமகருணையால் நிதாகருடைய வீட்டிற்குச் சென்று வெகுவிதமாக அவருக்குப் போதித்துச் சென்றனர். போதிக்கப்படினும், அவரால் உபதேசிக்கப்பட்ட வஸ்துவில் சிரத்தையில்லாதவரான நிதாகர் கர்மங்கள் பரமபுருஷார்த்த ஹேதுவா மென்னும் விபரியயத்தினை யடைந்து, கர்மாநுஷ்டானத்தில் முன்போலவே பிரவிருத்தாரானர். அக்குருவானவர் சிஷ்யனுக்குப் பரம புருஷார்த்தத்தினின்றும் நழுவுதலுண்டாகலாகா தென்னும் கிருபையினால் மறுபடியும் வந்து போதித்தனர். அப்போதும் விபரியயத்தினை விட்டாரில்லை. மூன்றாவதான போதிப்பினால் விபரியயத்தினை விட்டு விசிராந்தியினை யடைந்தார். அசம்பாவனை விபரீதபாவனை வடிவங்களான சம்சய விபரியயங்களால் தத்துவஞானத்தின் பயன் பிரதிபந்திக்கப்படுகின்றது. அது பராசரரால்,

"मणिमन्त्रौषधैर्वह्निः सुदीप्तोऽपि यथेन्धनम् ।
प्रदग्धुं नैव शक्तः स्यात्प्रतिबद्धस्तथैव च ॥
ज्ञानाग्निरऽपि संजातः सुदीप्तः सुदृढोपि च ।
प्रदग्धुं नैव शक्तः स्यात्प्रतिबद्धस्तु कल्मषम् ॥
भावना विपरीता या या चासंभावना शुक ।
कुरुते प्रतिबन्धं सा तत्त्वज्ञानस्य नापरम् ॥

மணிமந்திர ஔஷதங்களால் பிரதிபந்திக்கப்பட்ட அக்கினி நன்றாய்க் கொளுத்தப்பட்டதாயினும் எப்படி விறகினை எரிக்கச் சக்தியற்றதாகின்றதோ, அப்படியே பிரதிபந்திக்கப்பட்ட ஞானாக்கினி நன்றாயுண்டானதும் நன்றாய்ப் பிரகாசிக்கப்பட்டதும் திடமானதுமாயிருக்கினும், கல்மஷ(அஞ்ஞான)த்தினை எரிக்கக்கூடியதே யாகாது. சுக! விபரீதபாவனை எதுவோ, அசம்பாவனை எதுவோ, அது தத்துவ ஞானத்திற்குப் பிரதிபந்தகமாம்; பிறிதன்று." என்று சொல்லப்பட்டுளது. ஆதலால் விசிராந்தியில்லாத சித்தத்தின் சம்சயவிபரீயப் பிரசங்கத்தால் தத்துவஞானத்திற்கு (தன்)பயனைப் பிரதிபந்தித்தல் வடிவ பாதத்தினின்றும் இரக்ஷித்தலானது அபேக்ஷிக்கப்படுகின்றது. விசிராந்த சித்தமுடையவனுக்கு மனோநாசத்தினால் எப்போது ஜகத்தே ஒடுங்கிவிடுகின்றதோ, அப்போது சம்சய விபரியங்களின் பிரசங்க மென்ன? ஜகத்தோற்ற மின்றிய பிரஹ்மஞானிக்குத் தேகவியவகாரமும் பிரயத்தனமின்றியே பரமேசுவரனாற் பிரேரிக்கப்பட்ட பிராணவாயுவினால் நிகழும். இதனையே சந்தோகர்கள்.

"नोपजनं स्मरन्निदं शरीरं स यथा प्रयोग्य
आचरणे युक्त एवमेवायमस्मिञ्शरीरे प्राणो युक्तः ॥

அவன் (பிரஹ்மஞானி) ஜனங்களின் சமீபத்திருப்பதான இச்சரீரத்தினை ஸ்மரியான். எப்படிப் பிரயோகிக்கப்பட்டது ஆசரணத்தில் செலுத்தப்பட்டதாகின்றதோ அவ்வாறே இச்சரீரத்தில் பிராணன் செலுத்தப்பட்டதா யிருக்கும்" என்று சுருதிவாக்கியத்தாற் கூறுகின்றனர். பக்கத்திலிருப்பவர்களே தத்துவஞானியின் சரீரத்

இனைக் காண்கின்றனர்; தானே மனதின்றியவனா யிருத்தலால் என்னுடையது இச்சரீரம் என்று ஸ்மரியான். பிரயோகிக்கப்பட்டது அதாவது இரதம் வண்டி முதலியவற்றை இழுத்துச் செல்லுதலில் பிரயோகித்தற்குரியதாய்ச் சிக்ஷிக்கப்பட்டுள்ள குதிரை எருது முதலியவற்றில் ஒன்று. அது எப்படிச் சாரதியினால் மார்க்கத்தின் ஆசாரணத்தில் பிரேரிக்கப்பட்டதாய் மறுபடியும் மறுபடியும் சாரதியின் பிரயத்தனத்தை அபேக்ஷியாமல் தானாகவே இரதம் வண்டிமுதலியவற்றை முன்னிருப்பதான கிராமத்திற்குக் கொண்டு செல்லுகின்றதோ, அவ்வாறே இப்பிராணவாயு பரமேசுவரனால் இச்சரீரத்தில் பிரேரிக்கப்பட்டதாய் ஜீவப்பிரயத்தனம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் வியவகாரத்தை நிர்வகிக்கின்றது. பாகவதத்திலும்,

"देहं विनश्वरमवस्थितमुत्थितं वा सिद्धो न पश्यति यतोऽध्यगमत्स्वरूपम् ।
दैवादुपेतमथ दैववशादपेतं वासो यथा परिकृतं मदिरामदान्धः ॥

எதனால் ஸ்வரூபத்தினை அடைந்திருக்கின்றானோ அதனால் சித்திபெற்றவன் அழியுமியல்பினதான தேகம் இருந்தாலும் எழுந்தாலும் ஊழ்வசத்தால் கூடியிருந்தாலும் ஊழ்வசத்தால் நீங்கினாலும் அறியான். கள்வெறியால் குருடானவன் இடையில் வஸ்திரம் இருப்பதும் இல்லாததும் அறியாததுபோல்." என்று ஸ்மரிக்கப்படுகின்றது. வசிஷ்டரும்,

"पार्श्वस्थबोधिताः सन्तः पूर्वाचारक्रमागतम् ।
आचारमाचरन्त्येव सुप्तबुद्धवदक्षताः ॥

பக்கத்திருப்பவர்களால் விழிப்பிக்கப்பட்டவர்களான் சாதுக்கள் குறைவின்றியவர்களாய்ப் பூர்வாசாரக்கிரமத்தால் வந்த ஆசாரத்தினைத் தூங்கிவிழித்தவனைப்போல அநுஷ்டிக்கவே செய்வர்." என்று கூறுகின்றார். "சித்திபெற்றவன் அறியான்" "ஆசாரத்தினை அநுஷ்டிக்கவே செய்வர்." என்னும் இரண்டற்கும் ஒன்றற்கொன்று விரோதமுளதெனின், இல்லை, விசிராந்தி தாரதம்மியத்தால் வியவஸ்தை பொருந்துதலால். அத்தாரதம்மியத்தின் அபிப்பிராயங்கொண்டே சுருதி,

"आत्मक्रीड आत्मरतिः क्रियावानेष ब्रह्मविदां वरिष्ठः ।

ஆத்மாவில் கிரீடிப்பவனும், ஆத்மாவில் இரமிப்பவனும், கிரியை யுடையவனுமான இவன் பிரஹ்மவித்துக்களுள் வரிஷ்டன்" என்று கேட்கப்படுகின்றது. இங்கு நால்வர் காணப்படுகின்றனர். பிரஹ்ம வித்து முதலாமவன். பிரஹ்மவித்துவரன் இரண்டாமவன். பிரஹ்மவித்துவரீயான் மூன்றாமவன். பிரஹ்மவித்துவரிஷ்டன் நாலாமவன். இவர்கள் யோகபூமி ஏழனுள் நான்காம் பூமிதொட்டுக் கிரமமாக நான்கு பூமிகளை யடைந்தவர்கள் என்று அறியவேண்டும். பூமிகள் வசிஷ்டரால்,

"ज्ञानभूमिः शुभेच्छा स्यात्प्रथमा समुदाहृता ।
विचारणा द्वितीया स्यात्तृतीया तनुमानसा ॥
सत्त्वापत्तिश्चतुर्थी स्यात्ततोऽसंसक्तिनामिका ।
पदार्थाभाविनी षष्ठी सप्तमी तुर्यगा स्मृता ॥"
"स्थितः किं मूढ एवास्मि प्रेक्षेऽहं शास्त्रसज्जनैः ।
वैराग्यशुभयोरिच्छा प्रथमा प्रोच्यते बुधैः ॥
शास्त्रसज्जनसंपर्कैर्वैराग्याभ्यासपूर्वकम् ।
सद्विचारप्रवृत्तिर्या प्रोच्यते सा विचारणा ॥
विचारणाशुभेच्छाभ्यामिन्द्रियार्थेष्वसक्तता ।
यत्र सा तनुताभेति प्रोच्यते तनुमानसा ॥
भूमिकात्रितयाभ्यासाच्चित्तेऽर्थविरतेर्वशात् ।
सत्त्वात्मनि स्थितिः शुद्धे सत्त्वापत्तिरुदाहृता ॥
दशाचतुष्टयाभ्यासादसंसर्गफला च या ।
रूढसत्त्वचमत्कारा प्रोक्ताऽसंसक्तिनामिका ॥
भूमिकापञ्चकाभ्यासात्स्वात्मारामतया भृशम् ।
आभ्यन्तराणां बाह्यानां पदार्थानामभावनात् ॥
परप्रयुक्तेन चिरप्रयत्नेनावबोधनम् ।
पदार्थाभाविनी नाम षष्ठी भवति भूमिका ॥

भूमिषट्क चिराभ्यास द्भेदस्यानुलम्भनात् ।

यत्स्वभावैकनिष्ठत्वं सा ज्ञेया तुर्यगा स्थितिः ॥

முதலாவதாகச் சொல்லப்பட்ட ஞானபூமி சுபேச்சையாம். இரண்டாவது விசாரணையாம். மூன்றாவது தநுமானஸையாம். நான்காவது சத்துவாபத்தியாம். அதன்பின் (ஐந்தாவது) அசம்சக்தி யென்னும் பெயருடையதாம். ஆறாவது பதார்த்தபாவினியாம், ஏழாவது துரியகா வென்று கருதப்பட்டதாம்." "என்ன மூடனாகவே இருந்துவிட்டேன், சாஸ்திரசற்ஜனர்களால் யான் காண்பேன் என்னும் வைராக்கியம் சுபமிரண்டன் இச்சை முதலாவது (சுபேச்சை) என்று அறிஞர்களாற் சொல்லப்படுகின்றது. சாஸ்திர சற்ஜனச் சேர்க்கையால் வைராக்கி யாப்பியாசபூர்வகமான சத்விசாரப்பிரவிருத்தி எதுவோ அது விசாரணை யெனப்படுகின்றது. விசாரணை சுபேச்சை யிரண்டினாலும் இந்திரியவிஷயங்களிற் பற்றின்மையாகிய அது எதில் சூக்ஷம (அற்ப)த்தன்மையை யடை(உதிக்)கின்றதோ அது தநுமானஸை யென்று சொல்லப்படுகின்றது. பூமிகை மூன்றன் அப்பியாசத்தினால் விஷய வைராக்கிய வசத்தால் சித்தத்தில் சுத்தமான சத்துவமாகிய ஆத்மாவில் நிலைத்தல் சத்துவாபத்தி என்று சொல்லப்படுகின்றது. பூமி நான்கன் அப்பியாசத்தினால் சம்ஸர்கமின்றிய பயனுடையதும் ஏறிய சத்வசமத்காரமுடையதும் புத்தியிலேறிய சத்துவகுண ஜந்யமான மீண்டு மீண்டு உண்டாகும் நிர்விகற்ப ஸ்திதியின் சாமர்த்தியமுடையதுமான பூமி எதுவோ அது அசம்சக்தியென்னும் பெயருடையதாம். ஐந்து பூமிகளின் அப்பியாசத்தால் மிகுந்த சுவாத்மாராமத்தன்மையால் உள் வெளிப் பதார்த்தங்கள் தோற்றாமையால் பிறரால் எழுப்பப்படுவதான நீண்ட பிரயத்தனத்தால் விழித்தல் பதார்த்தாபாவினி யென்னும் ஆறாவது பூமியாம். பூமி ஆறின் நெடுங்கால அப்பியாசத்தினால் பேதம் தெரியாமையின் ஸ்வபாவமொன்றன் கண்ணே நிலைத்ததன்மை எதுவோ அது துரியகா என்னும் ஸ்திதியாக அறியத்தக்கதாம் என்று சொல்லப்பட்டுளது. இவற்றுள், மூன்று பூமி பிரஹ்மவித்தையின் சாதனமேயாம். வித்தியாகோடியில் (ஞானபக்ஷத்தில்) அடங்காது; பூமி மூன்றிலும் பேத சத்தியத்துவ புத்தி நீக்கப்

படாததாயிருத்தலின், இதனாற்றான் இது ஜாகரணமென்று சொல்லப்படுகின்றது. அது,

"भूमिकात्रितयं त्वेतद्राम जाग्रदिति स्थितम् ।
यथावद्भेदबुद्ध्येदं जगज्जाग्रति दृश्यते ॥

இராமா! இந்தப்பூமி மூன்றும் ஜாக்கிரத்து என்று நிலைத்தது. பேதபுத்தியினால் இந்த ஜகத்து உள்ளவாறு ஜாக்கிரத்தில் காணப்படுகின்றது." என்று சொல்லப்பட்டுளது. அதன்பின் வேதாந்தவாக்கியத்தினால் நிர்விகல்பமான பிரஹ்மாத்ம ஐக்கிய சாக்ஷாத்காரமாகிய பயன்வடிவ சத்துவாபத்தியென்னும் நான்காம்பூமியாம். நான்காவதுபூமியில் சர்வஜகத்தின் உபாதானமான பிரஹ்மத்தின் வாஸ்தவமான அத்விதீயசத்தாஸ்வபாவத்தினை நிச்சயித்து, பிரஹ்மத்தில் ஆரோபிக்கப்பட்டனவும் ஜகத்தென்னும் சொற்பொருள்களுமான நாமம் ரூபமிரண்டன் மித்தியாத்துவத்தினை அறிகின்றான். முமுக்ஷுவுக்கு முற்கூறிய ஜாகரணத்தினை அபேக்ஷித்து இப்பூமி சொப்பனமாம். அதனை,

"अद्वैते स्थैर्यमायाते द्वैते च प्रशमं गते ।
पश्यन्ति स्वप्नवल्लोकं चतुर्थीं भूमिकामिताः ॥
विच्छिन्नशरदभ्रांशविलायं प्रविलीयते ।
सत्तावशेष एवास्ते चतुर्थीं भूमिकामितः ॥
*स्वस्वेतरं च सन्मात्रं यत्प्रबोधादुपासते ॥
योगिनः सर्वभूतेषु सद्रूपान्नौमितं हरिम् ।
सत्तावशेष एवास्ते चतुर्थीं भूमिकामितः ॥

அத்வைதம் ஸ்திரத்தன்மையடைந்து துவைதம் ஒடுங்கியபோது நான்காம் பூமியை யடைந்தோர் சொப்பனம்போல் உலகத்தினைக் காண்கின்றனர். சிதைபட்ட சாற்காலமேகத்தின் ஒரு கூறு ஒடுங்குகிறதுபோல உலகம் ஒடுங்கிப்போகிறது. நான்காம்பூமியை யடைந்

* இதுமுதல் ஒன்றரைச்சுலோகம் சிலபிரதிகளிலில்லை அதிகமும் அயுக்தமுமாம்.

தவன் சத்தைமாத்திரமாக மிஞ்சியிருப்பான். எதன் ஞானத்திஞல் யோகிகள் தம்மையும் தம்மின் வேருனவற்றையும் சன்மாத்திரமாக உபாசிக்கின்றனரோ, சர்வபூதங்களிலும் சத்ரூபமாயிருத்தலால் அந்த ஹரியினை நமஸ்கரிக்கின்றேன். நான்காம் பூமியை விரும்பியவன் சத்தாரூபம் மிஞ்சியவனுகவே யிருப்பான்" என்று கூறுகின்றனர். இந்நான்காம் பூமியினை அடைந்த யோகி பிரஹ்மவித்து என்று சொல்லப்படுகின்றுன். ஐந்தாவது முதலிய மூன்று பூமிகள் ஜீவன்முக்தியின் அவாந்தரபேதங்களாம். அவை நிர்விகற்பசமாதியப்பியாசத்திஞலாகியதான விசிராந்தி தாரதம்மியத்திஞற் பொருந்துகின்றன, ஐந்தாவது பூமியில் நிர்விகற்பத்தினின்று தானே விழிக்கின்றுன். இந்த யோகி பிரஹ்மவித்துவராவன். ஆரும் பூமியில் பக்கத்திலிருப்பவர்களால் விழிப்பிக்கப்பட்டு எழுகின்றுன். இவன் பிரஹ்மவித்துவரீயான். இப்பூமி யிரண்டும் சுழுத்தி, காடசுழுத்தியென்று சொல்லப்படும், அதனை,

"पञ्चमीं भूमिकामेत्य सुषुप्तिपदनामिकाम् ।
शान्ताशेषविशेषांशस्तिष्ठत्यद्वैतमात्रके ॥
अन्तर्मुखतया नित्यं बहिर्वृत्तिपरोऽपि सन् ।
परिश्रान्ततया नित्यं निद्रालुरिव लक्ष्यते ॥

சுழுத்திபதம் என்னும் பெயருடையதான ஐந்தாவது பூமியினையடைந்து விசேஷா(பேதா)ம்சங்கள் முழுவதும் ஒழிந்தவனுய், வெளிவிருத்திபரனுயிருக்கினும் நித்தியம் அந்தர்முகத்தன்மையால் அத்வைதமாத்திரத்தில் நிலைக்கின்றுன். மிகக்களைத்ததன்மையால் நித்தியம் தூங்குபவன்போல் இலக்ஷிக்கப்படுகின்றுன்,

"कुर्वन्नभ्यासमेतस्यां भूमिकायां विवासनः ।
षष्ठीं गाढसुषुप्त्याख्यां क्रमात्पतति भूमिकाम् ॥
यत्र नासन्न सद्रूपो नाहं नाप्यनहंकृतिः ।
केवलं क्षीणमनन आस्ते द्वैतैक्यवर्जितः ॥
अन्तः शून्यो बहिः शून्यः शून्यकुम्भ इवाम्बरे ।
अन्तः पूर्णो बहिः पूर्णः पूर्णकुम्भ इवार्णवे ॥

இந்தபூமியின் அப்பியாசத்தினைச்செய்து வாசனையொழிந்தவனுைக் கிரமமாகக்காட சுழுத்தி யெனப்படும் ஆறும்பூமியை அடைகின்றான். அதில் அசத்துமில்லை. சத்ரூபமுமில்லை. அகமுமில்லை; அகங்காரமின்மையு மில்லை. கேவலம் மனனமொழிந்தவனாய் துவைத ஐக்கியமின்றியவனாய், சூனியமான கும்பத்திலுள்ள ஆகாயம் போல் உள்ளும் சூனியன் வெளியும் சூனியனாகவும், சமுத்திரத்துள்ளிருக்கும் பூர்ணகும்பம்போல் உள்ளும் பூர்ணன் வெளியும் பூர்ணனாகவும், இருப்பான்.'' என்று கூறுகின்றார். காடமான நிர்விகற்ப சமாதியினையடைந்த சம்ஸ்காரமாத்திர சேஷமான சித்தமுடையவனுக்கு மனோராஜ்யத்தினை செய்தற்காவது பாகிய பதார்த்தங்களைக் கிரகிக்கவாவது சாமர்த்தியமின்மையால் ஆகாயத்திலிருக்கும் கும்பம்போல் உள்ளிலும் வெளியிலும் சூனியத்துவமாம். ஸ்வயம் பிரகாசசச்சிதாநந்த ஏகரஸப் பிரஹ்மத்தில் மூழ்கிய தன்மையால் வெளியில் எங்கும் பிரஹ்மதிருஷ்டியினால் சமுத்திரமத்தியில் ஸ்தாபிக்கப்பட்ட ஜலம் நிரம்பிய கும்பம்போல் உள்ளிலும் வெளியிலும் பூர்ணத்துவமாம். துரியமென்னும் ஏழாவது பூமியினையடைந்த யோகிக்குத் தன்னாலாவது பிறராலாவது விழித்தலே இல்லை. அத்தன்மையினை யுத்தேசித்தே "அழியுமியல்பினதாகிய தேகமிருந்தாலும் எழுந்தாலும்" என்றல் முதலிய பாகவதவாக்கியம் பிரவிருத்தித்ததாம். அசம்பிரஞ்ஞாத சமாதியினைக் கூறுபவைகளான யோகசாஸ்திரங்கள் இங்குதான் முடிவடைகின்றன. இத்தன்மைய இந்த யோகி முன் உதாகரிக்கப்பட்ட சுருதியில் பிரஹ்மவித்து வரிஷ்டனெனப்படுகின்றான். இவ்வாற்றால் "பக்கத்திருப்பவர்களால் விழிப்பிக்கப்பட்டவர்களாய்" "சித்திபெற்றவன் அறியான்" என்னும் இரண்டிற்கும் பூமியிரண்டில் வியவஸ்தை செய்யப்படுந் தன்மையால் எவ்விரோதமுமில்லை.

அங்கு இது சங்கிரகமாம்:—ஐந்தாவது முதலிய மூன்றுபூமி வடிவ ஜீவன்முக்தி பொருந்திய விடத்துத் துவைதத் தோற்றமின்மையினால் சம்சய விபரியயப் பிரசங்கமின்மையின் உண்டான தத்துவஞானம் பாதமின்மையால் இரக்ஷிக்கப்பட்டதாகின்றது. இந்த ஞானரக்ஷை ஜீவன்முக்தியின் முதலாவது பிரயோஜனமாம். உ. தபசு இரண்டாவது பிரயோஜனம். யோகபூமிகட்குத் தேவத்

துவாதியடைவிற்கு ஏதுவாந்தன்மை யிருத்தலால் தவத்தன்மை காணத்தக்கதாம். அவ்வேதுத்தன்மை அர்ஜுனனுக்கும் பகவானுக்கும் ஸ்ரீராமருக்கும் வசிஷ்டருக்கும் நேர்ந்த பிரசினோத்தரங்களால் அறியப்படும். அது வருமாறு:—

"अर्जुनउवाच ॥ अयतिः श्रद्धयोपेतो योगाच्चलितमानसः ।
अप्राप्य योगसंसिद्धिं कां गतिं कृष्ण गच्छति ॥
कच्चिन्नोभयविभ्रष्टश्छिन्नाभ्रमिव नश्यति ।
अप्रतिष्ठो महाबाहो विमूढो ब्रह्मणः पथि ॥
एतन्मे संशयं कृष्ण च्छेत्तुमर्हस्यशेषतः ।
त्वदन्यः संशयस्यास्य च्छेत्ता न ह्युपपद्यते ॥

श्रीभगवानुवाच ॥ पार्थ नैवेह नामुत्र विनाशस्तस्य विद्यते ।
न हि कल्याणकृत्कश्चिद्दुर्गतिं तात गच्छति ।
प्राप्य पुण्यकृतां लोकानुषित्वा शाश्वतीः समाः ।
शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टोऽभिजायते ॥
अथ वा योगिनामेव कुले भवति धीमताम् ।
एतद्धि दुर्लभतरं लोके जन्म यदीदृशम् ॥
तत्र तं बुद्धिसंयोगं लभते पौर्वदेहिकम् ।
यतते च ततो भूयः संसिद्धौ कुरुनन्दन ॥" इत्यादि ॥

श्रीराम उवाच ॥ "एकामथ द्वितीयां वा तृतीयां भूमिकामुत ।
आरूढस्य मृतस्याथ कीदृशी भगवन्गतिः ॥

श्रीवसिष्ठ उवाच ॥ योगभूमिकयोत्क्रान्तजीवितस्य शरीरिणः ।
भूमिकांशानुसारेण क्षीयते पूर्वदुष्कृतम् ॥
ततः सुरविमानेषु लोकपालपुरेषु च ।
मेरूपवनकुञ्जेषु रमते रमणीसखः ॥
भुक्ते सुकृतसंभारे दुष्कृते च पुराकृते ।

भोगक्षयपरिक्षीणे जायन्ते योगिनो भुवि ॥
शुचीनां श्रीमतां गेहे गुप्ते गुणवतां सताम् ।
तत्र प्राग्भावनाभ्यस्तं योगभूमित्रयं बुधाः ॥
स्पृष्ट्वोपरिपतन्त्युच्चैरुत्तमं भूमिकाक्रमम् ।

அர்ஜுனன் சொல்லலாயினன்:—"கிருஷ்ணரே! முயற்சியில்லாதவனைச் சிரத்தையோடு கூடியவனை யோகத்தின் சித்தியினைப் பெறாது யோகத்தினின்று சலித்த மனதுடையவன் என்ன கதியை அடைகின்றான். மகாபாகுவே! அவன் பிரஹ்மத்தின் மார்க்கத்தில் நிலைப்பின்றியவனை விமூடனானவன் உபயப் பிரஷ்டனாய்ச் சிதைபட்டமேகம்போல நசியானா? என்னை. கிருஷ்ணரே! தாம் இவ்வெனது சம்சயத்தினை முற்றும் சேதித்தற்குரியவரா யிருக்கின்றீர். இச்சம்சயத்தினைச் சேதிப்பவர் தம்மின் வேறானவர் ஒருவர் கிடையார். ஸ்ரீபகவான் சொல்லலாயினார்:—பார்த்த! அவனுக்கு விநாசம் இம்மையிலுமில்லை மறுமையிலுமில்லை. ஐய! நலத்தைச் செய்பவன் எவனும் துர்க்கதியினை யடையான். யோகப்பிரஷ்டன் புண்ணியஞ் செய்தவர்களது லோகங்களையடைந்து, சாசுவதமான வருஷங்கள் அங்குவசித்து, பின் சுசியுள்ள ஸ்ரீமான்களது வீட்டிலாவது அல்லது அறிஞர்களான யோகிகளது குலத்திலாவது உண்டாகின்றான். இத்தன்மைய பிறப்பு எதுவோ இதுவே மிகத்துர்லபமாம். அங்கு முற்சரீரத்ததான அக்கப்புத்தி சையோகத்தினைப் பெறுகின்றான். குருநந்தன! அதன்பின் மறுபடியும் சித்தியில் முயலுகின்றான்." என்றல் முதலியன (கிருஷ்ணார்ஜுனசம்வாதம்). ஸ்ரீராமர் சொல்லலாயினார்:—பகவானே! முதலாவது அல்லது இரண்டாவது அல்லது மூன்றாவது பூமியினில் ஏறியவனை இறந்தவனது கதி எத்தன்மையதாம்? ஸ்ரீவசிஷ்டர் சொல்லலாயினார்:—யோகபூமியினால் ஜீவன் வெளிப்பட்ட சரீரிக்குப் பூமிகையம்சத்தின் அநுசாரமாக முந்திபபாபம் நசிக்கிறது. அதனால் தேவவிமானங்களிலும் லோகபாலபுரங்களிலும், மேருவின் வாயுவீசும் வனங்களிலும் அழகிய ஸ்திரீயோடு கூடியவனாய் இரமிக்கின்றான். பாவங்கள் ஒழிந்து புண்ணியக்கூட்டங்கள் புசிக்கப்பட்டுப் போகக்ஷய முண்டான போது யோகிகள் பூமியில் சுசியுள்ள ஸ்ரீமான்கள் வீட்டில் அல்லது

தபசினால் இரக்ஷிக்கப்பட்டதான குணமுடைய சத்துக்கள் வீட்டில் பிறக்கின்றனர். அங்கு முன்பாவனையா லப்பியசிக்கப்பட்ட யோக பூமிமூன்றனைத் தொட்டு, அறிஞர் உயர்ந்த உத்தமமான பூமிகாக் கிரமத்தினில் ஏறுவர். என்பது (வசிஷ்ட ராமசம்வாதம்) இவ்வாறு யோகபூமிகட்குத் தேவலோகத்தினை யடைதற்கேதுவாந் தன்மை யுளதாகுக. அவ்வளவினால் தவத்தன்மை எங்கிருந்தாமெனின், சுருதியினால் என்று கூறுவாம். அவ்வாறே தைத்திரீயர்கள்,

"तपसा देवा देवतामग्र आयन् ।
तपसर्षयः सुवरन्व विन्दन् ॥

தபசினால் தேவர்கள் தேவத்தன்மையின் முதன்மை பெற்றனர் தவத்தினால் ரிஷிகள் சுவர்லோகத்தினை யடைந்தனர்." என்று சுருதியில் கூறுகின்றனர். தத்துவஞானத்திற்கு முந்தியவைகளான பூமி மூன்றற்கும் தபசுத்தன்மையுளதாயின், தத்துவஞானத்திற்குப் பிந்தியகாலத்தனவாகிய நிர்விகற்பசமாதிவடிவ ஐந்தாவது முதலிய பூமிமூன்றற்கும் தபசுத்தன்மை கைமுதிகநியாயத்தால் பெறப்பட் பட்டதேயாம். இதனாற்றான்,

"मनसश्चेन्द्रियाणां च ऐकाग्र्यं परमं तपः ।
तज्ज्यायः सर्वधर्मेभ्यः स धर्मः पर उच्यते ॥

மனது இந்திரிய மென்பவற்றின் ஏகாக்கிரத்துவம் (ஒருமித்ததன்மை) பரம தபசாம். எல்லாத் தர்மங்களைவிட அது மேலானதாம். அது பர(மேலான)தர்மம் எனப்படுகின்றது" என்று ஸ்மிருதி கூறுகின்றது. இந்த நியாயமான தபசினால் அடையத்தக்க ஜன்மாந்திமா இல்லையாயினும், உலகவுபகாரத்தின்பொருட்டு இத்தபசு பொருந்துகின்றது. இதனாற்றான் பகவான்,

"लोकसंग्रहमेवापि संपश्यन्कर्तुमर्हसि ।

உலகவுபகாரத்தை நோக்கியேனும் செய்தற்குரியவனாகின்றாய். உபகரிக்கத்தக்க உலகம் சிஷ்யன், பக்தன், தடஸ்தன் என்று மூவகையினதாம். அவர்களுள், க. சிஷ்யனதுசித்தம் அந்தர்மு

கப்பட்ட யோகியாக குருவினிடத்தில் பிராமாணிகத் தன்மைப்புத்தியின் மிகுதிப்பாட்டால் அவரானுபதேசிக்கப்பட்ட தத்துவத்தில் பரம விசுவாசத்தினை யடைந்து விரைவில் விசிராந்தி யடையும். அதனுற்றான், சுருதியில்,

"यस्य देवे परा भक्तिर्यथा देवे तथा गुरौ ।
तस्यैते कथिता ह्यर्थाः प्रकाशन्ते महात्मनः ॥

எவனுக்குத் தேவனிடத்தில் மேலான பக்தி யிருக்கின்றதோ, தேவனிடத்தில் எப்படியோ அப்படியே குருவினிடத்திலு மிருக்கின்றதோ, அம்மகாத்மாவிற்குக் கூறிய இவ்வர்த்தங்கள் பிரகாசிக்கின்றன" என்று கேட்கப்படுகின்றது. ஸ்மிருதியும்,

"श्रद्धावाल्लँभते ज्ञानं तत्परः संयतेन्द्रियः ।
ज्ञानं लब्ध्वा परां शान्तिमचिरेणाधिगच्छति ॥

தற்பரனும் இந்திரிய வடக்கமுள்ளவனுமான சிரத்தையுள்ளவன் ஞானத்தை யடைகின்றான். ஞானத்தினை யடைந்து மேலான சாந்தியினை விரைவில் பெறுகின்றான்." என்று கூறுகின்றது.

உ. பக்தன் அர்க்கம் கொடுத்தல் வசித்தற்கிடஞ் செய்வித்தல் முதலியவற்றினல் யோகியினைச் சேவிப்பவனய் அவனுடைய தபசைத்தானகவே கொள்ளுகின்றான். அவ்வாறே சுருதியிலும்,

"तस्य पुत्रा दायमुपयन्ति सुहृदः साधुकृत्यां द्विषन्तः पापकृत्याम् ॥

அவனது புத்திரர் தாயமான சொத்தையும் சுகிருத்துக் (உபகாரி)கள் புண்ணியத்தையும் துவேஷிப்பவர் பாபகிருத்தியத்தினையும் கொள்ளுகின்றனர் என்று கேட்க்கப்படுகின்றது."

ங. தடஸ்தனும் ஆஸ்திகன் நாஸ்திகனென்று இருவகைப்படுவன். அவருள், ஆஸ்திகன் யோகியின் சன்மார்க்க ஆசரணத்தினைக் கண்டு, தானும் சன்மார்க்கத்தில் பிரவர்த்திக்கின்றான். அவ்வாறே,

"यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः ।
"स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ॥

மேலானவன் எதை எதை ஆசரிக்கின்றானோ, அததனையே மற்றய ஜனங்களும் ஆசரிப்பார்கள், அவன் எதனைப் பிரமாணமாக்குகின்றானோ, அதனையே உலகமும் தழுவிநடக்கும்." என்று ஸ்மிருதியும் கூறுகின்றது. நாஸ்திகனும் யோகியினால் பார்க்கப்பட்டவனாய்ப் பாபங்களினின்றும் விடுபடுகின்றான். அது,

"यस्यानुभवपर्यन्ता तत्त्वे बुद्धिः प्रवर्तते ।
तद्दृष्टिगोचराः सर्वे मुच्यन्ते सर्वपातकैः ॥

எவனுடைய அநுபவ பரியந்தமான புத்தி தத்துவத்தில் பிரவர்த்திக்கின்றதோ, அவன் கண்ணிற்கு விஷயமாகின்றவர்கள் எல்லோரும் சர்வபாதகங்களினின்றும் விடுபடுகின்றனர்." என்று சொல்லப்பட்டுளது. இவ்விதமாக யோகியின் சர்வப்பிராணிகளின் உபகாரமுடைமையைச் சொல்லக் கருதி. "स्नातं तेन समस्ततीर्थसलिले सर्वाऽपि दत्ताऽवनिर्यज्ञानां च सहस्रमिष्टमखिला देवाश्च संपूजिताः । संसाराच्च समुद्धृताः स्वपितरस्त्रैलोक्यपूज्योऽप्यसौ यस्य ब्रह्मविचारणे क्षणमपि स्थैर्यं मनः प्राप्नुयात् ॥ कुलं पवित्रं जननी कृतार्था विश्वंभरा पुण्यवती च तेन । अपारसंवित्सुखसागरेऽस्मिल्लीनं परे ब्रह्मणि यस्य चेतः ॥ எவனுடைய சித்தம் க்ஷணமாயினும் பிரஹ்மவிசாரத்தில் ஸ்திரத்தன்மையையடையுமோ, அவனால் சகல தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்யப்பட்டதாம் சர்வ பூமியும் தானஞ் செய்யப்பட்டதாம். யஞ்ஞங்கள் ஆயிரம் யஜிக்கப்பட்டனவாம். எல்லாத்தேவர்களும் செவ்வையாய்ப் பூஜிக்கப்பட்டவராவர். தனது பிதிர்க்கள் சம்சாரத்தினின்றும் மீட்கப்பட்டவராவர். இவனும் மூவுலக பூஜ்யனாகின்றான். எவனுடைய சித்தமானது அபார ஞான சுக சாகரமாகிய இந்தப் பரப்பிரஹ்மத்தில் ஒடுங்கியிருக்கிறதோ, அவனால் குலம் பவித்திரமாம். தாய் கிருதார்த்தமுள்ளவளாவள். பூமியும் புண்ணியமுடையதாம்." என்று படிக்கப்பட்டுளது. யோகியின் சாஸ்திரீய வியவகாரமாத்திரமே தபசு என்பதில்லை. மற்றோ, அவனுடைய எல்லா இலௌகிக வியவகாரமும் தபசேயாம். அவ்வாறே தைத்திரீயர்கள் தமது சாகையில் நாராயணத்தின் கடைசி அநுவாகத்தினால் ஞானியின் மகிமையினையும் கூறுகின்றனர். அதே அனுவாகத்தின் பூர்வபாகத்தில் யோகிகளின் அவயவங்கள் யஞ்ஞாங்கத் திரவியத்தன்மையாகப் படிக்கப்

பட்டுள்ளன. அது "तस्यैवं विदुषो यज्ञस्यात्मा यजमानः श्रद्धा पत्नी शरीरमिध्ममुरो वेदिर्लोमानि बर्हिर्वेदः शिखा हृदयं यूपः काम आज्यं मन्युः पशुस्तपोऽग्निर्दमः शमयिता दक्षिणा वाग्घोता चक्षुरध्वर्युर्मनो ब्रह्मा श्रोत्रमग्नीत्॥ இவ்வாறு அந்த ஞானியின் யஞ்ஞத்திற்கு ஆத்மா யஜமானன்; சிரத்தை(யஜமானனுடைய)பத்தினி; சரீரம் சமித்து(விறகு); மார்பு வேதி; உரோமங்கள் அக்கினி; சிகை வேதம். இருதயம் யூபம் (யஞ்ஞஸ்தம்பம்); காமம் நெய்; குரோதம் பசு (விலங்குப் பொது); தபசு அக்கினி; தமம் சமஞ்செய்பவன் (பசுவைக்கொல்வோன்); தானம் தக்ஷிணை; வாக்கு ஹோதா (யஞ்ஞத்தில் ருக்வேதம் படிப்பவன்); பிராணன் உத்காதா (சாமவேதம் சொல்லுவோன்); சக்ஷு அத்வர்யு(யஜுர்வேதம் சொல்லுவோன்); மனது பிரஹ்மம் (யாகத்தை முதன்மையாயிருந்து செய்விப்போன்); சுரோத்திர அக்கினீத் (அக்கினியை எச்சரிக்கையாய்க் கவனிப்பவன்)" என்பதாம். (இங்குத் தானம் தக்ஷிணையாமென்று தானபதம் வருவிக்க வேண்டியதாம்),

"अथ यत्तपो दानमार्जवमहिंसा सत्यवचनमिति ता अस्य दक्षिणाः।

இனித் தபசு, தானம், ஆர்ஜவம், அஹிம்ஸை, சத்தியவசனம் என்பன எவையோ அவை இதன் தக்ஷிணைகளாம்.'! என்று சந்தேகர்களால் வேதத்திற் கூறப்பட்டிருத்தலின். முற்கூறிய அநுவாகத்தில் மத்திய பாகத்தால் யோகியின் வியவகாரங்களும் அவனுடைய ஜீவனகாலங்களும் ஜோதிஷ்டோமாவயவக்கிரியைவடிவத் தன்மையாகவும், பிந்திய சர்வ யஞ்ஞாவயவக்கிரியா ரூபத்துவமாகவும் படிக்கப்பட்டுள்ளன. அது "यावद्ध्रियते सा दीक्षा यदश्नाति तद्धविर्यत्पिबति तदस्य सोमपानं यद्रमते तदुपसदो यत्संचरत्युपविशत्युत्तिष्ठते च स प्रवर्ग्यो यन्मुखं तदाहवनीयो या व्याहृतिराहुतिर्यदस्य विज्ञानं तज्जुहोति यत्सायं प्रातरत्ति तत्समिधं यत्प्रातर्मध्यंदिनं सायं च तानि सवनानि ये अहोरात्रे ते दर्शपूर्णमासौ येऽर्धमासाश्च मासाश्च ते चातुर्मास्यानि य ऋतवस्ते पशुबन्धा ये संवत्सराश्च परिवत्सराश्च तेऽहर्गणाः सर्ववेदसं

वा एतत्सत्रं यन्मरणं तदवभृथः । எவ்வளவு தரி (ஜீவித்திரு)க்கப்படு கின்றதோ, அது தீக்ஷை, எதனைப் புசிக்கின்றானோ, அது ஹவிசு. எதனைப் பருகுகின்றானோ, அது இதன் சோமபானம். எதில் இரமிக்கின்றானோ அது உபசதம். யாதொரு சஞ்சாரஞ் செய்கின்றானோ உட்காருகின்றானோ, எழுகின்றானோ. அது பிரவர்க்கியம். முகம் எதுவோ அது ஆஹவநீயம். வார்த்தை எதுவோ, அது ஆஹுதி. இவனுடைய விஞ்ஞானம் எதுவோ, அது ஜுஹோதி. மாலையும் காலையும் எதனை உண்கின்றானோ, அது சமித்து. காலை மத்தியானம் மாலை எவையோ அவை சவனங்கள். பகல் இரவு எவையோ அவை தர்சபூர்ண மாசங்கள். அரை மாதங்களும் மாதங்களும் எவையோ அவை சாதுர்மாஸ்யங்கள். இருதுக்கள் எவையோ அவை பசுபந்தங்களாம். ஸம்வத்ஸரங்களும் பரிவத்ஸரங்(வருஷமுடிவு)களும் எவையோ அவை அஹர்கணங்கள். சர்வவேத ஸமான (சர்வ சொத்துக்களின் தக்ஷிணையை யுடையதான) இது (ஆயுள்) ஸத்ரம். மரணம் எதுவோ, அது அவபிருதம்.'' என்பதாம். இங்கு இது என்னும் சொல்லால் பிரகிருத பகல் இரவுமுதல் பரிவத்ஸரபரியந்தமான சர்வகால சமஷ்டியுபலக்ஷித யோகியின் ஆயுசு சொல்லக்கருதியதாம். ஆயுசு எதுவோ அது சர்வசொத்துக்களின் தக்ஷிணையோடு கூடியதான சத்திரமா மென்பது பொருள். பிந்திய அநுவாகத்தில் கடைசிப் பாகத்தினால் சர்வ யஞ்ஞவடிவமான யோகியினை உபாசிப்பவனுக்குக் கிரமமுக்தி வடிவமும் சூரியசந்திரர்களான காரிய காரணப் பிரஹ்மங்களின் தாதாத்மிய லக்ஷணமான பயன் படிக்கப்பட்டுளது. அது "एतद्वै जरामर्यमग्निहोत्रं सत्रं य एवं विद्वानुदगयने प्रमीयते देवानामेव महिमानं गत्वाऽऽदित्यस्य सायुज्यं गच्छत्यथ यो दक्षिणे प्रमीयते पितृणामेव महिमानं गत्वा चन्द्रमसः सायुज्यं सलोकतामाप्नोत्येतौ वै सूर्याचन्द्रमसोर्महिमानौ ब्राह्मणो विद्वानभिजयति तस्माद्ब्रह्मणो महिमानमाप्नोति तस्माद्ब्रह्मणो महिमानमित्युपनिषत् ॥
ஜராமரண அவதியினை யுடையதான யோகியின் சரிதமாகிய இது ஆக்கினிஹோத்திராதி சம்வத்ஸராந்தமான கர்மஸ்வரூபம் என்று இவ்வாறு எந்த வித்வான் உபாசிக்கின்றவனாய், உத்தராயணத்தில் மரிக்கின்றானோ, அவன் தேவர்களின் மகிமையினை யடைந்து,

ஆதித்தியனது சாயுஜ்யத்தை யடைகின்றான். அல்லது எவன் தக்ஷிணாயனத்தில் மரிக்கின்றானோ, அவன் பிதிர்க்களின் மகிமையினை யடைந்து, சந்திரனது சாயுஜ்ஜியத்தினையாவது சமான லோகத்தினை யாவது அடைகின்றான். இவ்வாறு சூரிய சந்திரர்களது அம்மகிமைகளை யநுபவிக்கின்ற பிராஹ்மணன் அந்த லோகவாசிகளான உபதேசிகளை யுபாசிக்கின்றவனாய் அவ்விரணியகர்ப்ப சாக்ஷாத்காரத்தினைப் பெறுகின்றான். அதிலிருந்து இரணியகர்ப்பனது மகிமையை (ஐசுவரியத்தை) அடைகின்றான். அதிலிருந்து (அந்தலோகவாசியான சரீரம் நீங்கியபின்) பிரஹ்மத்தின் மகிமையினை (வியாபகத்தினை)யடைகின்றான். இவ்வாறு உபநிஷத்தாம்" என்பதாம். ஜராமரண அவதியினதாகிய யோகியின் சரித்திரம் யாதுளதோ, அது வேதத்திற் சொல்லப்பட்ட அக்கினிஹோத்திர முதல் சம்வத்ஸர சத்ரபரியந்தமான கர்மஸ்வரூபமாமென்று இவ்வாறு உபாசிப்பவன் பாவனையின் மிகுதிப்பாட்டால் சூரிய சந்திரர்களது சாயுஜ்யத்தினை யடைகின்றான். பாவனையின் மந்தத்தன்மையால் சமானலோகத்தினை யடைந்து, அந்தலோகத்தில் சூரிய சந்திரர்களின் விபூதியினை யநுபவித்து, அதற்குமேல் சத்தியலோகத்தில் சதுர்முகரான பிரஹ்மாவின் மகிமையினை யடைகின்றான். அங்கு உண்டாகிய தத்துவ ஞானமுடையவனாய், அதற்குமேல் சத்திய ஞானாநந்தவடிவ பரப்பிரஹ்மத்தின் மகிமையாகிய கைவல்யத்தினை யடைகின்றான். இவ்வாறு உபநிஷத்தாமென்பதற்கு இவ்வாறு கூறியவண்ணமான வித்தை அதனைப் பிரதிபாதிக்கும் கிரந்தமென்பவற்றின் உபசங்காரஞ் செய்யப்படுகின்றது என்பது பொருள்.

இவ்வாறு ஜீவன்முக்தியின் தபசு வடிவ இரண்டாவது பிரயோஜனம் சித்தித்தது.

௩. விசம்வாதமின்மை அதன் மூன்றாவது பிரயோஜனமாம். நிச்சயமாக அந்தர்முகனாய் வெளிவியவகாரத்தினைக் காணாதிருப்பவனான யோகியினிடத்தில் இலௌகிகனாவது சாஸ்திரிகனாவது எவனும் விசம்வாதஞ் செய்யான். விசம்வாதம் கலகவடிவினது நிந்தை வடிவினது என்று இருவகைத்தாம். அவற்றுள், குரோதாதிகளின்றிய யோகியினோடு இலௌகிகனாவான் எப்படிக் கலகமிடுவான்? அஃதின்மை

"क्रुध्यन्तं न प्रतिक्रुध्येदाकुष्टः कुशलं वदेत् ।
अतिवादांस्तितिक्षेत नावमन्येत कंचन ॥

கோபிப்பவனை எதிர்த்துக் கோபியான். கோபிக்கப்பட்டவனுக் குசலவார்த்தை சொல்லுவான். துடுக்கான வார்த்தைகளையும் சகிப்பான். எவனையும் அவமதியான்" என்று ஸ்மிருதியில் கூறப்பட்டுளது. சங்கை:—ஜீவன்முக்திக்கு முந்தியது வித்வத் ஸந்நியாசம். அதற்கும் முந்தியது தத்துவஞானம். அதற்கு முந்தியது விவிதிஷா சந்நியாசம். இங்கு இக்குரோதாதிகளின்றிய தன்மை முதலிய தர்மங்கள் எவ்வாறு ஸ்மிருதியிற் சொல்லப்பட்டன வெனின் சரியே. ஆதலாற்றான் ஜீவன்முக்தனுடைய குரோதாதிகள் சங்கிக்கக் கூடியனவாகா. மிக முந்திய பதமாகிய விவிதிஷா சந்நியாசத்திலும் எப்போது குரோதாதிகளில்லையோ, அப்போது உத்தமபதமான தத்துவஞானத்தில் அவை எங்கிருந்திருக்கும்? வித்துவத் ஸந்நியாசத்தில் அதைவிட எங்கிருந்திருக்கும்? ஜீவன்முக்தியில் எல்லாவற்றைவிட எங்கிருந்திருக்கும்? ஆதலால் யோகியினோடு இலௌகிகனது கலகம் சம்பவியாது. நிக்ஷேவடிவ விசம்வாதமும் சங்கிக்கக் கூடியதாகாது; நிந்திக்கத் தக்கது நிச்சயிக்கப்படாததாயிருத்தலின். அவ்வாறே ஸ்மிருதியும்,

"यं न सन्तं न चासन्तं नाश्रुतं न बहुश्रुतम् ।
न सुवृत्तं न दुर्वृत्तं वेद कश्चित्स वै यतिः ॥

யாதொரு உத்தமஜாதியானை யறியானோ, அதமஜாதியானையு மறியானோ, கேட்கப்படாததனையு மறியானோ, வெகுவாகக் கேட்டதனையு மறியானோ, நன்னடை யுடையவனையு மறியானோ, தீய நடையுடையவனையு மறியானோ, எவனையுமறியானோ, அவன் சந்நியாசி." என்று கூறுகின்றது. சாஸ்திரிகனும் சாஸ்திரப் பிரமேயத்தில் விசம்வாதஞ் செய்வானோ? அல்லது யோகசரிதத்தில் விசம்வாதம் செய்வானோ? முதலாவதாயின், யோகி எப்போதும் பரசாஸ்திரப் பிரமேயத்தினைத் தூஷியான்,

"तमेवैकं जानथ आत्मानमन्या वाचो विमुञ्चथ ।
नानुध्यायेद्बहूञ्शब्दान्वाचो विग्लापनं हि तत् ॥

அவ்வாத்மா வொன்றனையே அறி. மற்றைய வாக்குகளை விடு. வெகுசப்தங்களைப் பேசாதே. அது வாக்கின் வருத்தமேயாம்.'' என்றல் முதலிய சுருதியைத் தழுவியிருத்தலால். தனது சாஸ்திரப் பிரமேயத்தினையும் பிரதிவாதியின்முன் சமர்த்தியான்,

''पलालमिव धान्यार्थी त्यजेद्ग्रन्थमशेषतः ।

परमं ब्रह्म विज्ञाय उल्कावत्तान्यथोत्सृजेत् ॥

தானிய விருப்புடையோன் (தானியத்தைக் கொண்டபின்) தாளை எறிந்துவிடுவதுபோலக் கிரந்தமுழுவதையும் நீக்கவேண்டும். பரப்பிரஹ்மத்தினை அப்ரோக்ஷமாயறிந்து, பின் அவற்றை (சாஸ்திரங்களை) (சமயல்செய்தபின்) கொள்ளிக்கட்டையினை நீக்குவதுபோல் நீக்குக.'' என்றல் முதலிய சுருதிகளின் அர்த்த பரனுயிருத்தலின். எப்போது பிரதிவாதியினையும் தனதாத்மாவாகக் காண்கின்றானே, அப்போது ஜயிக்கவேண்டுமென்னும் இச்சையைப்பற்றிய வார்த்தை என்ன இருக்கிறது? லோகாயதிகன் ஒழிந்த மற்றய சாஸ்திரிகர் யாவரும் மோக்ஷத்தினை யங்கீகரித்துக்கொண்டு யோகியின் சரிதத்தில் விசம்வாதஞ் செய்தற்குரியரரகார்; ஆருகத பௌத்த வைசேஷிக நையாயிக சைவ வைஷ்ணவ சாக்த சாங்கிய யோகாதி மோக்ஷ சாஸ்திரங்களில் பிரதிபாதிக்கப்படும் பிரமேயம் நாநாவிதமாயிருக்கினும், மோக்ஷ சாதனமாகிய இயம நியமாதி அஷ்டாங்க யோகம் ஓரேவிதமாயிருத்தலின். ஆதலால் விசம்வாதமின்மையாகச் சர்வசம்மதனுவன் யோகீசுவரன். இவ்வபிப்பிராயங்கொண்டே வசிஷ்டர்,

''यस्येदं जन्मपाश्चात्त्यं तमाश्वेव महामते ।
विशन्ति विद्या विमला मुक्ता वेणुमिवोत्तमम् ॥
आर्यता हृद्यता मैत्री सौम्यता मुक्तता ज्ञता ।
समाश्रयन्ति तं नित्यमन्तःपुरमिवाङ्गनाः ॥
पेशलाचारमधुरं सर्वे वाञ्छन्ति तं जनाः ।
वेणुं मधुरनिध्वानं वने वनमृगा इव ॥
सुषुप्तवत्प्रशमितभाववृत्तिना स्थितः सदा जाग्रति येन चेतसा ।
कलान्वितो विधुरिव यः सदा बुधैर्निषेव्यते मुक्त इतीह स स्मृतः ॥''

"मातरीव शमं यान्ति विषमाणि मृदूनि च ।
विश्वासमिह भूतानि सर्वाणि शमशालिनि ॥
तपस्विषु बहुज्ञेषु याजकेषु नृपेषु च ।
बलवत्सु गुणाढ्येषु शमवानेव राजते ॥"

எவனுக்கு இது கடைசியான ஜன்மமோ, மகாமதியே! அவனையே உத்தமமான மூங்கிலில் முத்துக்களைப்போல மலமொழிந்தனவாகிய வித்தைகள் விரைவில் பிரவேசிக்கும். மேற்குலத்தன்மை, பிரியப்படுந்தன்மை, மித்திரத்தன்மை, காட்சிக்கினியனுந்தன்மை மூக்தத்தன்மை, அறிஞனுந்தன்மை என்பன அவனை நித்தியமும் ஸ்திரீகள் அந்தப்புரத்தை ஆசிரயிப்பதுபோலச் செவ்வையாய் ஆசிரயிக்கின்றன. மெத்தென்ற நடையுடைய மதுரனுன அவனை எல்லா ஜனங்களும் வனத்திலுள்ள வனமிருகங்கள் மதுரமான ஓசையுடைய புல்லாங்குழலை விரும்புவதுபோல் விரும்புவார்கள். ஜாக்கிரத்தில் எப்போதும் பாவ விருத்திகளடங்கிய எந்தச் சித்தத்தோடு எப்போதும் சுழுத்தனைப் போலிருக்கின்றானோ, கலைகளோடு கூடிய பூர்ணசந்திரனைப்போல எவன் எப்போதும் அறிஞர்களால் சேவிக்கப்படுகின்றானோ, அவன் இங்கு முக்தனென்று கருதப்பட்டவனுவன்." என்றும், "தாயினிடத்திற்போல விஷமமானவையும் மிருதுவானவையும் சமமடைகின்றன. சமமுடையனவாய்ச் சர்வபூதங்களும் இங்கு விசுவாசம் வைக்கின்றன. தபசிகளிலும் வெகுவுணர்ச்சி யுடையோரிலும், யாசகர்களிலும், அரசர்களிலும் வலியுடையவர்களிலும், குணப்பெருக்கமுடையவர்களிலும் சமமு(சாந்தியு)ள்ளவனே மேலாக விளங்குவான்." என்றும் கூறுகின்றனர்.

இவ்வாறு ஜீவன்முக்தியின் விசம்வாதமின்மை வடிவமூன்றும் பிரயோஜனம் பாதமின்றியதாகச் சித்தித்தது.

௪. துக்கநாசமும் சுகாவிர்பாவமுமான நான்காவது ஐந்தாவது பிரயோஜனங்கள் ஸ்ரீபஞ்சதசியில் பிரஹ்மாநந்தத்துள்ளதான வித்தியாநந்தவடிவ நான்காமத்தியாயத்தினுல் நிரூபிக்கப்பட்டுள. அவ்விரண்டும் இங்குச் சுருக்கிச் சொல்லப்படுகின்றன:—

"आत्मानं चेद्विजानीयादयमस्मीति पूरुषः ।

किमिच्छन्कस्य कामाय शरीरमनु संज्वरेत् ॥

புருஷன் ஆத்மாவினை இது யான் என்று அபரோக்ஷமாயறிவானாயின், எதனை விரும்பி, எவனுடைய காமத்தின் பொருட்டுச் சரீரத்தினைப் பின்பற்றித் தாபமடைவான்?" என்னும் சுருதியினால் இம்மைத் துக்கத்தின் விநாசம் சொல்லப்பட்டது. "एतँ ह वाव न तपति किमहँ साधु नाकरवं किमहं पापमकरवम् । என்ன யான் நன்மையைச் செய்திலேன், என்ன யான் பாபத்தினைச் செய்தேன் என்று இதனைக் குறித்துத் தபியான்." என்றல் முதலிய சுருதிகள் மறுமைக் கேதுவான புண்ணிய பாவங்களின் சிந்தனை வடிவ துக்கத்தின் நாசத்தினைக் கூறுகின்றன. சுகாவிர்பாவம் சர்வகாமாவாப்தி, கிருதகிருத்தியத்துவம், பிராப்தப்பிராப்பியத்துவம் என்று மூவகைப்படும். சர்வ காமாவாப்தி சர்வ சாக்ஷித்துவம், எக்கும் காமத்தினாற் றகைக்கப்படாமை, சர்வபோக்திருவடித் தன்மை என்று மூவகையினதாம். ஹிரண்ய கர்பாதி ஸ்தாவராந்தமான சரீரங்களில் கலந்துள்ள சாக்ஷி சைதன்ய வடிவ பிரஹ்மம் எதுவோ, அது நானென்றறிபவனுக்குத் தன் தேகத்திற்போலப் பிறதேகங்களிலும் சர்வ காம சாக்ஷித்துவமுண்டு. இவ்வபிப்பிராயங்கொண்டே சுருதி "सोऽश्नुते सर्वान्कामान्सह ब्रह्मणा विपश्चिता । அவன் அறிஞனை பிரஹ்மாவோடுகூட சகல காமங்களையும் அநுபவிக்கின்றான்," என்று கூறுகின்றது. உலகத்தில் புசித்த போகங்களில் காமத்தினால் தகைக்கப்படாமை எதுவோ அது காமப்பிராப்தி யெனப்படுகின்றது. ஆகவே சர்வ போகங்களிலும் தோஷத்தைக் காண்பவனாகிய தத்துவஞானிக்கு எங்கும் காமத்தினால் தகைக்கப்படாமை யிருத்தலால் சர்வ காமாவாப்தி (எல்லாக் காமங்களின் அடைவு) உளது. இதனாற்றான் சார்வபௌமன் தொடக்கத்தனவாய் இரணியகர்பபரியந்தங்களான பின் பின்

நூறு மடங்கதிக முள்ளனவாகிய ஆநந்தங்களில் "श्रोत्रियस्य चाकामहतस्य காமத்திஞல் தகைக்கப்படாத சுரோத்திரியனது (ஆநந்தம்)" என்று சுருதி கூறியதாம். சத்து வடிவாகவும், சித்து வடிவாகவும், ஆநந்த வடிவாகவும் எங்குமிருப்பதான சுவாத்மாநந்தத்தினை அநுசந்திப்பவனுக்குச் சர்வ போக்திருத்துவம் உள்ளதே யாமென்றும் இவ்வபிப்பிராயங் கொண்டே சுருதி "अहमन्नमहमन्नमहमन्नम् । अहमन्नादोऽहमन्नादोऽहमन्नादः । யான் அந்நம், யான் அந்நம், யான் அந்நம், யான் அந்ந முண்பவன், யான் அந்ந முண்பவன், யான் அந்த முண்பவன்." என்று கூறுகின்றது. இருத இருத்தியத்துவமோ ஸ்மிருதியில்,

"ज्ञानामृतेन तृप्तस्य कृतकृत्यस्य योगिनः ।
नैवास्ति किंचित्कर्तव्यमस्ति चेन्न स तत्त्ववित् ॥
यस्त्वात्मरतिरेव स्यादात्मतृप्तश्च मानवः ।
आत्मन्येव च संतुष्टस्तस्य कार्यं न विद्यते ॥

ஞாநமிருதத்திஞல் திருப்தியடைந்த இருத இருத்தியஞனயோகிக்குக் கர்த்தவ்விய மெதுவும் இல்லவே இல்லை. இருக்கிறதெனின், அவன் தத்துவ ஞானி அல்லன். எம்மானவன் ஆத்மரதியே யாகின்ருனே, ஆத்மதிருப்தனுய் ஆத்மாவிலேயே சந்துஷ்டனுகின்ருனே, அவனுக்குச் செய்யவேண்டியது இல்லை" என்று சொல்லப்பட்டுளது.

பிராப்தப்பிராப்யத்வமும் "अभयं वै जनक प्राप्तोऽसि ஜநக! அபயத்தினை அடைந்தவனுயிருக்கின்ருய் என்றும்," "तस्मात्तत्सर्वमभवत् அதனுல் (அகம் பிரஹ்மாஸ்மி யென்றறிந்ததனுல்) அவ்வெல்லாமுமாஞன்" என்றும், ब्रह्म वेद ब्रह्मैव भवति பிரஹ்மத்தினை யறிகிறவன் பிரஹ்மமே யாகின்ருன் என்றும்" சுருதியில் கூறப்பட்டுளது.

சங்கை :—துக்கவிநாசம் சுகாவிர்பாவ மென்னும் இவ்விரண்டும் தத்துவ ஞானத்தினாலேயே பெறப்பட்டனவா யிருத்தலின், ஜீவன்முக்தியின் பிரயோஜனமாதற் குரியன வாகாவெனின், (சமாதானம் :—) அவ்வாறன்று ; இங்கு அவ்விரண்டும் செவ்வையாய் இரக்ஷிக்கப்பட்டனவாகச் சொல்லக் கருதப்பட்டனவாகலின்; எப்படி தத்துவஞானம் முன்னமே உண்டானதா யிருக்கினும், ஜீவன்முக்தியால் செவ்வையாய் இரக்ஷிக்கப்பட்டதாகின்றதோ, அப்படியே இவ்விரண்டும் செவ்வையாய் இரக்ஷிக்கப் பட்டன வாகின்றன. சங்கை :—இவ்வாறு ஜீவன்முக்திக்கு ஐந்து பிரயோஜனமுளதாகவே சமாதி யடைந்த யோகீசுவரன் உலக வியவகாரத்தினைச் செய்பவனாகிய தத்துவஞானியினும் மேலானவன் என்று சொல்லவேண்டும். அது இராம வசிஷ்டர்களின் பிரசினோத்தரங்களால் நிராகரிக்கப் பட்டுளது :—அது श्रीरामः ॥ "भगवन्भूतभव्येश कश्चिज्जातु समाहितः । प्रबुद्ध इव विश्रान्तो व्यवहारपरोऽपि सन् ॥ कश्चिदेकान्तमाश्रित्य समाधिनियमे स्थितः । तयोस्तु कतरः श्रेयानिति मे भगवन्वद ॥" वसिष्ठः ॥ "इमं गुणसमाहारमनात्मत्वेन पश्यतः । अन्तःशीतलता याऽसौ समाधिरिति कथ्यते ॥ दृश्यैर्न मम संबन्ध इति निश्चित्य शीतलः । कश्चित्संव्यवहारस्थः कश्चिद्ध्यानपरायणः ॥ द्वावेतौ राम सुसमावन्तश्चेत्परिशीतलौ । अन्तःशीतलता या स्यात्तदनन्ततपः फलम् ॥ ஸ்ரீ ராமர்.—"பகவானே! சென்றவற்றிற்கும் வருபவற்றிற்கும் ஈசனே! ஒருவன் ஒருகால் சமாதி யடைந்தவனாய் சொப்பனத்தினின்றும் விழிப்பிக்கப்பட்டவனைப் போல வியவகாரபரனாயிருந்துகொண்டும் விசிராந்தனா யிருக்கின்றான். ஒருவன் ஏகாந்தத்தினை ஆசிரயித்து சமாதிநியமத்தில் இருப்பவனாகின்றான். அவ்விருவருள் எவன் மேலானவன் என்று எனக்குப் பகவானே! திருவாய் மலர்ந்தருள் வேண்டும்." வசிஷ்டர்.—"இக்குணத் தொகுதியினை அநாத்மத் தன்மையதாய் பார்ப்பவனது உட்சீதளத்

தன்மை எதுவோ அது சமாதி யென்று சொல்லப்படுகிறது. திரு ஷியங்களோடு எனக்குச் சம்பந்தமில்லை யென்று நிச்சயித்துச் சீதள முடையவனாய் நல்லவியவகாரத்திலிருப்பவன் ஒருவன்; தியான பராயணன் ஒருவன். இராமா! இவ்விருவரும் உள்ளே மிகச் சீதள முடையவராயின், மிகச்சமானமுடையவராவர். உள்ளே சீதளத் தன்மை எதுவோ, அது அளவிறந்த தபசின் பயனும்" என்பதாம். சமாதானம்:—இது தோஷமாகாது. இங்கு வாசனாக்ஷய ரூபமான உட் சீதளத்துவம அவசியம் சம்பாதிக்கத் தக்கதாமென்னும் இவ்வ ளவே சொல்லப்படுகின்றது; அதன்பின் உண்டாவதான மனோ நாசத்தின் சிரேஷ்டத்துவம் நீக்கப்படுகிறதில்லை. சீதளத்துவம் ஆசையின் ஒழிவாமென்னும் இத்தன்மையதே சொல்லக் கருதியதா மென்பதனைத் தாமே " अन्तःशीतलतायां तु लब्धायां शीतलं जगत् । अन्तस्तृष्णोपतप्तानां दावदाहमयं जगत् ॥ உட் சீதளத் தன்மை பெறப்பட்டபோது ஜகத்து சீதளமாம். உள்ளே ஆசையினால் தபிக் கப்பட்டவர்கட்கு இந்த ஜகத்துக் காட்டுத்தீயாம்." என்று ஸ்பஷ்ட மாக்கி யிருக்கின்றனர். சங்கை:—சமாதி நிந்தையும் வியவகார ஸ்துதியும் இங்கு

" समाधिस्थानकस्थस्य चेतश्चेद्वृत्तिचञ्चलम् ।
तत्तस्य तु समाधानं सममुन्मत्तताण्डवैः ॥
उन्मत्ततांण्डवस्थस्य चेतश्चेत्क्षीणवासनम् ।
तत्तस्योन्मत्तनृत्यं तु समं ब्रह्मसमाधिना ॥

சமாதி ஸ்தானத்தி லிருப்பவனது சித்தத்தின் விருத்தி சஞ்சல முள்ளதாயின், அந்த அவனுடைய சமாதானம் உன்மத்த தாண்ட வங்களோடொத்ததாம். உன்மத்த தாண்டவத்திருப்பவனது சித்தம் வாசனை யொழிந்ததா யிருக்குமாயின், அந்த அவனுடைய நிருத்தி யம் பிரஹ்ம சமாதியோடொத்ததாம்." என்பதனால் அறியப்படு கின்றதே யெனின், அவ்வாறன்று; ஏனெனின் இங்குச் சமாதியின் ஸ்துதியினையே அங்கீகரித்து வாசனை நிந்திக்கப்

படுகின்றது. இது இங்கு வசன வெளிப்படையாம்:—வியவகாரத்திலும் சமாதி இலக்கியமானதாயினும், இச்சமாதி வாசனையோடு கூடியதாயின், அப்போது வாசனையின்றியதான வியவகாரத்திலும் அதமமேயா மென்பதனால் அது சமாதியாகாது. எப்போது சமாதியுடையவன் வியவகாரஞ் செய்பவன் இருவரும் தத்துவமுணராதவராய் வாசனையோடு கூடியவர்களா யிருப்பாராயின், அப்போது சமாதிக்கு உத்தம லோகப் பிராப்திக் கேதுவான புண்ணியத் தன்மையால் இலக்கியத் தன்மையுள்ளது. எப்போது இருவரும் ஞான நிஷ்டராய் வாசனை யில்லாதவர்களாய் இருப்பாரோ, அப்போதும் வாசனாக்ஷய வடிவ ஜீவன்முக்தியினைப் பரிபாலித்து, இந்த மனோ நாசவடிவ சமாதி இலக்கியமுடையதேயாம். ஆகலால் யோகீசுவரனுக்குச் சிரேஷ்டத்துவ மிருத்தலின் ஐந்து பிரயோஜனங்களோடு கூடியதான ஜீவன்முக்திக்கு எவ்விக்கினமும் இல்லை யென்பது சித்தித்தது.

இவ்வாறு ஜீவன் முக்தி ஸ்வரூப சித்திப்
பிரயோஜன மென்னும்

**நான்காம் பிரகரணம்**

முடிந்தது.

---





—: ஐந்தாவது :—

# வித்வத் ஸந்நியாசப் பிரகரணம்.

ஸ்வரூபப் பிரமாண சாதனப் பிரயோஜனங்களோடு ஜீவன் முக்தி நிரூபிக்கப்பட்டது. இனி அதன் உபகாரியான வித்வத் ஸந்நியாசத்தினை நிரூபிப்பாம் :—வித்வத் ஸந்நியாசம் பரம ஹம்ஸோபநிஷத்தில் பிரதிபாதிக்கப் பட்டுளது. அவ்வுபநிஷத்தினை அநுவதித்து வியாக்கியானஞ் செய்வாம். அங்கு (உபநிஷத்தில்) முதலில் வித்வத் ஸந்நியாச யோக்கியமான பிரசினத்தினை "* अथ योगिनां परमहंसानां कोऽयं मार्गस्तेषां कास्थितिरिति नारदो भगवन्तमुपगत्योवाच । இனி யோகிகளான பரம ஹம்ஸர்களது இம்மார்க்கம் யாது? அவர்களது நிலை யாது என்று நாரதர் பகவானருகிற் சென்று கேட்கலாயினர்" என்று அவதரிக்கின்றது. अथ = இனி என்னுஞ் சொல்லால் அபேக்ஷிக்கப்படுவதான ஆநந்தர்யப் பிரதியோகி (பிந்தியதாந் தன்மையை நிரூபிப்பது) எதுவும் இங்குக் காணப்படவில்லையாயினும், கேட்கத்தக்கதான அர்த்தம் இங்கு வித்வத் ஸந்நியாசமாம். அதில் தத்துவ முணர்ந்தவனாய் லோக வியவகாரங்களால் விக்ஷேபப் படுபவனாய் மனதின் விசிராந்தியை விரும்புகிறவன் அதிகாரி. ஆதலால் அவ்வித அதிகாரி யடைவின்பின் (ஆநந்தர்யம்) என்பது अथ = இனி என்னும் சொல்லிற்குப் பொருளாம். கேவல யோகியையும் கேவல பரம ஹம்ஸனையும் நீக்குதற் பொருட்டு "யோகிகளான பரம ஹம்ஸர்கள்" என்னும் இரண்டு பதம் சொல்லப்பட்டது. கேவல யோகி தத்வஞானமின்மையால் திரிகால ஞானம் ஆகாசகமன முதலியனவாகிய யோகைசுவரிய சமத்கார வியவகாரங்களில் பற்றுடையவனாய்ச் சம்சய விசேஷங்களால் அங்கு முயலுகின்றான். அதனால் பரமபுருஷார்த்

* பரம ஹம்ஸோபநிஷத்து.

தத்தினின்று நழுவியவனாகின்றான். அவ்வர்த்தத்தில் "ते समाधावुत्सर्गा व्युत्थाने सिद्धयः । அவை சமாதியில் விக்னங்களும் விழிப்பில் சித்திகளுமாம்" என்னும் சூத்திரம் முன்னமே உதாகரிக்கப்பட்டுள்ளது. கேவல பரம ஹம்ஸனோ தத்துவ விவேகத்தினால் ஐசுவரியங்களில் அஸாரத் தன்மையை அறிந்து சந்நியாசிக்கின்றான். அதாவும் "चिदात्मन इमा इत्थं प्रस्फुरन्ति हि शक्तयः । इत्यस्याऽऽश्चर्यजालेषु नाभ्युदेति कुतूहलम् ॥ சிதாத்மாவின் இச் சக்திகள் இவ்வாறு ஸ்புரிகின்றன என்று ஆச்சரியக் கூட்டங்களில் இவனுக்குக் குதூகுலம் உதிக்கிறதில்லை." என்பதனால் உதாகரிக்கப்பட்டது. விரக்தனாயினும் இவன் பிரஹ்ம வித்தையினைத் தாங்கியதனால் விதி நிஷேதங்களைக் கடக்கின்றான். அது "निस्त्रैगुण्ये पथि विचरतां को विधिः को निषेधः । மோக்ஷமார்க்கத்தில் நடப்பவனுக்கு விதி யாது? நிஷேதம் யாது?" என்று சொல்லப் பட்டுளது. ஆகவே அவனைச் சிரத்தையுடையவர்களான சிஷ்டர்கள் सर्वे ब्रह्म वदिष्यन्ति संप्राप्ते तु कलौ युगे । नानुतिष्ठन्ति मैत्रेय शिश्नोदरपरायणाः ॥ மைத்திரேய! கலியுகம் வந்தபோது ஸ்திரீகளைக் கூடுவதிலும் வயிறு வளர்ப்பதிலும் தற்பரர்களாய் எல்லோரும் பிரஹ்மத்தினைக் கூறுவார்கள்; அநுஷ்டிக்கமாட்டார்கள்" என்று இவ்வாறு நிந்திக்கின்றனர். யோகியான பரம ஹம்ஸனிடத்திலோ இவ்விரண்டு தோஷமுமில்லை. இவனது வேறு அதிசயமும் (மேன்மையும்) பிரசினோத்தரங்களால் காட்டப்படுகின்றது. அது

श्रीरामः— एवं स्थितेऽपि भगवञ्जीव मुक्तस्य सन्मतेः ।
अपूर्वोऽतिशयः कोऽसौ भवत्यात्मविदां वर ॥

वसिष्ठः—ज्ञस्य कस्मिंश्चिदप्येषा भवत्यतिशये न धीः ।
नित्यतृप्तप्रशान्तात्मा स आत्मन्येव तिष्ठति ॥

मन्त्रसिद्धैस्तपःसिद्धैर्योगसिद्धैश्च भूरिशः ।
कृतमाकाशयानादि तत्र का स्यादपूर्वता ॥
एक एव विशेषोऽस्य न समो मूढबुद्धिभिः ।
सर्वत्रास्थापरित्यागान्नीरागममलं मनः ॥
एतावदेव खलु लिङ्गमलिङ्गमूर्तेः
संशान्तसंसृतिचिरभ्रमनिर्वृतस्य ।
तज्ज्ञस्य यन्मदनकोपविषादमोह
लोभापदामनुदिनं निपुणं तनुत्वम् ॥

ஸ்ரீராமர் :—ஆத்ம ஞானிகளுட்சிரேஷ்டரே ! பகவானே ! இவ்வாறு இருப்பனாயினும் சன்மதியாகிய ஜீவன்முக்தனுக்கு அபூர்வமான அதிசயம் என்ன உண்டாகின்றது? வசிஷ்டர் :—ஞானிக்கு அதிசயமான எதிலும் இந்தப் புத்தி செல்லாது. நித்தியத் திருப்தனாய் அடங்கிய சித்தமுடைய அவன் ஆத்மாவிலேயே நிலைத்திருப்பன். மந்திர சித்தி யுடையவர்களாலும், தபச்சித்தி யுடையவர்களாலும் யோகசித்தியுடையவர்களாலும் பெரும்பாலும் செய்யப்படுவனவாம் ஆகாயத்திற் செல்லுதல் முதலியன. அதில் என்ன அபூர்வத்துவமுளது? இவனுக்கு மூடபுத்திகளோடு சமமாகாத ஓரே விசேஷமுளது:—எங்கு ஆசையை விட்டமையால் மனது அமலமாய் இராகமின்றி யிருப்பதாம். ஆசை, கோபம், விஷாதம், மோகம், லோபம், ஆபத்து என்பவற்றின் நித்தியம் குறைதற்றன்மையாகிய சாமர்த்தியம் எதுவோ அவ்வளவு மாத்திரமே (தண்டதாரண முதலிய குறியின்றிய (பரம ஹம்ஸ) மூர்த்தியும் சம்சாரத்தின் நெடுங் காலப் பிரமமொழிந்து சுகியாயிருப்பவனுமான தத்துவ ஞானிக்கு அடையாளமாம்." என்பதாம். இவ்வதிசயத்தோடு கூடியவர்களாய்த் தோஷமிரண்டு மில்லாதவர்களது மார்க்கமும் ஸ்திதி (நிலை) யும் வினவப்படுகின்றன. வேஷம், பாஷை முதலிய வடிவ வியவ் காரமே மார்க்கமாம்; சித்தத்தின் உபரம (ஒழிவு) வடிவ உள்

தர்மம் ஸ்திதியாம். கூறிய வண்ணமான பிரசிநோத்தரத்தினை "* तं भगवानाह । அவரை நோக்கிப் பகவான் (சதுர்முகரான பிரஹ்மா) சொல்லுகின்றார்" என்பதனால் அவதரிக்கின்றது. சொல்லப்படும் மார்க்கத்தில் சிரத்தையின் மிகுதிப் பாட்டை யுண்டாக்குதற்காக அம்மார்க்கத்தினை "* सोऽयं परमहंसमार्गो लोके दुर्लभतरो न तु बाहुल्यः । (உன்னால் கேட்கப்பட்டது எதுவோ) அந்த பரம ஹம்ஸ மார்க்கமாகிய இது உலகத்தில் மிகத் துர்லபமாம்; மிகுதியாயிராது" என்பதனால் துதிக்கின்றார். 'இது' என்று பிந்திய கிரந்தத்தில் சொல்லப்படுவதான ஆச்சாதனம் (போர்வை) முதலியன வாகிய தனது சரீர போகமாகவும் லோகோபகார மாகவும் அபேக்ஷிக்கப்படாத முக்கிய மார்க்கம் ஆராயப்படுகின்றது. அப்படிப்பட்டபராகாஷ்டை (மேலான எல்லை) யினை யடைந்த வைராக்கியம் அதிருஷ்டத்தால் நடப்பதாயிருத்தலின் அந்த மார்க்கம் மிகத் துர்லபமாவதாம். இவ்வளவினாலேயே அத்தியந்தமில்லை யென்று சங்கிக்கக் கூடியதாமென் றபிப்பிராயபட்டு 'மிகுதியாயிராது' என்பதனால் மிகுதிப்பாட்டினையே விலக்குகின்றார். சங்கை—இம்மார்க்கம் மிகத் துர்லபமானதாயின், அதன் பொருட்டுப் பிரயாசம் என் செய்யவேண்டும்; அதனால் பிரயோஜனமில்லாமையால் என்றுசங்கித்து, "* यद्येकोऽपि भवति स एव नित्यपूतस्थः स एव वेदपुरुष इति विदुषो मन्यन्ते । எவனாவதொருவன் இருப்பானாயின், அவனே நித்த சுத்தத்திருப்பவன். அவனே வேதபுருஷன் என்று அறிஞர் மதிக்கின்றனர்." என்று பரிகரிக்கின்றனர். "मनुष्याणां सहस्रेषु कश्चिद्यतति सिद्धये । यततामपि सिद्धानां कश्चिन्मां वेत्ति तत्त्वतः ॥ ஆயிரக் கணக்கான மனிதர்களுள் ஒருவன் முக்தியின் பொருட்டு முயலுகின்றான். முயல்பவர்களான

---

* பரம ஹம்ஸோபநிஷத்து.

சித்தர்களுள்ளும் ஒருவன் என்னை உண்மையாக அறிகின்றான்." என்னும் நியாயத்தால் எங்கேயாவது எப்போதாவது எவனாயினு மோர் யோகியான பரமஹம்ஸன் கிடைப்பானாயின், அவனே நித்திய பூத (சுத்த) த்திருப்பவன். "य आत्माऽपहतपाप्मा பாபமொழிந்த தான யாதொரு ஆத்மா" என்னும் சுருதியால் நித்தியபூதம் என்பது பரமாத்மா, 'அவனே' என்னும் ஏகாரத்தால் கேவல யோகியும் கேவல பரம ஹம்ஸனும் விலக்கப்படுகின்றனர். கேவல யோகி நித்திய பூதத்தினை யறியான். கேவல பரம ஹம்ஸன் அறிந்தும் சித்தத்தில் விசிராந்தி யின்மையால் பகிர்முகனாய்ப் பிரஹ்மத்தில் நிலையான். வேத புருஷன் என்பது வேதத்தில் பிரதிபாதிக்கப்படும் புருஷன். அறிஞர் என்பது பிரஹ்மாநுபவ சித்த விசிராந்தியினைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரங்களின் கரை கடந்த யோகிகளான வித்வான்கள். பரம ஹம்ஸனுக்குப் பிரம நிஷ்டைத் தன்மையை சர்வ ஜனங்களும் ஒப்புகின்றனர். கூறிய வண்ணமான வித்வான்களோ அதனையும் சகியாதவர்களாய்ப் பிரஹ்மத்துவத்தினையே ஒப்புகின்றனர். அவ்வாறே ஸ்மிருதியும் "दर्शनादर्शने हित्वा स्वयं केवलरूपतः । यस्तिष्ठति स तु ब्रह्मन्ब्रह्म न ब्रह्मवित्स्वयम् ॥ தர்சனம் அதர்சன மிரண்டையும் விட்டு, எவன் சுவயம் கேவல ரூபமாக நிற்கின்றானோ, பிராஹ்மணா! அவன் சுவயம்; பிரஹ்மம் பிரஹ்ம வித்து (பிரஹ்மத்தை யறிபவன்) ஆகான்," என்று கூறுகின்றது. இதனால் பிரயோஜனமில்லையென்று சங்கிக்கவு முடியாது. நித்திய பூதத்திலிருத்தற்றன்மையையும் வேதபுருஷத் தன்மையையும் தன் முகத்தால் விளக்கி அர்த்தத்தினால் ஸ்திதியாது என்னும்பிரசினத்தின் உத்திரத்தினைச் சூத்திரி (சூசிப்பி)க்கின்றார்.

அது "*महापुरुषो यच्चित्तं तत्सदा मय्येवावतिष्ठते । तस्मादहं च तस्मिन्नेवावस्थितः ॥ மகா புருஷன் சித்தம் எதுவோ அதனை எப்

---

* பரம ஹம்ஸோபநிஷத்து

போதும் என்னிடத்திலேயே நிறுத்துகின்றான். ஆதலால் யானும் அவனிடத்திலேயே நிற்கின்றேன்" என்பதாம். வைதிக ஞானகர்மாதிகாரிகளான புருஷர்களின் மத்தியில் யோகியான பரமஹம்ஸனுக்கு உத்தமத்துவ மிருத்தலின் மகா புருஷத்துவ முளது. அம்மகா புருஷன் தனது சித்தம் எதுவோ அதனை எப்போதும் என்னிடத்திலேயே நிறுத்துகிறான்; சம்சாரத்தை கோசரிப்பனவாகிய அவனது சித்த விருத்திகள் அப்பியாச வைராக்கியங்களால் நிரோதிக்கப் பட்டிருத்தலின், இங்கு பகவான் பிரஜாபதியானவர் சாஸ்திர சித்தமான பரமாத்மாவை தனது அநுபவத்தினால் ஆராய்ந்து 'என்னிடத்தில்' என்று கூறுகின்றார். எதனால் யோகி சித்தத்தினை என்னிடத்திலேயே வைக்கின்றானோ, அதனால் யானும் பரமாத்ம ஸ்வரூபத் தன்மையாக அந்த யோகியினிடத்திலேயே ஆவிர்பவித்து நிற்பவனாகின்றேன்; மற்றைய அஞ்ஞானிகளிடத்தில் நிற்பதில்லை; அவர்கட்கு அவ்வித்தையால் மறைக்கப் படுந்தன்மை யிருத்தலின், யோகிகளல்லாத தத்துவ ஞானிகளிடத்தில் வெளிச் சித்த விருத்திகளால் மறைக்கப் பட்டிருத்தலின் ஆவிர்பாவ மில்லை.

இப்போது இம்மார்க்கம் யாதென்று கேட்கப்பட்டதான மார்க்கத்தினை உபதேசிக்கின்றார்:—அது "* असौ स्वपुत्रमित्रकलत्रबन्ध्वादीञ्छिखायज्ञोपवीते स्वाध्यायं च सर्वकर्माणि संन्यस्यायं ब्रह्माण्डं च हित्वा कौपीनं दण्डमाच्छादनं च स्वशरीरोपभोगार्थाय च लोकस्योपकारार्थाय च परिग्रहेत् ॥ இவன் தனது புத்திர மித்திர களத்திர பந்து முதலியோரையும் சிகையையும் யஞ்ஞோபவீதத்தினையும் சுவாத்தியாயத்தினையும் (தனது சாகையாகிய வேதத்தினை ஓதுதலையும்) சர்வ கர்மங்களையும் சந்நியசித்து (செவ்வையாய் விட்டு,) இப்பிரஹ்மாண்டத்தினையும் விட்டு, கௌபீனத்தையும் தண்டத்தினையும் போர்வையினையும் தனது சரீர உபயோகத்தின்

* பரம ஹம்ஸோபநிஷத்து.

பொருட்டும் உலகத்தின் உபகாரத்தின் பொருட்டுமாகக் கொள்ள வேண்டும்." என்பதாம்.

எந்தக் கிருகஸ்தன் பூர்வ ஜன்ம சஞ்சித புண்ணியக் கூட்டங்கள் பரிபாகமாக மாதா பிதாக்களின் ஆஞ்ஞை முதலிய நிமித்தத்தால் விவிதிஷா சந்நியாச வடிவ பரம ஹம்ஸாசிரமத்தினை ஸ்வீகரியாமலே சிரவணாதி* சாதனங்களை அநுஷ்டித்துத் தத்துவத்தினைச் செவ்வையாய் அறிகின்றான். அதன் பின் கிருகஸ்தனுக்குக் கிடைத்துள்ள இலௌகிக வைதிக வியவகாரங்கள் ஆயிரங்களால் சித்தம் விக்ஷேபமடைந்தபோது, விசிராந்தி சித்திப்பதற்காக வித்வத் ஸந்நியாசத்தினைச் செய்ய விரும்புகிறான். அவனைக் குறித்ததாம் 'தனது புத்திரனையும் மித்திரனையும்' என்றல் முதலிய உபதேசம். முன்னமே விவிதிஷா சந்நியாசத்தினைச் செய்து தத்துவமுணர்ந்தவனாய் வித்வத் சந்நியாசத்தினைச் செய்ய விரும்பியவனுக்குப் புத்திர களத்திராதிப் பிரசங்க மின்மையால். சங்கை:— இவ்வித்வத் சந்நியாசம் மற்றைய சந்நியாசங்களைப் போல பிரைஷ மந்திரோச்சாரண முதலிய விதியிற் கூறிய விதமாகச் சம்பாதிக்கத் தக்கதா? அல்லது ஜீர்ணவஸ்திரம் உபத்திரமுள்ள கிராமம் முதலியவற்றை விடுத்தல் போன்ற இலௌகிகத் தியாக மாத்திரமா? முதலாவதன்று; தத்துவ ஞானிக்குக் கர்த்திருத்துவ மில்லாமையால் விதி நிஷேதங்களில் அதிகாரமில்லா திருத்தலின். இதனாற்றான் ஸ்மிருதி,

> " ज्ञानामृतेन तृप्तस्य कृतकृत्यस्य योगिनः ।
> नैवास्ति किंचित्कर्तव्यमस्ति चेन्न स तत्त्ववित् ॥

ஞானாமிருதத்தினால் திருப்தனான கிருத கிருத்தியனாகிய யோகிக்குக் கர்த்தவ்வியம் (செய்யவேண்டியது) எதுவுமில்லை. இருக்கு

* பரம ஹம்ஸோபநிஷத்து.

மாயின், அவன் தத்துவ ஞானியல்லன்." என்று கூறுகின்றது. இரண்டாவதுமன்று; கௌபீனம் தண்டம் முதலிய ஆச்ரமலிங்க விதானம் கேட்டலால். சமாதானம்:—இது தோஷமாகாது. பிரதிபத்தி கர்மம்போல இருவடிவத் தன்மை பொருந்துதலால். அஃதாமாறு:—ஜோதிஷ்டோமத்தில் தீக்ஷிதனுக்குத் தீக்ஷாங்க நியமானுஷ்டான காலத்தில் சொரிந்து கொள்வதான கையினை விலக்கிக் கருமான் கொம்பு விதிக்கப்பட்டுளது. அது "यद्धस्तेन कण्डूयेत पामनंभावुकाः प्रजाः स्युर्यत्स्मयेत नग्नंभावुकाः । கையினால் சொரிந்தால் பிரஜைகள் சொரி சிரங்குகளை யடைபவராவர். சிரித்தால் நக்கினத்தை (வஸ்திர மின்றிய தன்மையை) அடைபவராவர்." என்பதும் "कृष्णविषाणया कण्डूयते । கருமான் கொம்பால் சொரிந்து கொள்ளுக." என்பதுமாம். அக்கருமான் கொம்பு, நியமம் முடிந்தபோது பிரயோஜன மில்லாமையாலும் வகிக்க முடியாமையாலும் அதனை நீக்குதல் இயல்பாகவே பெறப்படுவதாம். அந்த நீக்கும் கிரமத்தினை வேதம் "नीतासु दक्षिणासु चात्वाले कृष्णविषाणां प्रास्यति । தக்ஷிணை கொண்டுபோனபின் * சாத்வாலத்தில் கருமான் கொம்பினைப் போடவேண்டும்." என்பதுமாம். இந்தப் பிரதிபத்தி கர்மம் இலௌகிகம் வைதிகம் என்று இருவடிவினதாம். அவ்வாறே வித்வத் ஸந்நியாஸமும் இருவடிவினதாம். தத்துவஞானியிடத்தில் கர்த்திருத்துவத்தின் அத்தியந்தாபாவம் சங்கிக்கக்கூடியதாகாது; ஏனெனின், சிதாத்மாவில் ஆரோபிக்கப்பட்ட கர்த்திருத்துவம் வித்தையினால் நீக்கப்பட்டதாயிருக்கினும், சிற்சாயையோடு கூடிய அந்தக்கரண உபாதியாகிய விக்கிரியை யாயிரங்களோடு கூடியதான அதில் இயல்பாகச்சித்தித்

---

* யஞ்ஞமண்டப ஸ்தலத்தில் எவ்வுத்தேசத்தால் பூமியை வெட்டி ஜோதிஷ்டோம முதலியவற்றில் சொல்லப்பட்ட வேதி செய்யப்படுகின்றதோ, அதே பூமியிலுள்ள பாகம் சாத்வாலமெனப்படும்.

துள்ள கர்த்திருத்துவம் திரவியமுள்ளவரையி லிருக்குந் தன்மை யால் நீக்கப்படாததா யிருத்தலின். 'ஞானமிருதத்தினுல் திருப்த னை' என்றல் முதலிய ஸ்மிருதி விரோதமுமில்லை. ஞானமிருக் கினும் விசிராந்தியின்றி யவனுக்குத் திருப்தி யின்மையால் விசி ராந்தியைச் சம்பாதித்தல் வடிவ கர்த்தவ்ப சேஷத்தினிருப்பால் கிருத கிருத்தியத் தன்மை இல்லாதிருத்தலின். சங்கை:—தத்துவ ஞானிக்கும் விதியினை யங்கீகரிக்கின், அந்த அபூர்வ (அதிருஷ்ட) த்தால் வேறு சரீரம் ஆரம்பிக்கப் படுமெனின், அவ்வாறன்று; அவ்வபூர்வத்திற்குச் சித்த விசிராந்தியின் பிரதிபந்தத்தினை நீக்கும் லக்ஷணமாகிய திருஷ்ட (பிரத்தியக்ஷ) பலமுளதாக: அதிருஷ்ட பலத்தினைக் கற்பித்தல் அநியாய மாகலின். அவ்வாறில்லையாயின், சிரவணாதி விதிகளினும் பிரஹ்ம ஞானோற்பத்தியின் பிரதிபந்தத் தினை நீக்குதல் வடிவ திருஷ்ட பலனை உபேக்ஷித்து, ஜன்மாந்தரத் திற்கு ஏதுவாதலைக் கற்பிக்க வேண்டும். ஆதலால் விதியினை அங்கீ கரித்தல் தோஷமின்மையால் விவிதிஷுவினை (ஞான விருப் புடையவனை) ப்போல வித்துவானும (ஞானியாகிய) கிருகஸ்த னும் காந்திமுக சிராத்தம் உபவாசம் ஜாகரணம் (விழிப்பு) முத லிய விதியினை அநுசரித்தே சந்நியசிக்க வேண்டும். இங்கு சிராத் தாதிகள் உபதேசிக்கப் படவில்லை யாயினும், இவ் வித்துவத் சந்நி யாசத்திற்கு விவிதிஷா சந்நியாசத்தின் விகிருதியாந்தன்மை யிருத் தலின், "பிரகிருதியினைப் போல விகிருதியும் செய்யவேண்டிய தாம்" என்னும் நியாயத்தால் அதன் தர்மங்கள் யாவும் இங்கு கிடைக்கின்றன். எப்படி ஜோதிஷ்டோமத்தின் விகிருதிகளான அதிராத்திர முதலியவற்றில் அதன் (ஜோதிஷ்டோமத்தின்) தர்மப் பிராப்தி உளதோ அதுபோலவாம். ஆதலால் மற்றைச் சந்நி யாசம் போல இதினும் பிரைஷ மந்திரத்தால் புத்திர மித்திராதிய

* யஞ்ஞ மண்டப ஸ்தலத்தில் எவ்வுத்தேசத்தால் பூமியை வெட்டி ஜோதிஷ்டோம முதலியவற்றில் சொல்லப்பட்டவேதி செய் யப்படுகின்றதோ, அதே பூமியிலுள்ள பாகம் சாத்வால மெனப்படும்.

ரின் தியாகத்தினைச் சங்கற்பிக்க வேண்டும். "பந்து முதலியோரையும்" என்பதிலுள்ள 'முதலிய' என்னும் சொல்லால், சேவகன் பசு கிருகம் க்ஷேத்திரம் முதலிய இலௌகிக விஷயங்களைக் கொள்ளுதல் முதலிய விசேஷங்கள் சங்கிரகிக்கப்படுகின்றன. "சுவாத்தியாயத்தினையும்" என்பதிலுள்ள 'உம்' என்பதனால் அவ்வேதத்தின் அர்த்த நிர்ணயத்திற்கு உபயோகமுள்ளனவாகிய பதவாக்கியப் பிரமாண சாஸ்திரங்களும் வேதத்தின் உபப்பிரஹ்மணங்களான இதிகாச புராணாதிகளும் சேர்க்கப்படுகின்றன. விடசன நிருவிருத்தி மாத்திரப் பிரயோஜன முடையனவாகிய காவிய நாடக முதலியவற்றின் தியாகம் கைமுதிக நியாயத்தால் சித்தித்ததாம். "சர்வ கர்மங்களையும்" என்பதிலுள்ள 'சர்வ' சப்தத்தினால் இலௌகிக வைதிக நித்திய நைமித்திக நிஷித்த காமியங்கள் கொள்ளப்படுகின்றன. புத்திராதியரின் தியாகத்தினால் இம்மைப் போகம் பரிகரிக்கப்பட்டதாம். சர்வ கர்ம தியாகத்தினால் சித்த விக்ஷேபத்தைச் செய்வனவாகிய மறுமைப் போகங்களின் ஆசை பரிகரிக்கப் பட்டது. பிரஹ்மாண்டத் தியாக மென்பது அதன் பிராப்திக்கேதுவான விராட்டு உபாசனத்தின் தியாகமாம். "பிரஹ்மாண்டத்தினையும்" என்னும் உம்மையால் சூத்திராத்மப் ப்ராப்திக்கேதுவான இரணிய கர்ப்போபாசனமும் தத்துவஞானத்திற் கேதுக்களான சிரவணாதிகளும் சேர்க்கத் தக்கனவாம். தனது புத்திரன் முதல் இரணிய கர்ப்போபாசன பரியந்தமான இம்மை மறுமைச் சுகசாதன மெல்லா வற்றையும் பிரைஷமந்திரோச்சாரணத்தினால் விட்டுக் கௌபீன முதலியவற்றைக் கொள்ளவேண்டும். "போர்வையினையும்" என்பதன் உம்மையால் பாதுகை முதலிய வற்றையும் கூட்டுக. அவ்வாறே ஸ்மிருதியும்.

---

* யஞ்ஞமண்டப ஸ்தலத்தில் எவ்வுத்தேசத்தால் பூமியை வெட்டி ஜோதிஷ்டோம முதலியவற்றில் சொல்லப்பட்ட வேதி செய்யப்படுகின்றதோ, அதே பூமியிலுள்ள பாகம் சாத்வால மெனப்படும்.

" कौपीनयुगलं वासः कन्थां शीतनिवारिणीम् ।
पादुके चापि गृह्णीयात्कुर्यान्नान्यस्य संग्रहम् ॥

கௌபீன மிரண்டும், குளிரைப் போக்குவதான கந்தை வஸ்திரமும், இரண்டு பாதுகையும் கொள்ளவேண்டும். மற்றதன் சங்கிரகம் செய்யலாகாது." என்று கூறுகின்றது. தனது சரீரத்தின் உபயோகமாவது கௌபீனத்தால் லஜ்ஜையின் நீக்கமும், தண்டத்தால் பசு பாம்பு முதலியவற்றினது உபத்திரவத்தின் பரிகாரமும், போர்வையால் குளிர் முதலியவற்றின் பரிகாரமுமாம். உம்மையாற் கொள்ளப்படும் பாதுகைகளால் உச்சிஷ்டமான இடத்தின் ஸ்பரிச முதலிய வற்றின் பரிகாரமும் கொள்ளப்படும். உலகத்தின் உபகாரமாவது தண்ட முதலிய குறிகளால் இவனது உத்தமமான ஆசிரமத்தினை அறிந்து, அவர்க்குசிதமான வணக்கம் பிக்ஷையளித்தல் முதலிய பிரவிருத்தியினாலாம் சுகிருத (புண்ணிய) சித்தியாம். உம்மையால் சிஷ்டாசாரத்தால் பெறப்பட்டதான ஆசிரம மரியாதையினைக் காத்தலும் கொள்ளப்படும். கௌபீன முதலியவற்றைக் கொள்ளுதல் அநுகூலமாதல் பற்றியாமென்று அபிப்பிராயப்பட்டு, அது முக்கியமாதலை *" तच्च न मुख्योऽस्ति அதுவும் (கௌபாநாதிகளைக் கொள்ளுதலும்) முக்கிய மன்று," என்று விலக்குகின்றார். கௌபீனாதிகளைக் கொள்ளுதல் எதுவோ அது இந்த யோகியாகிய பரம ஹம்ஸனுக்கு முக்கியமான கல்பமாகாது; மற்றோ அநுகல்பமேயாம். வித்துவத் சந்நியாசிகட்கோ தண்டங் கொள்ளுதலை முக்கியமாக்கித் தண்ட வியோகத்தின் நிஷேதம் ஸ்மிருதியில்,

" दण्डात्मनोस्तु संयोगः सर्वदैव विधीयते ।
न दण्डेन विना गच्छेदिषुक्षेपत्रयं बुधः ॥

தண்டத்திற்கும் சரீரத்திற்கும் சையோகம் எப்போதுமே விதிக்

* பரம ஹம்ஸோபநிஷத்து.

கப்படுகின்றது. அறிஞன் தண்டமின்றி பாணமெறியும் தூரம் மூன்றளவும் போகலாகாது,” என்று கூறப்பட்டுளது. தண்டம் நசிக்கின், दण्डत्यागे शतं चरेत् । தண்டத்தினை விட்டால் நூறு செய்யவேண்டும்” என்று நூறு பிராணாயாமமாகிய பிராயச்சித்தமும் ஸ்மிருதியில் கூறப்பட்டுளது. யோகியாகிய பரம ஹம்ஸனது முக்கியமான கல்பத்தினைப் பிரசினோத்தரங்களால் காட்டுகின்றார். * அது कोऽयं मुख्य इति चेदयं मुख्यो न दण्डं न शिखं न यज्ञोपवीतं नाऽऽच्छादनं चरति परमहंसः । இம்முக்கியன் யாவனெனின், இவன் முக்கியன் :—தண்டமில்லை ; சிகையில்லை ; யஞ்ஞோபவீதமில்லை ; போர்வையில்லை ; பரமஹம்ஸன் சரிக்கின்றான்” என்பதாம். எப்படி விவிதிஷுவான பரமஹம்ஸன் சிகையும் யஞ்ஞோபவீதமு மில்லாதவனாய் முக்கியனாகின்றானோ, அதுபோல யோகி தண்டமும் போர்வையுமில்லாதவனாய் முக்கியனாகின்றான். தண்டத்தின் மூங்கிலினாலாகிய தன்மை முதலியனவாகிய லக்ஷணத்தையும் போர்வையின் கந்தைத் தன்மை முதலிய லக்ஷணத்தினையும் பரீக்ஷித்தற்கும், தண்டாதிகளைச் சம்பாதித்தற்கும், இரக்ஷிப்பதற்கும் சித்தம் விரியுங்கால் சித்த விருத்தி நிரோத லக்ஷணமான யோகம் சித்தியாது என்பதனால் அதுவும் தக்கதன்று ; “ न हि वरविघाताय कन्योद्वाहः । வரன் மரணத்திற்காக கன்னிகையை மணப்பதில்லை.” என்னும் நியாயத்தால். போர்வை முதலியன இல்லாதபோது குளிர் முதலிய பாதைகட்குப் பரிகாரம் யாதென்றாசங்கித்துக் கூறுகின்றார். அது * “ न शीतं न चोष्णं न दुःखं न सुखं न मानावमानौ च षडूर्मिवर्जम् । சீதம் இல்லை ; உஷ்ணமுமில்லை ; துக்கமுமில்லை ; சுகமுமில்லை ; மானாவமானங்களுமில்லை ; ஷடூர்மிகளின்மையுமுண்டு.” என்பதாம். சித்த விருத்திகள் முழுவதும் நிரோதிக்கப்பட்ட யோகிக்குச் சீதமில்லை

* பரம ஹம்ஸோபநிஷத்து.

அவ்வுணர்ச்சி யின்மையால், எப்படி விளையாட்டில் அழுந்திய சித்த முடையவனான பாலகன் போர்வை முதலியவைக ளில்லாதவனு யிருக்கினும், பனிக்காலங்களில் காலையில் (விளையாட்டினால் இதிற் கவனமில்லாமையின்) குளிர் இருக்கமாட்டாதோ, அப்படியே பர மாத்மாவில் அழுந்திய யோகிக்கும் குளிர் இருக்க மாட்டாது. கோடையில் உஷ்ணமின்மையும் அவ்வாறே அறியத்தக்கதாம். உம்மை மழையின்மையைச் சேர்த்தற் பொருட்டாம். சீதோஷ் ணங்கள் தோற்றுதபோது, அவற்றாலாம் சுக துக்கங்களின் அபா வம் பொருந்தியதேயாம். கோடையில் சீதம் சுகத்தை யுண்டு பண்ணுவதும் பனிக்காலத்தில் துக்கத்தை யுண்டுபண்ணுவதுமாம். உஷ்ணத்தில் கூறியதற்கு மாறான தன்மை அறியத்தக்கதாம். மானமென்பது வேறு புருஷனாற் செய்யப்படுவதான சற்கா (உபசா) ரமாம்: அவமான மென்பது அவமதிப்பாம். எப்போது யோகிக் குக் தன் ஆத்மாவின் வேறுபட்ட வேறு புருஷனே தெரிகிற தில்லையோ, அப்போது மானாவமானங்கள் தூரத்தில் விலகியனவே யாம். உம்மையானது சத்துரு மித்திரு இராகம் த்வேஷம் முதலிய த்வந்த்வங்களின் இன்மையைச் சேர்க்கின்றது. ஷடூர்மிகளாவன பசி, தாகம், சோகம், மோகம், ஜரா, மரணம் என்பனவாம். முத் துவந்துவங்களான அவை கிரமமாகப் பிராணன், மனது, தேகம் என்பவற்றின் தர்மங்களா யிருத்தலின், ஆத்ம தத்வாபிமுகனான யோகிக்கு அவற்றினின்று நீங்கிய தன்மை பொருந்துகின்றது.

சங்கை :—சமாதி தசையில் இவ்வாறு சீத முதலியவைக ளின்மை இருக்குக. விழித்தபோது நிந்தாதிக் கிலேசம் சம்சாரி யினைப்போல இவனைப் பாதிக்குமே என்று சந்தித்துக் கூறுகின்றார்.

அது * “ निन्दागर्वमत्सरदम्भदर्पेच्छाद्वेषसुखदुःखकामक्रोधलोभमोह-हर्षासूयाहंकारादींश्च हित्वा । நிந்தை, கர்வம், மத்ஸரம், தம்பம் (இடம்பம்), தர்ப்பம், இச்சை, த்வேஷம், சுகம், துக்கம், காமம்,

* பரம ஹம்ஸோபநிஷத்து.

குரோதம், லோபம், மோகம், ஹர்ஷம், அசூயை, அகங்காரம் முதலியவற்றை விட்டு" என்பதாம். பல்வகைப் புருடர்களால் தன்னிடத்தில் சம்பாதிக்கப்பட்ட தோஷமுடைய வார்த்தை நிந்தையாம். மற்றவர்களினும் அதிகன் யான் என்னும் சித்தவிருத்தி கர்வமாம். வித்தை தன முதலியவற்றால் மற்றவனை யொத்தவனாவேன் என்னும் புத்தி மற்சரமாம். பிறர் முன் ஜபம் தியான முதலியவற்றை வெளிப்படுத்தல் (அவர் காணச் செய்தல்) தம்பமாம். கொடுஞ்சொல் முதலியவற்றில் திடபுத்தி தர்ப்பமாம். தனுதியபிலாஷை இச்சையாம். சத்துருவத முதலிய புத்தி துவேஷமாம். அநுகூலத்திரவியாதி லாபத்தினாலாம் புத்தியின் ஸ்வஸ்தத்தன்மை சுகமாம். அதனின் மாறானது துக்கமாம். ஸ்திரீ முதலியவற்றின் அபிலாஷை காமமாம். காமித்த பொருளின் கேட்டால் உண்டாவதான புத்தியின் கலக்கம் குரோதமாம். கிடைத்த தனத்தினது நீக்கத்தினை சகியாமை லோபமாம். ஹித (நல) மானவற்றில் அஹித (நலமின்மைப்) புத்தியும், அஹிதமானவற்றில் ஹிதபுத்தியும் மோகமாம். சித்தத்தின்கண் உள்ள சுகத்தினை வெளிப்படுத்துவதும் முகமலர்ச்சி முதலியவற்றிற் கேதுவானதுமான புத்திவிருத்தி ஹர்ஷமாம். பிறருடைய குணங்களில் தோஷத்தன்மையை ஆரோபித்தல் அசூயையாம். தேகேந்திரிய சங்காதங்களில் ஆத்மத்தன்மைப் பிரமம் அகங்காரமாம். முதலிய என்னும் சொல்லால் போக்கிய வஸ்துக்களில் என்னுடையது, நலமுடையது என்னுந் தன்மை முதலிய புத்திகளும் கொள்ளப்படும். உம்மையானது கூறிய நிந்தை முதலியவற்றின் விபரீதமான ஸ்துதி முதலியவற்றினைச் சேர்க்கின்றது நிந்தை முதலியனவாகிய இவ்வெல்லாவற்றினையும் முற்கூறிய வாசனக்ஷயாப்பியாசத்தால் விட்டு நிற்கின்றான் என்பது பொருள்.

சங்கை :—தனது தேகமுள்ளபோது அவற்றின் விடுபாடு சம்பவியாதென்று ஆசங்கித்துக் கூறுகின்றார். அது * "स्वचपुः

* பரம ஹம்ஸோபநிஷத்து.

कुणपमिव दृश्यते यतस्तद्वपुरपध्वस्तम् । எதனால் அச்சரீரம் விலக்கப்பட்டதோ, அதனால் அந்தத் தனது சரீரம் பிணம்போல் காணப்படுகின்றது” என்பதாம். முன் எது தனது சரீரமாயிருந்ததோ, அது இப்போது யோகிக்குத் தனது ஆத்மாவினும் வேறுபட்ட தன்மையால் பிணம்போற் காணப்படுகின்றது. எப்படிச் சிரத்தையுள்ளவன் பயத்தினால் தூரத்தில் நின்று பார்க்கின்றானோ, அப்படி இந்த யோகி தாதாத்மியப் பிராந்தியுதயமாகுமென்னும் பயத்தினால் சாவதானனாய்ச் சிதாத்மாவினின்று இடைவிடாது வீக்ஷிக்கின்றான். எக்காரணத்தால் அச்சரீரம் ஆசாரியோபதேசம் சாஸ்திரம் அநுபவம் என்பவற்றால் சிதாத்மாவினின்று நிராகரிக்கப்பட்டதாகின்றதோ, அதனால் சைதன்யத்தினின்று பிரிபட்டதேகம் சவத்திற்குச் சமானமாகக் காணப்படுதலால் தேகமிருக்கினும், நிந்தை முதலியவற்றின் தியாகம் நிகழும் என்பது அபிப்பிராயம்.

சங்கை:—உண்டாகியதான திக்குப் பிரமம் சூரியோதய தரிசனத்தால் நஷ்டமானதாயினும், எப்படி ஒரு காலத்தில் அநுவிர்த்திக்கின்றதோ (மறுபடியும் நிகழ்கின்றதோ) அப்படி ஒருகால் ஆத்மாவில் தேகாத்மத் தன்மைச் சம்சயாதிகளின் அநுவிருத்தியுளதாக : நிந்தை முதலிய கிலேசம் மறுபடியும் மறுபடியும் தொடருமேயென்று ஆசங்கித்துக் கூறுகின்றார். * “संशयविपरीतमिथ्याज्ञानानां यो हेतुस्तेन नित्यनिवृत्तः । சம்சய விபரீத மித்தியா ஞானங்கட்கு ஏது எதுவோ அதனால் நித்திய நிவிருத்தனாயிருக்கின்றான்.” என்பதாம். ஆத்மா கர்த்திருத்துவாதி தர்மங்களோடு கூடியதா? அவைகளின்றியதா? என்றல் முதலியன சம்சயஞானம். தேகாதி வடிவமே ஆத்மா என்பது விபரீதஞானம். இவ்விரண்டும் கர்த்திருத்துவ போக்திருத்துவ விஷயமானது. மித்தியா ஞானமோ போக்கியவிஷயமானது என்று சொல்லக் கருதியதாம். அது அநேக

---

* பரம ஹம்ஸோபநிஷத்து.

விதம்; संकल्पप्रभवान्कामान् । சங்கற்பத்தினின்றுண்டாகிய காமங்களை " என்னுமிடத்தில் ஸ்பஷ்டமாக்கப்பட்டுளது.

அந்த ஹேது "अनित्याशुचिदुःखानात्मसु नित्यशुचिसुखात्मख्यातिरविद्या । அநித்திய அசுசி துக்க அநாத்மாக்களில் நித்திய சுசி சுக ஆத்ம புத்தி அவித்தையாம்" என்னும் சூத்திரத்தால் நால் வகையினதாம். அநித்தியமான கிரிநதி சமுத்திர முதலியவற்றில் நித்தியத்துவப் பிராந்தி முதலாவது. அசுசியான புத்திர பாரியாதி சரீரத்தில் சுசித்துவப் பிராந்தி இரண்டாவது. துக்கமாகிய கிருஷி வாணிஜ்யாதிகளில் சுகத்துவப் பிராந்தி மூன்றாவது. கௌண மித்யாத்மாக்களாகிய புத்திர பார்யாதிகளும் அந்நமயாதிகளுமான அநாத்மாவில் ஆத்மத்துவப் பிராந்தி நான்காவது. சம்சயமுதலியனவாகிய இவற்றிற்கு ஏது அத்வைதப் பிரஹ்மாத்ம தத்துவத்தினை மறைப்பதான அஞ்ஞானமும் வாசனையுமாம். அவ்வஞ்ஞானம் யோகியான பரம ஹம்ஸனுக்கு மகாவாக்கியார்த்த ஞானத்தினால் நீங்கியதாகின்றது. வாசனையோ யோகாப்பியாசத்தினால் நீங்கியதாகின்றது. உதாகரிக்கப்பட்ட திக்குப் பிரமத்தில் அஞ்ஞானம் நீங்கியதாயினும், வாசனை யிருத்தலால் முன்போலப் பிராந்தி வியவகாரமுண்டாகிறது. யோகிக்குப் பிராந்தியின் ஏது விரண்டுமின்றிய தன்மையால் சம்சயாதிகள் எங்கிருந்து அநுவர்த்திக்கும். இவ்வாறு அவ்வநுவிருத்தியினைக் கருதியே அவ்வேது இரண்டினால் யோகி நித்திய நிவிருத்தனாயிருக்கின்றான் என்று கூறியதாம். அஞ்ஞானமும் அதன் வாசனையும் நீங்கியபோது, அந்த நீக்கத்திற்கு விநாசமின்மையால் நித்தியத்துவ முளது என்று காண வேண்டும். அது நித்தியமாதலில் ஏது வினைக் கூறுகின்றார். அது * "तन्नित्यबोधः அதில் நித்தியபோதமுள்ளவன்." என்பதாம். அதில் அதாவது சர்வ வேதாந்தப் பிரசித்தமான பரமாத்மாவில்

* பரம ஹம்ஸோபநிஷத்து.

எந்த யோகிக்கு நித்தியபோத மிருக்கின்றதோ, அவன் அதில் நித்தியபோத முள்ளவ னெனப்படுவன்- யோகியே "तमेव धीरो विज्ञाय प्रज्ञां कुर्वीत ब्राह्मणः । தீரனை பிராஹ்மணன் அதனையே அபரோக்ஷமா யறிந்து பிரஞ்ஞையினைச் செய்வன்" என்னும் சுருதியை அநுசரித்து, சித்த விக்ஷேபங்களை யோகத்தினால் பரிகரித்து, நிரந்தரம் பரமாத்ம விஷயமான பிரஞ்ஞையினையே செய்கின்றான். அதனால் போதம் நித்தியமா யிருத்தலின் போதத்தினால் விநாசமாகத்தக்கனவாகிய அஞ்ஞானமும் அதன் வாசனையுமாகிய இரண்டன் நிவிருத்தி நித்தியமாமென்பது பொருள்.

அறியப்படுகின்ற பரமாத்மாவிற்குத் தார்க்கிகர்களது ஈசுவரன் போன்ற தடஸ்தத் தன்மைச் சங்கையினை விலக்குகின்றார். அது * "तत्स्वयमेवावस्थितिः । அது தானாகவே நிலைத்தல் உளது" என்பதாம். வேதாந்தங்களால் அறியத் தக்கதான பரப்பிரஹ்மம் எதுவோ அது தானே; தன்னின் வேறன்று என்றிவ்வாறு யோகிக்கு நிலைப்பு உண்டாகின்றது என்பது பொருள். அந்த யோகியின் பிரஹ்மாநுவப் பிரகாரணத்தினைச் காட்டுகின்றார். அது * "तं शान्तमचलमद्वयानन्दाविज्ञानघन एवास्मि तदेव मम परमं धाम । சாந்தமும், அசலமும், அத்வயமும், ஆநந்த விஞ்ஞான கனமுமான அதுவே யான். அதுவே எனது மேலான ஸ்வரூபம்" என்பதாம். எந்தப் பரமாத்மா குரோதாதி விக்ஷேபமின்றிய சாந்தமாய், கமனாதிக் கிரியை யின்றிய அசலமாய், அத்வயமாய் அதாவது ஸ்வகத ஸஜாதீய விஜாதீய பேத சூநியமாய் சச்சிதாநந்த ஏகரஸமா யிருக்கின்றதோ, அதுவே யான். அந்தப்பிரஹ்ம தத்துவமேயோகியாகிய எனது மேலான வாஸ்தவ ஸ்வரூபம். கர்த்திருத்துவ போக்திருத்துவாதி எதுவோ, அது பொருத்தமுடையதன்று; இது மாயை

---

* பரம ஹம்ஸோபநிஷத்து.

யினற் கற்பிக்கப்பட்டதா யிருத்தலின். சங்கை—ஆத்மாவிற்குப் பரப்பிரஹ்மத்துவ முளதாக; இப்போது ஆநந்தப் பிராப்தி எங் கிருந்துளதா மென்னு மிடத்து ஆநந்தா வாப்தி திருஷ்டாந்தத் தோடு அபியுக்தர்களால் "गवां सर्पिः शरीरस्थं न करोत्यङ्गपोषणम् । तदेव कर्मरचितं पुनस्तस्यैव भेषजम् ॥ एवं सर्वशरीरस्थः सर्पिवत्परमेश्वरः । विना चोपासनं देवो न करोति हितं नृषु ॥ சரீரத்தி லிருப்பதான பசுவின் நெய் அங்க போஷணத்தினைச் செய்யாது. மறுபடியும் அதுவே கர்மத்தினலாக்கப்பட்டதாய் (கறந்து கடைந் தெடு) க்கப்பட்டதாய் அதற்கே மருந்தாகின்றது. இவ்வாறு நெய் போலச் சர்வ சரீரத்தினு மிருப்பவரான பரமேசுவரனாகிய தேவன் (ஆத்மாநுசந்தானமாகிய) உபாசனமின்றி நரர்களிடத்தில் இதத் தினைச் செய்யார்." என்று சொல்லப்பட்டுளது.

யோகிக்குப் பூர்வாசிரமப் பிரசித்தர்களான ஆசாரியர் பிதா பிராதா முதலிய கர்மிகளாகிய சிரத்தா ஜடர்கள் சிகை யஞ்ஞோப வீதம் சந்தியாவந்தன முதலியவைகளின்றிய தன்மையால் பாஷண்டத் தன்மையினை ஆரோபித்து மோகிக்கச் செய்வாராயின் அப்போது அம்மயக்கம் உதியாதிருக்க யோகிக்கு வர்த்தமான மாகிய நிச்சயத்தினைக் காட்டுகின்றார். அது * "तदेव च शिखा तदेवोपवीतं च परमात्मात्मनोरेकत्वज्ञानेन तयोर्भेद एव विभग्नः सा संध्या । (பரபிரஹ்ம ஞானமாகிய) அது சிகையுமாம். அதுவே பூணூலுமாம். பரமாத்ம ஆத்மாக்களின் ஏகத்துவ ஞானத்தினல் அவ்விருவரது பேதமேகெட்டது. அது சந்தியாவாம்." என்பதாம். வேதாந்தங்களா லறியத்தக்க பரப்பிரஹ்மத்தின் ஞானம் எதுவோ கர்மாங்க வடிவ வெளிச் சிகா யஞ்ஞோபவீத ஸ்தானத்ததாம். மற்றைய மந்திர திரவிய லக்ஷண கர்மாங்க வடிவினதாகிய

* பரம ஹம்ஸோபநிஷத்து.

இரண்டும் மூலத்திலுள்ள உம்மையால் கொள்ளத் தக்கனவாம். சிகாதி அங்கங்களால் சாதிக்கப்படும் கர்மங்களால் உண்டாவதான சுவர்க்க சுகமெதுவோ, அது முழுதும் பிரஹ்ம ஞானத்தினாலேயே பெறப்படும்; விஷயாநந்தம் யாவும் பிரஹ்மாநந்தத்தின் இலேசமாயிருத்தலால்; "एतस्यैवानन्दस्यान्यानि भूतानि मात्रामुपजीवन्ति । இவ்வாநந்தத்தின் இலேசத்தினைக் கொண்டே மற்றப் பூதங்கள் ஜீவிக்கின்றன" என்று சுருதி கூறுதலால், இவ்வபிப்பிராயங் கொண்டே ஆதர்வணிகர்கள் பிரஹ்மோபநிஷத்தில்,

"सशिखं वपनं कृत्वा बहिः सूत्रं त्यजेद्बुधः ।
यदक्षरं परं ब्रह्म तत्सूत्रमिति धारयेत् ॥

सूचनात्सूत्रमित्याहुः सूत्रं नाम परं पदम् ।
तत्सूत्रं विदितं येन स विप्रोवेदपारगः ॥

येन सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव ।
तत्सूत्रं धारयेद्योगी योगवित्तत्त्वदर्शिवान् ॥

बहिः सूत्रं त्यजेद्विद्वान्योगमुत्तममास्थितः ।
ब्रह्मभावमिदं सूत्रं धारयेद्यः सचेतनः ॥

धारणात्तस्य सूत्रस्य नोच्छिष्टो नाशुचिर्भवेत् ।
सूत्रमन्तर्गतं येषां ज्ञानयज्ञोपवीतिनाम् ॥

ते वै सूत्रविदो लोके ते च यज्ञोपवीतिनः ।
ज्ञानशिखाज्ञाननिष्ठा ज्ञानयज्ञोपवीतिनः ॥

* பரம ஹம்ஸோபநிஷத்து.

ज्ञानमेव परं तेषां पवित्रं ज्ञानमुच्यते ।
अग्नेरिव शिखा नान्या यस्य ज्ञानमयी शिखा ॥
स शिखीत्युच्यते विद्वान्नेतरे केशधारिणः ।
कर्मण्यधिकृता ये तु वैदिके ब्राह्मणादयः ॥
तैर्विधार्यमिदं सूत्रं क्रियाङ्गं तद्धि वै स्मृतम् ।
शिखा ज्ञानमयी यस्य चोपवीतं च तन्मयम् ॥
ब्राह्मण्यं सकलं तस्य इति ब्रह्मविदो विदुः ।
इदं यज्ञोपवीतं च परमं यत्परायणम् ॥
विद्वान्यज्ञोपवीती स्यात्तज्ज्ञास्तं यज्विनं विदुः ।

சிகையுடன் வபனத்தினைச் செய்து அறிஞன் வெளிச் சூத்திரத்தினை நீக்கவேண்டும். எது அக்ஷரமாகிய பரப்ரஹ்மமோ அதினைச் சூத்திரமென்று தரிக்கவேண்டும். சூசித்தலால் சூத்திரமென்பர். சூத்திரமென்பது பரம் (மேலான) பதம். அச்சூத்திரம் எவனால் அறியப்பட்டதோ, அந்த விப்பிரன் வேதத்தின் கரைகடந்தவன். எதனால் இவ்வெல்லாம் சூத்திரத்தில் (நூலில்) மணிக்கூட்டங்களைப்போல கோக்கப் பட்டிருக்கின்றதோ அச்சூத்திரத்தினை யோக முணர்ந்தவனும் தத்துவ தரிசன முடையவனுமான யோகி தரிக்கவேண்டும். உத்தமமான யோகத்தில் நிலைத்தவனான வித்துவான் வெளிச் சூத்திரத்தினை விடவேண்டும். சேதன முடையவன் பிரஹ்ம பாவமாகிய இச் சூத்திரத்தினைத் தரிக்கவேண்டும். அச் சூத்திரத்தினைத் தரித்ததால் உச்சிஷ்டமில்லை;

* பரம ஹம்ஸோபநிஷத்து.

அசுசியுண்டாகாது. ஞான யஞ்ஞோபவீத முடையவர்களான எவர்கட்கு உள்ளிருப்பதான சூத்திரமிருக்கிறதோ, அவர்கள்தாம் உலகத்தில் சூத்திர முணர்ந்தவர்கள். அவர்களே யஞ்ஞோபவீத முடையோர்; ஞான சிகையுடையோர்; ஞானநிஷ்டர்; ஞான யஞ்ஞோபவீதமுடையோர். ஞானமே அவர்கட்கு மேலான்தாம். பவித்திரம் ஞானமெனப் படுகின்றது. அக்கினியே சிகையாம். வேறன்று. எவனுக்கு அக்கினியின் சிகைபோல் ஞானமயமான சிகை இருக்கிறதோ, வேறில்லையோ, அந்த வித்வான் சிகை யுடையவன் எனப்படுகின்றான்; மற்றைய கேசதாரிகள் எனப்படார். வைதிகமான கர்மத்தில் அதிகார முடையவரான் பிராஹ்மணாதியர் எவரோ, அவர்களால் இச்சூத்திரம் (பூணூல்) தரிக்கத்தக்கதாம். அது கர்மாங்கமாகக் கருதப்பட்டது. ஞானமயமான சிகையும் அதே (ஞான) மயமான உபவீதமும் எவனுக்கிருக்கிறதோ, பிராஹ்மண்யம் (பிராஹ்மண தர்மம்) முழுவதும் அவனுடையதா மென்று பிரஹ்மவித்துக்கள் அறிகின்றனர். எதனால் இந்த யஞ்ஞோபவீதம் பரமமும் பராயணமும் (மேலான கதியும்) ஆமோ அதனால் அதை யறிந்தவன் யஞ்ஞோபவீதி யாகின்றான். அதனை யுணர்ந்தவர் அவனை யாகஞ்செய்பவன் என்று அறிவர்" என்று கூறுகின்றனர்.

ஆதலால் யோகிகட்குச் சிகா யஞ்ஞோபவீதங்கள் எப்படி இருக்கின்றனவோ, அப்படியே சந்தியையு மிருக்கின்றது. சாஸ்திரத்தினு லறியத்தக்க பரமாத்மாவும் அகம் பிரத்தியய (யானென்னும் ஞான) த்தா லறியத்தக்க ஜீவாத்மாவு மான இரண்டன் மகா வாக்கிய ஜந்நிய ஏகத்துவ ஞானத்தினால் பிராந்தியினாற் றோற்றுவதான பேதம் விசேஷமாகக் கெட்டதாகின்றது. மறுபடியும் உதயமாகாமை கேட்டின் விசேஷமாம். இந்த ஏகத்துவ புத்தி எதுவோ, அது இவ்விரு ஆத்மாக்களின் சந்தியில் உண்டாவதா யிருத்தலின் சந்தியை எனப்படுகின்றது. பகலிரவு

* பரம ஹம்ஸோபநிஷத்து.

களின் சந்திகளில் அநுஷ்டிக்கத்தக்கக்கிரியை எப்படிச் சந்தியோ, அதுபோலவாம். இவ்வாறாகவே யோகி சிரத்தா ஜடர்களால் மோகிப்பிக்கக் கூடியவனாகான்.

'இம்மார்க்கம் யாது' என்ற பிரசினத்திற்கு 'இவன் தனது புத்திரன்' என்றல் முதலியவற்றால் உத்தரம் சொல்லப்பட்டது. ஸ்திதி யாது' என்பதற்கு 'மகா புருஷன்' என்றல் முதலியவற்றால் சுருக்கமான உத்தரத்தினைக் கூறி, 'சம்சய விபரீத மித்யா ஞானங்கட்கு' என்றல் முதலியவற்றால் அதனையே விரித்துக்கூறி, இப்போது உபசங்கரி (முடி) க்கின்றார். அது

* "सर्वान्कामान्परित्यज्य अद्वैते परमा स्थितिः ।

சர்வ காமங்களையும் விட்டு, அத்வைதத்தில் மேலான ஸ்திதி பொருந்துகின்றது" என்பதாம். குரோத லோபாதிகள் காமம் நிரப்புவதாயிருத்தலின் காமத்தை விடுதலால் சித்த தோஷங்கள் யாவும் விடுபடுகின்றன. இவ்வபிப்பிராயங் கொண்டே வாஜஸநேயிகள்

"अथो खल्वाहुः काममय एवायं पुरुषः ।

ஆதலால் இப்புருஷன் நிச்சயமாகக் காமமயனே என்பர்" என்று கூறுகின்றனர். இதனால் நிஷ்காமமான யோகி சித்தத்திற்கு அத்வைதத்தில் நிர்விக்கினமான ஸ்திதி பொருந்துகின்றது.

சங்கை :—தண்டத்தினைக் கிரகிக்கும் விதி வலியோடு கூடிய விவிதிஷா சந்நியாசிகள் தண்டமின்றிய யோகியாகிய பரமஹம்ஸனை அங்கீகரியார்களோ என்றுசங்கித்து

---

* பரம ஹம்ஸோபநிஷத்து.

*" ज्ञानदण्डो धृतो येन एकदण्डी स उच्यते ।
काष्ठदण्डो धृतो येन सर्वाशी ज्ञानवर्जितः ॥
स याति नरकान्घोरान्महारौरवसंज्ञकान् ।
तितिक्षाज्ञानवैराग्यशमादिगुणवर्जितः ॥
भिक्षामात्रेण यो जीवेत्स पापी यतिवृत्तिहा ।
इदमन्तरं ज्ञात्वा स परमहंसः ॥

ஞானதண்டம் எவனால் தரிக்கப்பட்டுளதோ, அவன் ஏகதண்டி எனப்படுகின்றான். காஷ்ட தண்டம் (மரத்தண்டு) எவனால் தரிக்கப்பட்டுளதோ, சர்வ ஆசையுள்ளவனும் ஞானமின்றியவனுமான அவன் மகா ரௌரவமென்னும் பெயருள்ளனவாகிய கோரமான நரகங்களை அடைகிறான். திதிக்ஷை ஞானம் வைராக்கியம் சமம் முதலிய குணங்களின்றியவனாய் பிக்ஷைமாத்திரத்தால் எவன் ஜீவிக்கின்றானோ, அவன் பாவி; சந்நியாசி விருத்தியினைக் கெடுப்பவனாவன். இப்பேதத்தினை அறிந்து அவன் பரமஹம்ஸனாவன். என்று கூறுகின்றார்.

பரமஹம்ஸனது இந்த ஏக தண்டம் எதுவோ அது ஞான தண்டம் காஷ்ட தண்டம் என்று இருவகையினதாம். எப்படித் திரிதண்டிகட்கு வாக்குத் தண்டம் மனோதண்டம் காயதண்டம் என்று மூவகையாமோ அதுபோல, வாக்குத் தண்ட முதலியன மதுவினால்

" वाग्दण्डोऽथ मनोदण्डः कर्मदण्डस्तथैव च ।
यस्यैते नियता बुद्धौ स त्रिदण्डीति चोच्यते ॥

* பரம ஹம்ஸோபநிஷத்து.

त्रिदण्डमेवं निक्षिप्य सर्वभूतेषु मानवः ।

कामक्रोधौ तु संयम्य ततः सिद्धिं नियच्छति ॥

வாக்குத் தண்டமும் மனோதண்டமும் அவ்வாறே கர்மதண்டமு மாகிய இவை எவனுடைய புத்தியில் நியதமா யிருக்கின்றனவோ, அவன் திரிதண்டி என்று சொல்லப்படுகின்றான்: மானவன் இவ்வாறு மூன்று தண்டத்தையும் சர்வ பூதங்களிலும் வைத்து, காமக்குரோத மிரண்டனையும் அடக்கி, அதனால் சித்தியினை அடைகின்றான்." என்று ஸ்மரிக்கப்படுகின்றது. அவற்றின் ஸ்வரூபத்தினைத் தக்ஷர்

"वाग्दण्डोऽथ मनोदण्डः कर्मदण्डस्तथैव च ।

यस्यैत नियता दण्डास्त्रिदण्डीति स उच्यते ॥

वाग्दण्डे मौनमातिष्ठेत्कर्मदण्डे त्वनीहताम् ।

मानसस्य च दण्डस्य प्राणायामो विधीयते ॥

வாக்குத் தண்டம் மனோ தண்டம் அவ்வாறே காயதண்டமென்னு மிவை எவனுக்கு நியதமான தண்டங்களா யிருக்கின்றனவோ, அவன் திரிதண்டி யெனப்படுகின்றான். வாக்குத் தண்டத்தில் மௌனமாயிருப்பன். கர்ம தண்டத்தில் சேஷ்டையின்றிய தன்மையாம். மானஸமாகிய தண்டத்திற்குப் பிராணயாமம் விதிக்கப்படுகின்றது." என்று ஸ்மரிக்கிறார். "कर्मदण्डोऽल्पभोजनम् கர்ம தண்டம் அற்ப போஜனம்" என்பது வேறு ஸ்மிருதியின் பாடம். இத்தன்மைய திரிதண்டித் தன்மை பரம ஹம்ஸனுக்கும் உண்டு இவ்வபிப்பிராயங்கொண்டு பிதாமகர்

---

* பரம ஹம்ஸோபநிஷத்து.

" यतिः परमहंसस्तु तुर्याख्यः श्रुतिचोदितः ।
यमैश्च नियमैर्युक्तो विष्णुरूपी त्रिदण्डभृत् ॥

சுருதியில் விதிக்கப்பட்டவனாக துரியனெனப்படுவனாகிய பரம ஹம்ஸ சந்நியாசி இயமங்களோடும் நியமங்களோடும் கூடினவனாய்த் திரிதண்டம் தாங்கியவனாய் விஷ்ணுரூபி யாகின்றான்." என்று ஸ்மரிக்கின்றார்.

இவ்வாறாகவே, மௌன முதலியவைகட்கு வாக்கு முதலியவற்றின் அடக்கத்திற்கேதுவாந் தன்மை யிருத்தலின், எப்படி தண்டத்துவ முளதோ, அப்படியே அஞ்ஞான தற்காரியங்களின் அடக்கத்திற் கேதுவாகிய ஞானத்திற்கும் தண்டத்துவ முளது. இந்த ஞான தண்டம் எப் பரம ஹம்சனால் தரிக்கப்பட்டுளதோ, அவனே முக்கிய ஏக தண்டி யெனப்படுகின்றான். மானஸமான ஞான தண்டத்திற்கு ஒருகால் சித்த விக்ஷேபத்தினால் மறதி நேரும் என்று அதனை நிவர்த்திக்கும்பொருட்டு நினைப்பூட்டுவதான காஷ்ட தண்டம் தரிக்கப்படுகின்றது. இச்சாஸ்திரார்த்த இரகசியத்தினை அறியாது, மூங்கில் மாத்திரத்தினால் புருஷார்த்த சித்தி யுண்டாமென்று சுருதி, காஷ்ட தண்டம் எப்பரம ஹம்ஸனால் தரிக்கப் படுகின்றதோ, அப்புருஷன் வெகுவித யாதனைகளோடு கூடிய தன்மையால் கோரங்களான மகா ரௌரவமென்று சொல்லப்படும் நரகங்களை அடைகின்றான். அதில் ஏது சொல்லப்படுகின்றது :—பரம ஹம்ஸ வேஷத்தினைக் கண்டு ஞானி யென்று மயங்கி சர்வஜனங்களும் தத்தம் வீட்டில் அவனைப் புசிக்கச்செய்வர். இவனும் நாக்கு ருசியுள்ளவனாய் விதிவிலக்கின் விவேகமின்றி எல்லாவற்றையும் புசிக்கின்றான். அதனால் பிரத்தியவாய (தோஷ)த்தினை அடைகின்றான். " नान्नदोषेण मस्करी தண்டி அந்நதோஷத்

---

* பரம ஹம்ஸோபநிஷத்து.

னால் பற்றப்படான்" "चातुवर्ण्यं चरेद्भैक्ष्यम् நான்கு வர்ணத்திலும் பிக்ஷையெடுக்குக" என்னும் இவை முதலிய வாக்கியங்களெவையோ, அவை ஞானி விஷயமானவைகளாம். இவன் ஞானமில்லாதவன் என்பதனால் இவனுக்கு நரகம் பொருந்தியதாம். இதனால் ஞானமில்லாதவனான சந்நியாசிக்குப் பிக்ஷையின் நியமத்தினை மநுவானவர்,

"न चोत्पातनिमित्ताभ्यां न नक्षत्राङ्गविद्यया ।
नानुशासनवादाभ्यां भिक्षां लिप्सेत कर्हिचित ॥
एककालं चरेद्भैक्षं न प्रसज्येत विस्तरम् ।
भैक्षे प्रसक्तो हि यतिर्विषयेष्वपि सज्जति ॥

*உத்பாத நிமித்தங்களாலும் ஒருகால் பிக்ஷையினை விரும்பலாகாது. † நக்ஷத்திராங்க வித்தையினாலும் விரும்பலாகாது. அநுசாசனம் (ஓதுவித்தல்,) வாதம், பண்டிதத் தன்மை என்பவற்றாலும் விரும்பலாகாது. ஒருகாலம் பிக்ஷை யெடுக்கவேண்டும். பிக்ஷையினை விரிவானதாக விரும்பலாகாது. ஏனெனின், பிக்ஷை புணவில் பற்றியவனான யதி விஷயங்களிலும் பற்றுவன்" என்று கூறுகின்றார்.

ஞானாப்பியாசிகளைக் குறித்து,

"एकवारं द्विवारं वा भुञ्जीत परमहंसकः ।
येन केन प्रकारेण ज्ञानाभ्यासी भवेत्सदा ॥

* பூகம்ப முதலியன உற்பாதம்; நிமித்தம் தோள் துடித்தல் முதலியன; இவற்றின் பயனைச் சொல்லுதலாலும்.

† நக்ஷத்திர வித்தை ஜோதிஷம், அங்க வித்தை சாமுத்திரகம் அல்லது மற்றைய வேதாங்கம்.

எந்தெந்த விதத்தினால் எப்போதும் ஞானாப்பியாசியா யிருக்க லாமோ, அந்த விதமாக பரமஹம்ஸன் ஒரு முறையாவது இரண்டு முறையாவது புசிக்குக." என்று ஸ்மிருதி கூறுகின்றது.

இவ்வாறாகவே, ஞானதண்ட காஷ்டதண்டங்க ளிரண்டன் தாரதம்மியமான உத்தமாதமத் தன்மை வடிவம் எதுவோ, அவ் விதனை அறிந்து, உத்தமமான ஞான தண்டத்தினை எவன் தரிக்கின் றானோ, அவனே முக்கிய பரம ஹம்ஸனென்று அறியவேண்டிய தாம்.

சங்கை :—பரம ஹம்ஸனுக்கு இந்த ஞானதண்ட மிருக்குக ; காஷ்டதண்ட நிர்பந்தம் வேண்டாம். மற்றச் சரியை எப்படிப் பட்டதா மென்று சங்கித்துக் கூறுகின்றார். அது

* "आशाम्बरो निर्नमस्कारो न निन्दा न स्तुतिर्यादृच्छिको भवेद्भिक्षुर्नावाहानं न विसर्जनं न मन्त्रं न ध्यानं नोपासनं च न लक्ष्यं नालक्ष्यं न पृथङ् नापृथङ् न चाहं न त्वं न च सर्वं न चानिकेतस्थितिरेव स भिक्षुः सौवर्णादीन्नैव परिग्रहेन्न लोकं नावलोकं च ।

ஆசாம்பரன், நிர்நமஸ்காரன், ஸ்வதாகாரனல்லன். நிந்தையில்லை. ஸ்துதியில்லை. பிக்ஷு விரும்பியபடி யிருப்ப (தடையற்ற) வனா வன், ஆவஹானமில்லை. விஸஜர்னமில்லை. மந்திரமில்லை. தியான மில்லை. உபாசனமில்லை. இலக்ஷியமில்லை. அலக்ஷிய மில்லை. வேற்றுமை இல்லை. வேற்றுமையின்மை யில்லை. நானில்லை. நீ யில்லை. எல்லாம் யில்லை. அந்த பிக்ஷு வீடின்றியஸ்திதியினனே. பொன் முதலியவற்றைக் கொள்ளலாகாது ; உலகத்தைக் கொள்ள லாகாது ; பார்க்கவும் கூடாது" என்பதாம். ஆசையே (திக்கே)

---

* பரம ஹம்ஸோபநிஷத்து.

எவனுக்கு அம்பர(போர்வையாகிய வஸ்திர)மாயிருக்கிறதோ அவன் ஆசாம்பரன்.

जान्वोरूर्ध्वमधो नाभेः परिधायैकमम्बरम् ।

द्वितीयमुत्तरं वासः परिधाय गृहानटेत् ॥

முழந்தாள்களுக்கு மேலும் நாபிக்குக் கீழுமாக ஒரு [illegible]ரம உடுத்து, இரண்டாவதான மேல் வஸ்திரமும் உடுத்துக் கிருகங்களுக்கு செல்லவேண்டும்" என்னும் ஸ்மிருதி வசனமெதுவோ, அது அயோகி விஷயமானதாம். இதனாற்றான் முன் அதுவும் முக்கியமன்றென்று கூறப்பட்டது.

यो भवेत्पूर्वसंन्यासी तुल्यो वै धर्मतो यदि ।

तस्मै प्रणामः कर्तव्यो नेतराय कदाचन ॥

எவன் முற்பட்ட சந்நியாசியும் தர்மத்தினால் சமமானவனுமாயிருக்கின்றானோ, அவனுக்கு நமஸ்காரம் செய்யவேண்டும். மற்றவனுக்கு ஒருபோதும் செய்யலாகாது." என்னும் வேறு ஸ்மிருதி வசனமெதுவோ அதுவும் அந்நியன் விஷயமானதாகையால் இவன் நமஸ்காரம் செய்யவேண்டியதில்லை. இதனாற்றான் பிராஹ்மணன் லக்ஷணத்தில் "நமஸ்காரமின்றியவனும் ஸ்துதியின்றியவனும்" என்று சொல்லப்பட்டது. ஸ்வதாகாரனல்லன் என்பதனால் கயை பிரயாகை முதலிய தீர்த்தங்களில் சிரத்தையின் ஜாட்டியத்தால் பிராப்தமான ஸ்வதாகாரம் நிஷேதிக்கப்படுகின்றது. (பிதிர் காரியங்களில் ஸ்வதா என்று உச்சரித்தல் ஸ்வதாகாரம்.) முன்னர் "நிந்தை கர்வம்" என்றல் முதலிய வாக்கியத்தில் பிறராற் செய்யப்படுவதான தனது நிந்தையினாலாம் கிலேசம் விலக்கப்பட்டது

* பரம ஹம்ஸோபநிஷத்து.

இவ்விடத்திலோ, தன்னாற் செய்யப்படும் பிறர் விஷயமான நிந்தையும் ஸ்துதியும் நிஷேதிக்கப்படுகின்றன. விருப்பப்படி இருக்குந் தன்மையாவது நிர்பந்த மின்றிய தன்மையாம். எந்த வியவகாரத்திலும் நிர்பந்தம் (கட்டுப்படுத்த) லாகாது.

"भिक्षाटनं जपः शौचं स्नानं ध्यानं सुरार्चनम् ।
कर्तव्यानि षडेतानि सर्वथा नृपदण्डवत् ॥

பிக்ஷைக்குப் போகுதல், ஜபம், சௌசம், ஸ்நானம், தியானம், தேவார்ச்சனம் என்னும் இவ்வாறும் இராஜ தண்டம்போல எல்லா விதத்தாலும் செய்யத்தக்கனவாம்." என்று தேவபூஜையின் எந்த நிர்ப்பந்தம் ஸ்மரிக்கப்படுகின்றதோ, அதுவும் அயோகி விஷயமானதென்றும் அபிப்பிராயங்கொண்டு "ஆவாஹனமில்லை" என்று சுருதி கூறியதாம். ஒரு முறை ஸ்மரித்தல் தியானம், இடைவிடாத்தன்மையாகத் தொடர்ந்து ஸ்மரித்தல் உபாசனம் என்பது அவ்விரண்டின் பேதமாம். எப்படி யோகிக்கு ஸ்துதி நிந்தாதி லௌகிக வியவகாரமில்லையோ, தேவபூஜாதி தர்ம சாஸ்திர வியவகாரமில்லையோ, அப்படியே இலக்ஷியத்துவ அலக்ஷியத்துவாதி ஞான சாஸ்திர வியவகாரமுமில்லை. எந்தச் சாக்ஷி சைதன்யமுளதோ, அவ்விது தத்துவமஸி யென்னும் வாக்கியத்தில் துவம் என்னும் பதத்தினால் இலக்ஷியமாம்; தேகாதி விசிஷ்டமான சைதன்யம் இலக்ஷியமாகாது. மற்றோ, வாச்சியமாம். அந்த வாச்சியம் தத் என்னும் பதத்தின் அர்த்தத்தைவிட வேறு; அதன் இலக்ஷியம் வேறன்று. தனது தேகத்திலிருக்கும் வாச்சியமான அர்த்தம் அகம் என்று வியவகரித்தற்குரியதாம். பிறன் தேகத்திருப்பது நீ என்னும் வியவகாரத்திற் குரியதாம். இலக்ஷியம் வாச்சியமென்னும் இரண்டுவிதமும் சேதனத்தோடு கூடியதாம். அந்நியமான ஜடம் ஜகத்து முழுவதுமாம என்னும் வியவகாரத்திற் குரியதாம்.

* பரம ஹம்ஸோபநிஷத்து.

என்னும் இத்தன்மைய் விகற்பம் எதுவும் யோகிக்கில்லை; அவனது சித்தம் பிரஹ்மத்தில் விசிராந்தி யடைந்திருத்தலின், இதனாலேயே அந்தச் சந்நியாசி வீடில்லாத நிலையினனாகவே யிருப்பன். நியதமாக வசிப்பதற்கு ஒரு மடத்தைச் சம்பாதிக்கின், அதில் எனதென்றனுளதாக, அதன் கேட்டிலும் விருத்தியிலும் சித்தம் விக்ஷேபப்படும். இவ்வெல்லாவற்றையும் கருதியே கௌடபாதாசாரியர்கள்.

" निस्तुतिर्निर्नमस्कारो निःस्वधाकार एव च ।
चलाचलनिकेतश्च यतिर्यादृच्छिको भवेत् ॥

ஸ்துதி யின்றியவனும், நமஸ்கார மின்றியவனும், ஸ்வதாகார சிராத்த மின்றியவனும், சலாசல தேகமும் ஆத்மாவுமான வீடுடையவனும், விரும்பியபடி இருப்பவனுமாவன் சந்நியாசி." என்று கூறுகின்றார்கள்.

எப்படி மடம் கொள்ளத்தக்கதன்றோ, அப்படியே பொன் வெள்ளி முதலியனவாகிய பிக்ஷாசமன பாத்திரங்களுள் ஒன்றும் கொள்ளலாகாது. அதனை இயமன்

" हिरण्मयानि पात्राणि कार्ष्णायसमयानि च ।
यतीनां तान्यपात्राणि वर्जयेत्तानि भिक्षुकः ॥

பொன்மயமான பாத்திரங்களும், இரும்புமயமான பாத்திரங்களுமாகிய அவை எதிகட்கு அபாத்திரங்களாம். சந்நியாசி அவற்றை விலக்கவேண்டும்" என்று கூறுகின்றார். மநுவும்,

" अतैजसानि पात्राणि तस्य स्युर्निर्व्रणानि च ।
तेषामद्भिः स्मृतं शौचं चमसानामिवाध्वरे ॥

* பரம ஹம்ஸோபநிஷத்து.

अलाबुदारुपात्रं वा मृन्मयं वैणवं तथा ।

एतानि यतिपात्राणि मनुः स्वायंभुवोऽब्रवीत् ॥

(பொன், வெள்ளி, தாம்பிர முதலிய) தைஜஸமல்லாதகாயமின்றிய பாத்திரங்கள் அவனுக்காம். யாகத்தில் சமஸம் என்னும் பாத்திரங்களைப்போல அவற்றின் ஜலத்தினால் செளசம் ஸ்மரிக்கப்பட்டுளது. சுரை குடுக்கை, மரப்பாத்திரம் அல்லது மண்மயமானது அவ்வாறே மூங்கிற் பாத்திரம் என்னுமிவை சந்நியாசியின் பாத்திரங்களாமென்று சுவாயம்புவ மநுவானவர் கூறினார்" என்று கூறுவர் போதாயனரும்,

"स्वयमाहृतपर्णेषु स्वयं शीर्णेषु वा पुनः ।

भुञ्जीत न वटाश्वत्थकरञ्जानां च पर्णके ॥

आपद्यपि न कांस्येषु मलाशी कांस्यभोजनः ।

सौवर्णे राजते ताम्रे मृन्मये त्रपुसीसयोः ॥

தானே கொண்டுவந்த இலைகளிலாவது தாமாக உதிர்ந்த இலைகளிலாவது புசிக்கவேண்டும். ஆல், அரசு, புங்கு என்பவற்றின் இலையில் புசிக்கலாகாது. ஆபத்திலும் வெண்கலப் பாத்திரத்தில் புசிக்கலாகாது. வெண்கலத்திலுண்பவன் மலம் புசிப்பவனாவன். பொன், வெள்ளி, தாமிரம், மண், தகரம், ஈயம் என்பவற்றாலாகிய பாத்திரத்திலும் புசிக்கலாகாது" என்று கூறுகின்றார்.

அவ்வாறே சிஷ்யவர்கமாகிய உலகத்தினையும் கொள்ளலாகாது; அதனை மநு,

"एक एव चरेन्नित्यं सिद्ध्यर्थमसहायकः ।

सिद्धिमेकस्य संपश्यन्न जहाति न हीयते ॥

* பரம ஹம்ஸோபநிஷத்து.

சித்தியின் பொருட்டுச் சகாயமின்றியவனாய் நித்தியம் ஒருவனா கவே சரிக்கவேண்டும். ஒருவனது சித்தியைக் கண்டு விலக்கான், விலக்கப்படான் என்று கூறுகின்றார். மேதாதிதி என்பவரும்,

" आसनं पात्रलोपश्च संचयः शिष्यसंग्रहः ।
दिवास्वापो वृथालापो यतेर्बन्धकराणि षट् ॥

एकाहात्परतो ग्रामे पञ्चाहात्परतः पुरे ।
वर्षाभ्योऽन्यत्र यत्स्थानमासनं तदुदाहृतम् ॥

उक्तालाब्वादिपात्राणामेकस्यापि न संग्रहः ।
भिक्षोर्भैक्षभुजश्चापि पात्रलोपः स उच्यते ॥

गृहीतस्य तु दण्डादेर्द्वितीयस्य परिग्रहः ।
कालान्तरोपभोगार्थं संचयः परिकीर्तितः ॥

शुश्रूषालाभपूजार्थं यशोर्थं वा परिग्रहः ।
शिष्याणां न तु कारुण्यात्स ज्ञेयः शिष्यसंग्रहः ॥

विद्या दिनं प्रकाशत्वादविद्या रात्रिरुच्यते ॥

विद्याभ्यासे प्रमादो यः स दिवास्वाप उच्यते ॥

आध्यात्मिकीं कथां मुक्त्वा भैक्षचर्यां सुरस्तुतिम् ।
अनुग्रहः पथि प्रश्नो वृथाऽऽलापः स उच्यते ॥

ஆசனம், பாத்திரலோபம், சஞ்சயம், சிஷ்ய சங்கிரகம், பகல் நித்திரை, வீண்வார்த்தை என்னும் ஆறும் சந்நியாசிக்குப் பந்தத்

* பரம ஹம்ஸோபநிஷத்து.

ஷைச் செய்கின்றனவாம். ஒரு நாளைக்குமேல் கிராமத்திலும், ஐந்து நாளைக்குமேல் புரத்திலும வருஷாகாலங்கட் கந்நியமான காலத்திலிருத்தல் யாதுவோ அது ஆசனமென்று சொல்லப்படும். கூறிய சுரைக்குடுக்கை முதலியவற்றில் ஒன்றையேனும் கொள்ளாதிருத்தல் எதுவோ அது பலி யேற்றுண்ணும் பிக்ஷுகனுக்கு பாத்திரலோப மெனப்படுகின்றது. தண்டாதிகளைக் கிரகித்துள்ளவனுக்குக் காலாந்தரத்தில் அநுபவித்தற்காக இரண்டாவது தண்டாதிகளைக் கொள்ளுதல் சஞ்சயம் (சேர்த்து வைத்தல்) என்று சொல்லப்படுகின்றது. காருணியத்தாலல்லாது பணிவிடை லாப பூஜைகளின் பொருட்டேனும் கீர்த்தியின் பொருட்டேனும் சிஷ்யர்களைக் கொள்ளுதல் சிஷ்யசங்கிரக மென்றறியத்தக்கதாம். வித்தை பிரகாசத்தன்மையால் பகலாம். அவித்தை இராத்திரி எனப்படும். வித்தியாப்பியாசத்தில் பிரமாதம் எதுவோ, அது பகல் நித்திரையெனப்படும். அத்யாத்ம விஷயமானதும், பிச்சை யேற்றற்குரியதும், நாராயண ஸ்மரணமும், தேவஸ்துதியுமான வார்த்தையினை விட்டு மந்திரோபதேச முதலிய அநுக்கிரகம் வழிப் பிரசினம் மோக்ஷமார்க்க விஷயத்தில் ஆக்ஷேபம் என்பவற்றைச் செய்தல் எதுவோ, அது வீண் வார்த்தையாம்.

'சிஷ்யவர்க்கமான உலகத்தினைக் கொள்ளலாகா' தென்னும் இவ்வளவு மாத்திரமே யாகாது. மற்றோ, அவ்வுலகத்தினைப் பார்த்தலும் கூடாது; அது பந்த ஹேதுவாதலால். உம்மையால் ஸ்மிருதியில் விலக்கப்பட்டுள்ள பிறவற்றையும் கொள்ளலாகா தென்பது கருத்தாம். அந்த நிஷித்தத்தினை (விலக்கை) மேதாதிதியென்பவர்,

"स्थावरं जङ्गमं बीजं तैजसं विषमायुधम् ।
षडेतानि न गृह्णीयाद्यतिर्मूत्रपुरीषवत् ॥

* பரம ஹம்ஸோபநிஷத்து.

रसायनं क्रियाचारं ज्योतिषं क्रयविक्रयम् ।

विविधानि च शिल्पानि वर्जयेत्परदारवत् ॥

(ரத்ந முதலிய) ஸ்தாவரம் (பசு முதலிய) ஜங்கமம், பீஜம் (வித்து) தைஜஸம் (பொன் வெள்ளி முதலியவற்று)லாகியது, விஷம், ஆயுதம் என்னும் இவ்வாறனையும் சந்நியாசி மல மூத்திரங்களைப்போல் கிரகிக்கலாகாது. இரஸாயனம் (கல்பம்,) கிரியாசாரம், ஜோதிஷம் கிரயவிக்கிரயம், பல்வகைச் சிற்பங்கள் என்பவற்றை பூர்வாசிரமத்தில் பாதாரத்தினைப்போல விலக்கவேண்டும்." என்று காட்டியிருக்கின்றார்.

போகித்த இலௌகிக வைதிக வியவகாரங்களி லுள்ள பாதகங்(கெடுதி)கள் எவையோ, அவற்றின் நீக்கம் சொல்லப்பட்டது. இனிப் பிரசினோத்தரங்களால் அத்தியந்த பாதகத்தினைக் காட்டி, அதன் நீக்கத்தினைக் கூறுகின்றார்: அது

*" आत्यन्तिकबाधकः क इति वेदाबाधकोऽस्त्येव ।

यस्माद्भिक्षुर्हिरण्यं रसेन दृष्टं चेत्स ब्रह्महा भवेत् ।

यस्माद्भिक्षुर्हिरण्यं रसेन स्पृष्टं चेत्स पौल्कसो भवेत् ।

यस्माद्भिक्षुर्हिरण्यं रसेन ग्राह्यं चेत्स आत्महा भवेत् ।

तस्माद्भिक्षुर्हिरण्यं रसेन न दृष्टं च न स्पृष्टं च न ग्राह्यं च ।

(அத்தியந்தம்) பாதகம் (கேட்டைத் தருவது) யாதெனின், ஆபாதகம் உளதேயாம். எதனால் பிக்ஷு பொன்னை இரஸத்தோடு (ஆசையோடு) பார்ப்பானாயின், அவன் பிரஹ்மஹத்தி செய்தவ

---

* பரமஹம்ஸோபநிஷத்து.

ணன்: எதனால் பிக்ஷு பொன்னை இரஸத்தோடு கொடுவானுயின், அவன் பௌல்கஸனாவன். எதனால் பிக்ஷு பொன்னை இரஸத்தோடு கொள்ளுவானாயின அவன் ஆத்மஹத்தி செய்தவனாவன். ஆகலால் பிக்ஷு பொன்னை இரஸத்தோடு பார்க்கவுமாகாது; தொடவு மாகாது; கிரகித்தலுமாகாது" என்பதாம். அத்தியந்த பாதகத் தின் இருப்பினைப் பிரதிஞ்ஞை செய்து, பொன்னிற்கு அத்தன் மைய பாதகத்துவ முண்டெனல் சொல்லப்படுகின்றது:—பிரியத் தோடு பொன் பார்க்கப்பட்டதாயின், அப்போது பார்த்தவனாகிய பிக்ஷு பிரஹ்மஹத்தி செய்தவனாவன். அதாவது பொன்னாசை யினால் அதனைச் சம்பாதித்தல் இரக்ஷித்தல்களில் எப்போதும் முயல்பவனாய், அம்முயற்சி பயனில்லாதாமென்பதனைப் பரிகரித்தற் பொருட்டு, பிரபஞ்ச மித்திபாத்துவத்தினைப் பிரதிபாதிக்கும் வேதாந்தங்களைத் தூஷித்து, அதன் சத்தியத் தன்மையை அவலம் பிக்கின்றான். அதனால் சாஸ்திர சித்தமான அத்விதீயப் பிரஹ்மம் அச்சந்நியாசியால் கொல்லப்பட்டதே யாகின்றது. ஆகலால் இவன் பிரஹ்மஹத்தி செய்தவனாவன். அவ்வாறே ஸ்மிருதியும்,

"ब्रह्म नास्तीति यो ब्रूयाद् द्वेष्टि ब्रह्मविदं च यः ।
अभूतब्रह्मवादी च त्रयस्ते ब्रह्मघातकाः ॥

எவன் பிரஹ்மமில்லையென்று சொல்லுகிறானோ, எவன் பிரஹ்ம ஞானியைத் துவேஷிக் கின்றானோ, எவன் பிரஹ்மவாதியாக வில்லையா, அம்மூவரும் பிரஹ்மக் கொலைஞராவர்." என்றும்,

"ब्रह्महा स तु विज्ञेयः सर्वधर्मबहिष्कृतः ।

சர்வதர்மங்களினின்றும் புறம்பாக்கப்பட்டவனாகிய அவன் பிரஹ்ம ஹத்தி செய்தவனென்று அறியத்தக்கவனாவன்." என்றும் கூறு கின்றது. அபிலாஷையோடு பொன் தொடப்பட்டதாயின், அப்

* பரம ஹம்ஸோபநிஷத்து.

போது தொட்டவனாகிய அச்சந்நியாசி பதிதத்துவத்தால் வீழ்ந்த (தன்மையால்) பௌல்கஸன் அதாவது மிலேச்சனாய்த்தவன் ஆகின்றான். பதிதத்துவமும் ஸ்மிருதியில்,

"पतत्यसौ ध्रुवं भिक्षुर्यस्य भिक्षोर्द्वयं भवेत् ।
धीपूर्वं रेतउत्सर्गो द्रव्यसंग्रहं एव च ॥

புத்திபூர்வமாக வீரியத்தினை வெளிப்படுத்தலும் திரவிய சங்கிரகமுமான இவ்விரண்டும் எந்தச் சந்நியாசிக்குளதோ, அச்சந்நியாசி நிச்சயமாக விழுகின்றான்," என்று கூறப்பட்டுளது. அபிலாஷையோடு பொன் கிரகிக்கத்தக்கதன்று, கிரகிக்கப்பட்டதாயின், அச்சந்நியாசி தேகேந்திரியாதி சாக்ஷியும், அசங்கமுமான சிதாத்மாவினைக் கொன்றவனாகின்றான். சுவாத்மாவின் அசங்கத் தன்மையைப் போக்கி, பொன் முதலிய திரவியத்தைக் குறித்துப் போக்திருத் தன்மையாக அறியப்பட்டமையால், அவனுக்கு வேற்றுத்தன்மையான உணர்ச்சியினால் சர்வ பாப வடிவத்தன்மை ஸ்மிருதியில்,

"योऽन्यथा सन्तमात्मानमन्यथा प्रतिपद्यते ।
किं तेन न कृतं पापं चोरेणात्मापहारिणा ॥

ஒரு வகையா யிருக்கின்ற ஆத்மாவினை மற்றோர் வகையாக எவன் அறிகின்றானோ, அந்த ஆத்மாபகாரியான திருடனால் செய்யப்படாத பாவம் யாது? (எல்லாப் பாவங்களும் செய்யப்பட்டனவா மென்பது பொருள்)," என்று கூறப்பட்டுளது. அன்றியும் ஆத்மஹத்தி செய்தவனுக்குச் சுகமற்பமுமில்லாதனவும் வெகுவித துக்கங்களாற் சூழப்பட்டனவுமாகிய லோகங்கள் சுருதியில்,

---

* பரம ஹம்ஸோபநிஷத்து.

"असुर्या नाम ते लोका अन्धेन तमसाऽऽवृताः ।
ताँस्ते प्रेत्याभिगच्छन्ति ये के चात्महनो जनाः ॥

எந்தெந்த ஜனங்கள் ஆத்மாவைக் கொன்றவராவரோ, அவர்கள் மிக்க இருளால் மூடப்பட்டனவாகிய அந்த (பிரசித்தமான) அசுர்யம் (பிரகாசமின்றியது) என்னும் லோகங்கள் எவையோ அவற்றை நோக்கிச் செல்லுகின்றனர். (தனது சரீரமாகிய ஆத்மாவைக் கொன்றவர்கள் சக்கரவாள கிரிக்கப்பாலுள்ள சூரியனில்லாத இருட் பூமிக்குச் செல்லுகின்றனர். தனது ஆத்மாவை யறியாததினுல் கொன்றவர்கள் ஞானசூரியனின்றி அஞ்ஞான விருளால் மூடப் பட்டுள்ள தேகமாகிய லோகத்திற்குச் செல்லுகின்றனர். அதாவது அடிக்கடி பிறப்பார் என்பது கருத்து" என்று கேட்கப்படுகின்றது. "பார்க்கவு மாகாது" என்பதிலுள்ள உம்மையால் கேட்கவு மாகாது என்பது கூட்டப்படுகின்றது. "தொடவுமாகாது" என்பதிலுள்ள உம்மையால் பேசவுமாகாது என்பது கூட்டப்படு கின்றது. "கிரகித்தலுமாகாது" என்பதிலுள்ள உம்மையால் வியவ கரித்தலும் கூடாது என்பது சேர்க்கப்படுகின்றது. பார்த்தல், தொடுதல் கிரகித்தல் என்பவற்றைப் போல அபிலாஷையோடு பொன்னின் விருத்தாந்தத்தைக் கேட்டலும், அதன் குணத்தைப் பேசுதலும், அதன் சம்பந்தமான கிரியை முதலிய வியவகாரங் களும் பிரத்திய வாயத்திற்குக் காரணங்களாம் என்பது பொருள். எதனுல் ஆசையோடு பொன்னைப் பார்த்தல் முதலியன தோஷத் தையுண்டு பண்ணுவன வாகின்றனவோ, அதனுல் சந்நியாசியினுல் பொன்னைப் பார்த்தல் முதலியன விலக்கத் தக்கனவா மென்பது பொருள்.

பொன்னை விலக்குதலின் பயனைக் கூறுகின்ருர். அது,

---

* பரம ஹம்ஸோபநிஷத்து.

* " सर्वे कामा मनोगता व्यावर्तन्ते दुःखे नोद्विग्नः सुखे निःस्पृहस्त्यागी रागे सर्वत्र शुभाशुभयोरनभिस्नेहो न द्वेष्टि न मोदते च सर्वेषामिन्द्रियाणां गतिरुपरमते य आत्मन्येवावस्थीयते ॥

அவனுடைய மனத்திலுள்ளனவாகிய எல்லாக் காமங்களும் விலகுகின்றன: துக்கத்திற் கலங்காதவன், சுகத்தில் ஆசையில்லாதவன் இராகத்தில் தியாகமுள்ளவன். எங்கும் சுபாசுபங்களில் பற்றுதவன். த்வேஷியான், சந்தோஷியான், (இத்தன்மையனுய்) எவன் ஆத்மாவிலேயே நிலைக்கின்ருனே, அவனுடைய எல்லா இந்திரியங்களின் கதி ஒடுங்குகின்றது." என்பதாம். புத்திரன், பாரியை, கிருகம் க்ஷேத்திர முதலிய காமங்கள் எல்லாவற்றிற்கும் பொன் காரணமா யிருத்தலால், பொன்னை விட்டபோது, அக்காமங்கள் மனதி லிருப்பனவாய் வேறுபடுகின்றன. காமம் நீங்கியபோது, காமத்தினு லடையப்படுவனவாகிய துக்க சுகங்களில் கொதிப்பும் ஆசையும் உண்டாகா. இது ஸ்திதப் பிரஞ்ஞனைக் கூறிய விடத்தில் விரிக்கப்பட்டுளது. இவ்வுலகத்துச் சுக துக்கங்களின் விக்ஷேபத் தன்மையால் பரலோக விஷய ராகத்திலும் தியாக முண்டாகின்றது. இகலோக சுகவிருப்போடு கூடியவனே அத் திருஷ்டாந்தத்தால் அநுமிக்கப்படும் பரலோக சுகத்தில் விருப்புடையவ னுகின்ருன். ஆதலால் இக சுகத்தில் ஆசை யின்றியவனுக்குப் பர சுகத்தில் இராக மின்மை பொருந்துகின்றது. இவ்வாருகவே எங்கும் (இகம் பரமிரண்டிலும்) அநுகூலப் பிரதிகூல விஷயங்களான சுபாசுபங்களில் பற்றுதவனுவன். இது த்வேஷ மின்மைக்கும் உபலக்ஷணம். அப்படிப்பட்ட வித்வான் அசுபஞ் செய்பவனுன எப்புருஷனையும் த்வேஷியான். சுபஞ்செய்பவனைப் பார்த்துச் சந்தோஷியான் த்வேஷமும் சந்தோஷமுமின்றியவனுன எப்புருஷன் ஆத்மாவி

* பரம ஹம்ஸோபநிஷத்து.

லேயே எப்போதும் நிலைக்கின்றதோ, எல்லாமாகிய அவனுடைய எல்லா இந்திரியங்களின் கதி (பிரவிருத்தி) ஒடுங்குகின்றது. இந்திரிய மொடுங்கியபோது ஒருபோதும் நிர்விகற்ப சமாதிக்கு விக்கினம் வராது. அவர்களது ஸ்திதி யாது என்னும் பிரசினத்திற்குச் சுருக்கமாகவும் விஸ்தாரமாகவும் உத்தரம் சொல்லப்பட்டது. அதுவே இங்கு மறுபடியும் பொன் விலக்குப் பிரசங்கத்தால் ஸ்பஷ்டமாக்கப்பட்டது.

இனி வித்வத் சந்நியாசத்தினை உபசங்கரிக்கின்றார். அது

* " यत्पूर्णानन्दैकबोधस्तद्ब्रह्माहमस्मीति कृतकृत्यो भवति कृतकृत्यो भवति ।

எது பூர்ணமும் ஆநந்தமும் ஏகமும் போதமுமாயுளதோ, அந்தப் பிரஹ்மம் யான் என்று (அநுபவித்து) கிருதகிருத்தியனாகின்றான்" என்பதாம். எந்தப் பிரஹ்மம் வேதாந்தங்களில் பூர்ணாநந்தைக போத பரமாத்மாவென்று நிரூபிக்கப்பட்டுளதோ, அந்தப் பிரஹ்மம் யான் என்று எப்போதும் அநுபவித்து இந்த யோகியான பரமஹம்ஸன் கிருதகிருத்தியனாகின்றான் என்பது பொருள். அவ்வாறே ஸ்மிருதியும்,

" ज्ञानामृतेन तृप्तस्य कृतकृत्यस्य योगिनः ।
नैवास्ति किंचित्कर्तव्यमस्ति चेन्न स तत्त्ववित् ॥

ஞானாமிருதத்தினால் திருப்தியடைந்த கிருதகிருத்தியனாகிய யோகிக்குக் கர்த்தவ்யம் எதுவுமே யில்லை. உள்தெனின், அவன் தத்துவமுணர்ந்தவனல்லன்." என்று கூறுகின்றது.

இவ்வாறு வித்வத் ஸந்நியாச நிரூபணமென்னும்

## ஐந்தாம் பிரகரணம்

முடிந்தது.



## சமாப்தி மங்கலம்.

जीवन्मुक्तिविवेकेन तमो हार्दं निवारयन् ।
पुमर्थमखिलं देयाद्विद्यातीर्थमहेश्वरः ॥ १ ॥

வித்தியா தீர்த்த (குருவாகிய) மகேசுவரன்
ஜீவன் முக்தி விவேகத்தினல்
இருதயத்துள்ள இருளை நீக்கிப் புருஷார்த்த முழுவதையும்
தந்தருள்வாராக.

நூலாசிரியர் வாக்கல்லாதனவாகக் காணப்படுவனவாய்ச்
சில புஸ்தகங்களில் எழுதப்பட்டுள்ள
நான்கு சுலோகங்கள்.

भेदाभेदौ सपदि गलितौ पुण्यपापे विशीर्णे
मायामोहौ क्षयमधिगतौ नष्टसंदेहवृत्तिः ।
शब्दातीतं त्रिगुणरहितं प्राप्य तत्त्वावबोधं
निस्त्रैगुण्ये पथि विचरतां को विधिः को निषेधः ॥ १ ॥

तीर्थानि तोयपूर्णानि देवान्पाषाणमृन्मयान् ।
योगिनो न प्रपद्यन्ते आत्मज्ञानपरायणाः ॥ २ ॥

अग्निर्देवो द्विजातीनां मुनीनां हृदि दैवतम् ।

प्रतिमास्वल्पबुद्धीनां सर्वत्र विदितात्मनाम् ॥ ३ ॥

सर्वत्रावस्थितं शान्तं न प्रपद्ये जनार्दनम् ।

ज्ञानचक्षुर्विहीनत्वादन्धः सूर्यमिवोदितम् ॥ ४ ॥

பேதாபேதங்கள் உடனே கரைந்து, புண்ணிய பாவங்கள் நசித்து, மாயா மோகங்கள் க்ஷயமடைந்து, சந்தேக விருத்தி யொழிந்த வனாய், சப்தாதீதமும் திரிகுண ரஹிதமுமான தத்துவ ஞானத்தினை அடைந்து, முக்குண மின்றியதான முக்தி மார்க்கத்தில் நடப்பவனுக்கு விதி யாது? நிஷேதம் யாது? (க) ஆத்மஞான பராயணரான யோகிகள் நீர் நிறைந்த தீர்த்தங்களையும் கல்மய மண்மயமான தேவர்களையும் அடையார். (உ) இருபிறப்பாளருக்குத் தேவன் அக்கினி. முநிகட்கு இருதயத்தில் தெய்வமுளது. அற்ப புத்தியினருக்குப் பிரதிமை களிலுளது. ஆத்ம ஞானிகட்கு எங்குமுளது. (௩) உதயமாகிய சூரியனைக் குருடன் அறியாததுபோல எங்குமிருக்கும் சாந்தமான ஜனார்த்தனனை ஞான நேத்திர மின்றிய தன்மையால் அறியார் (௪.)

இவ்வாறு ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவிராஜகாசாரிய

ஸ்ரீ பாரதீ தீர்த்த பகவச் சிஷ்யரான

ஸ்ரீமத் வித்தியாரணிய குருவரராற்

செய்யப்பட்ட

## ஜீவன் முக்தி விவேகம்

முடிந்தது.



ஓம் தத் ஸத் பிரஹ்மணே நம:

வாழ்த்துப்பா.

---

வாழிய வெங்கு மாகி மன்னுறு பிரம வத்து
வாழிய வித்யா ரண்ய வரமுநி தாட்க ளென்றும்
வாழிய விந்நூ லோங்கி வாழிய விதனை யாய்வார்
வாழிய பிரம வித்து வரன்முத லாவார் செவ்வே.

சுபமஸ்து.



# கணேச கீதை

## சமஸ்கிருத சுலோகமும் தமிழுரையும்

---

சித்தி புத்தி யிரண்டையும் விக்நமின்றி தரக்கூடிய ஈசுவர சக்தி ஸ்ரீவிநாயக ரூபமாய் ஏற்பட்டுள்ளது என்பது இக்கீதையில் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. இக்காரணத்தால்தான் நாம் எந்த காரியத்தைத் துவக்கினும் விக்நேசுவரரை ஆராதித்துத்தான் பிறகு யாவும் நடத்திவருகிறோம். ஸ்ரீ பரமேசுவரனும் திருபுரசங்காராரம்பத்தில் நேர்ந்த விக்ன நிவாரணார்த்தம் கணேசனை ஆராதித்திருக்கிறார் ஆகையால் போகமோக்ஷங்களை விரும்புவோர் தமது விக்னமொழிந்து சுலபமாய் சித்திபெறுமாறு அக்கணேசரது திருமுகத்தாற் சொல்லப்பட்ட இக்கணேசகீதையினை இந்நூலிற் கூறப்பட்டுள்ள விதிப்படி படனஞ்செய்யவேண்டியது அத்தியாவசியமாம். இதன் படனத்தினாலேயே போகமோக்ஷங்களை யெளிதிற் பேரலா மென்பது நன்கு விளக்கிக்காட்டப்பட்டுள்ளது.

கிக்கிளேஸ் பேப்பரில் அடித்ததில் ஆராதனைக்கேற்ற படத்துடன் 308 பக்கங்களடங்கிய முழு கலிகா பைண்டு செய்யப்பட்ட புத்தகம் விலை ரூ. 2—0—0